# நாள் முழுவதும்





காலை
வேளையில்

# புத்துணர்ச்சி





பிற்பகலில்

# அளிக்க...





இரவில்




குளுமையான நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்

இரண்டு நேர்த்தியான இராஜ்சிக் தயாரிப்புகள்



ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ண நிலைகளிலும்
சருமத்தைப் பாதுகாக்கிறது.

HBP 10-50 TM

அதற்குச் சிறிதும் சந்தேகம்
கிடையாது...



அவர்
வெகு அழகாக
அணிந்து கொண்டிருப்பது

**பின்னி மில்**
**துணிகளே...**

வாங்குமிடம்...



**VENKATESH VASTRALAYA**
*Where buying is a pleasure.*

RETAIL SHOW ROOM : PHONE: 4688

**வெங்கடேஷ் வஸ்த்ராலயா**

2, தம்பு செட்டித் தெரு (போன்: 4688) மதராஸ்-1

GRANTS - MADRAS




# சிலவு குறைக்க டயர்... புதுப்பிக்கவும்

பத்து வருட நுண்ணிய அனுபவ முறையில் பஸ், கார் பழைய டயர்களை செப்பனிட்டு புதுப்பிக்கிறோம்.

முன்னணி இயந்திர முறையில், நாட்டின் ரஸ்தாக்களுக்கு உகந்த "ட்ரெட்" அமைத்து நீடித்த உழைப்பைக்கான பணியாற்றுகிறோம்.

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்.**

புதுக்கோட்டை

(ஓர் டி. வி. எஸ். ஸ்தாபனம்)

TVS Z

# இந்தியன் பாங்க் லிமிடெட்

ஸ்தாபிதம்  1907

*தலைமை ஆபீஸ் :*

"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்", வடக்கு பீச் ரோடு, சென்னை-1

*உள்ளூர் ஆபீஸ்கள் :*

ஆள்வார்பேட்டை - தேனாம்பேட்டை, சேத்துப்பட்டு
எஸ்பிளனேட், எழும்பூர், காந்திநகர், மவுண்ட் ரோடு
மயிலாப்பூர், புரசவாக்கம், பெரியமெட், ராயப்பேட்டை
ராயபுரம், சௌகார்பேட்டை, திருவல்லிக்கேணி
தியாகராயநகர், தாம்பரம் (*சுற்றுப்புறம்*)

தென் இந்தியாவில் எல்லா முக்கிய இடங்களிலும்
பம்பாயிலும், புது டில்லியிலும் கிளைகள் இருக்கின்றன

| | |
|---|---|
| அங்கீகாரம் பெற்ற மூலதனம் | ரூ. 1,00,00,000 |
| வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 57,80,000 |
| ரிசர்வ் & இதர நிதிகள் | ரூ. 76,00,000 |
| டெபாசிட்டுகள் (31-12-53) | ரூ. 21·85 கோடி |

*வெளி நாட்டு பிராஞ்சுகள் :*

பினங்கு, சிங்கப்பூர், கோலாலம்பூர்
மலாக்கா, கொழும்பு

*லண்டன் & நியூயார்க் ஏஜண்டுகள் :*

வெஸ்ட்மின்ஸ்டர் பாங்க் லிட்., லண்டன்
நேஷனல் சிட்டி பாங்க் ஆப் நியூயார்க்

சகலவிதமான பாங்கு அலுவல்களும் நடத்தப்படும்

**என். கோபால அய்யர்**
காரியதரிசி

# இனி மீண்டும் கிடைக்காது!




இப்பொழுதே வாங்கி ஆயிரக்கணக்கில் ரூபாயை மிச்சப்படுத்துங்கள்

பல விதங்களில் இயங்கும் 194" WB Ford சேஸிஸ்

ஸ்டாக்குகள் துரிதமாகக் குறைந்து வருகின்றன

## ஜார்ஜ் ஓக்ஸ் லிமிடெட்

தலைமை ஆபீஸ்: மதராஸ்

பிராஞ்சுகள்: பெங்களூர், பெஜவாடா, கோயமுத்தூர், மதுரை & உதகமண்டலம்

FORD DEALERS WITH SERVICE THROUGHOUT THE SOUTH

# தி மதருஸ் கார்ப்பரேஷன் உத்தியோகஸ்தர்கள் கோவாபரேடிவ் பாங்க் லிமிடெட்

நெம்பர் 5125

**ரிப்பன் பில்டிங்ஸ் - - மதருஸ் 3**




மேற்படி ஸ்தாபனம் அதன் அங்கத்தினர்களுக்கும், கார்ப்பொரேஷன் உத்தியோகஸ்தர்களுக்கும் கீழ் குறிப்பிட்டுள்ள சாமான்களையும், இதர வசதிகளையும் எளிதான முறையில் பெற உதவுகிறது.

டி. யு. ஸி. எஸ். மளிகை சாமான்கள், அயன்புரம் பால் சப்ளை, பெரம்பூர் அருந்ததியா தோல் உற்பத்தியாளர் கூட்டுறவு சங்கத்தின் சாமான்கள், மேட்டூர் மல், லாங்கிளாத் இதர மில் துணிகள், டாம்கோ பண்டங்கள், டி. ஐ. சைகிள்கள், ஏ. வி. தாமஸ் ரேடியோக்கள், டாப்லெட்ஸ் லிமிடெட் மருந்து சாமான்கள், சாதே இஞ்சினீரிங் ஓர்க்ஸாரின் ஸ்டெயின்லஸ் சாமான்கள்.

குருப் இன்ஷ்யூரன்ஸ் திட்டப்படி வான்கார்டு இன்ஷ்யூரன்ஸ் ஸ்தாபனம் மூலம் இன்ஷ்யூரன்ஸ் ஏற்பாடு செய்து கொடுக்கிறது.

சிட்டு பண்டும் நடத்துகிறது - வைத்திய வசதிகளும் அளித்து வருகிறது.

இசை, நாடகம், காலக்ஷேபங்கள் இலவசமாக ஏற்பாடு செய்து வருகிறது.

**சேவை செய்வதே இப் பாங்கியின் குறிக்கோள்**

# தி மதருஸ் கார்ப்பரேஷன் உத்தியோகஸ்தர்கள் கோவாபரேடிவ் பாங்க் லிமிடெட் - (No. 5125)

ரிப்பன் பில்டிங் - - மதருஸ் 3

## சீட்டு பண்டுகள்

ஸ்ரீ வி. எல். எத்திராஜ், பாரிஸ்டர் - அட் - லா அவர்கள் தமிழ் புத்தாண்டு தினத்தை ஒட்டின 14-4-54 புதன்கிழமை மாலை 5-30 மணிக்கு சீட்டு பண்டை துவக்கி வைப்பார்கள்,

ஸ்ரீ H. D. ராஜா M. P. தலைமை வகிப்பார்கள்

சிக்கனம் விஸ்வாசித்துக் கொள்ளுங்கள்

## முப்பதாவது வருஷக் கொண்டாட்ட வெளியீடுகள்

### மாதாந்திர (ஏல) சீட்டுகள்

25 மாதங்கள் - 25 மெம்பர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டு மதிப்பு | |
|---|---|---|---|
| A | 200 | 5,000 | A, B வகுப்புகளில் பாங்கு மெம்பர்கள் அல்லாதாரும் அங்கத்தினராகச் சேரலாம். |
| B | 100 | 2,500 | |
| C | 50 | 1,250 | C முதல் I வகுப்பு வரையில் மெது பாங்கியின் மெம்பர்கள்தான் சேரலாம். |
| D | 30 | 750 | |
| E | 25 | 625 | |
| F | 20 | 500 | |
| G | 15 | 375 | |
| H | 10 | 250 | |
| I | 5 | 125 | |

அதிகபக்ஷ கழிவுத் தொகை : அங்கத்தினர்கள் சீட்டுகளுக்கு 9 சத விகிதம் (C வகுப்பு முதல் I வகுப்பு வரையில்)
இதர சீட்டுகளுக்கு 20 சதவிகிதம் (A&B வகுப்பு)

அங்கத்தினர்கள் சீட்டுகளுக்கு 4½ சத விகிதமும் A & B வகுப்பு சீட்டுகளுக்கு 10 சத விகிதமும் பாங்கி எடுத்துக் கொள்கிறது.

சீட்டுகள் வழங்கும் உரிமை யாவும் பாங்கிக்கே உரியது.
நாலணா செலுத்தி சீட்டு விதிகளைப் பெற்றுக் கொள்ளலாம்.

> குறிப்பு : மேற்படி பாங்கியில் ரெகரிங் அகௌண்டும், காண்டு அகௌண்டும் ஆரம்பிக்கப்படும் நன்நாளை எதிர்பாருங்கள்

*(BY ORDER)*

1-4-1954

ஏ. நாராயணசாமி, B. A., A. I. I. B.
காரியதரிசி

அவர்களைப்

பற்றிய

சிற்சில

உண்மைகள்

டி. வி. எஸ். ஸ்தாபனங்களில் ஒன்றான சதர்ன் ரோட்வேஸ் லிமிடெட் இந்தியாவிலேயே மிகப் பெரிய தனிப் பெரும் ரஸ்தா போக்கு வரத்து கம்பெனி. பிரயாணிகள், சாமான்கள் ரஸ்தா போக்குவரத்திலும் முதன்மையான கம்பெனியாகும்.

தென்னிந்தியாவில் மற்ற ரஸ்தா போக்கு வரத்து ஸ்தாபனங்களது விகிதாசாரப்படி, டி. வி. எஸ்.ஸுக்குத்தான் அதிகமான புது வண்டிகள் இருக்கின்றன. டி.வி.எஸ். ஒன்றுதான் சாமான்கள் போக்கு வரத்து சர்விஸை குறித்த கால அட்டவணைப்படி நேரம் தவறாமல் நடத்தி வருகிறது.

அவர்கள் சர்விஸைப் பற்றிய சில புள்ளி விவரங்கள்:

**பஸ்கள் :**

| | |
|---|---|
| மொத்த பஸ்கள் | 305 |
| ஓடும் பஸ் மார்க்கங்கள் | 100 |
| மார்க்கங்களின் மொத்த மைலேஜு | 2,725 |
| ஆண்டு ஒன்றுக்கு பஸ் ஓடும் மைல்கள் | 130 லக்ஷம் |
| வருஷந்தோறும் பிரயாணம் செய்பவர்களின் எண்ணிக்கை | 350 லக்ஷம் |
| போக்குவரத்தின் விஸ்தீரணம் . . . | 15,146 சதுர மைல்கள் |
| பயன்படுத்திக் கொள்ளும் ஜனத்தொகை | 71 லக்ஷம் |
| உட்கார்ந்து போக சராசரி | 35 சீட்டுகள் |

**லாரிகள் :**

| | |
|---|---|
| மொத்த லாரிகள் | 38 |
| ஓடும் மார்க்கங்கள் | 21 |
| போக்குவரத்துப் பிரதேசம் : | சென்னைக்குத் தெற்கேயுள்ள எல்லா ஜில்லாக்களிலும், திருவாங்கூர்—கொச்சி, மைசூர் ராஜ்யங்களிலும் |
| மார்க்கங்களின் மைலேஜ் | 3,500 |
| வருஷந்தோறும் லாரி ஓடும் மைல்கள் | 22 லக்ஷம் |
| வருஷந்தோறும் ஏற்றிச் செல்லும் சாமான்களின் எடை . . . | 48,000 டன்கள் |

**பொதுவாக :**

| | |
|---|---|
| ஊழியர்களின் மொத்த எண்ணிக்கை | 2,150 |
| வருஷந்தோறும் பட்டுவாடா ஆகும் சம்பளமும் கூலியும் | ரூ 24 லக்ஷம் |

# சதர்ன் ரோட்வேஸ் லிமிடெட்

மதுரை

குறித்த நேர சேவை

# கல்கி
# பொருளடக்கம்

மலர் 13 1954 ஏப்ரல் 11 இதழ் 31





# நீடித்து உழைப்பதும், தீபற்றாததுமான

# கான்கிரீட்

## உபயோகித்து உங்கள் பண்ணைகளை நவீன முறையில் அமையுங்கள்



தொழுவம்



தண்ணீர்த் தொட்டி

எருக் குழி



தானியக் குதிர்



# ஏ. சி. சி. நீலகிரி பிராண்டு சிமெண்டு

என்று குறிப்பிடுங்கள்.

பிரிட்டிஷ் ஸ்டாண்டர்ட் ஸ்பெஸிபிகேஷன் நெ. 12 (1947), இந்தியன் ஸ்டாண்டர்ட் ஸ்பெஸிபிகேஷன் (1951) இவைகளுக்கு ஓரளவு மிஞ்சியே நிற்கும் ஏ. ஸி. ஸி. நீலகிரி பிராண்டு ஸிமெண்டு இப்பொழுது தென் இந்தியாவில் கிடைக்கிறது.

கான்கிரீட் கட்டட சம்பந்தமான எல்லா பிரச்னைகளுக்கும் தி கான்கிரீட் அஸோஸியேஷன் ஆப் இந்தியா 9, மௌண்ட் ரோடு, மதராஸ் அல்லது ஷுகர் கம்பெனி பில்டிங், பெங்களூர் என்ற விலாசத்திற்கு எழுதி தொழில்நுட்ப ஆலோசனைகளை இலவசமாகப் பெறுங்கள்.

உங்கள் தேவைகளுக்கு உடனே எழுதுங்கள். அருகாமையிலுள்ள ஸி. எம். ஐ. ஸ்டாகிஸ்டு அல்லது வியாபாரியிடமோ அல்லது நேராகவோ

தி
ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிட்.

9, மௌண்ட் ரோடு, மதராஸ். ● 4/12, ரேஸ் கோர்ஸ் ரோடு, கோயமுத்தூர் ● ஷுகர் கம்பெனி பில்டிங், பெங்களூர்.

SISTA'S-CMI-156-TAMIL

# WATER CLOCKS

## were all very well—






The THEMIS

Everbright Steel Rs. 162 · Rolled Gold Rs. 176
9-ct. Gold — Rs. 325 · 18-ct. Gold Rs. 405

*Accurate timing today depends on*

# WEST END WATCHES




*Write for FREE Catalogue*

WEST END WATCH CO. BOMBAY AND CALCUTTA

ஏப்ரல் 13 முதல்

திரையுலகிற்கு பலமுறை புதுவழி வகுத்த

ஏவி. எம். புரொடக்ஷன்ஸ்

தயாரித்த

சிவாஜி கணேசன்

பண்டரி பாய்

நடிக்கும்

# அந்த நாள்

எல்லா வகையிலும் ஒரு புதுமைச்சித்திரம்

AVM

புரொடக்ஷன்ஸ்

சென்னை வெலிங்டன்-பாரத்-உமா

மற்றும் தென்னாடெங்கும்

மலர் 13 கல்கி இதழ் 37

தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

# இரண்டு பொன் வருடங்கள்

பழந் தமிழகம் எத்தனையோ பொன்னாண்டுகளைக் கண்டிருக்கிறது; அறநெறி தவறாத ஆட்சி முறைகளைக் கண்டிருக்கிறது.

நம் காலத்தில் நாமும் அத்தகைய இரு பொன் வருடங்களைப் பார்க்கக் கொடுத்து வைத்திருந்தோம்.

1952-ம் ஆண்டு மார்ச்சு முதல் 1954-ம் ஆண்டு மார்ச்சு வரையில் இரண்டு ஆண்டுகள் தமிழகத்தின் தற்கால வரலாற்றில் நடுநிலை தவறாத நெறியுள்ள ஆட்சி நடந்த பொன் ஆண்டுகளாக விளங்கின.

ராஜாஜி முதன் மந்திரியா யிருந்து அரசாங்கத்தை நடத்தி வந்த இந்த இரண்டு ஆண்டுகளில் தமிழகம் எத்தனையோ இன்னல்களிலிருந்தும் கண்டங்களிலிருந்தும் தப்பியது; பன்னெடுங் காலம் நீடித்துப் பலன்தரக்கூடிய நலங்கள் பலவற்றை அடைந்தது.

* * * *

இம்முறை ராஜாஜி சென்னை இராஜ்யத்தின் முதன் மந்திரி பதவி ஏற்றபோது அதை நாம் விரும்பவில்லை. அப் பொறுப்பை அவர் ஏற்காமலிருந்தால் நல்லது என்று இரண்டு காரணங்களினால் எண்ணினோம்.

தமிழ் நாட்டின் செல்வங்களுக்குள்ளே ராஜாஜியின் ஆரோக்கியம் மிகச் சிறந்த செல்வம் என்பது அன்றும் இன்றும் நமது நம்பிக்கை.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு சென்னை இராஜ்யத்தில் ஏற்பட்டிருந்த சூழ்நிலையில் ராஜாஜி முதன் மந்திரி பதவி ஏற்றால், அவருடைய ஆரோக்கியத்துக்குப் பாதகம் விளையலாம் என்று அஞ்சினோம். — இது முதற் காரணம்.

அன்று நாம் அஞ்சியபடியே உண்மையில் நடந்து விட்டது பற்றிப் பெரிதும் வருந்துகிறோம்.

ராஜாஜி முதன் மந்திரி வேலை பார்ப்பது என்றால், அது மற்றவர்கள் பார்ப்பதுபோல் அன்று. காலை ஐந்து மணி முதல் இரவு பதினோரு மணி வரையில் அவர் இடைவிடாத வேலை செய்தாக வேண்டும்; செய்யாமல் அவரால் இருக்க முடியாது.

இரண்டு ஆண்டுகளும் ராஜாஜி அவ்வாறு உடல் நிலையை மறந்து வேலை செய்து வந்ததை மக்கள் பார்த்து வந்தார்கள்.

மோட்டார் வண்டியில் கடைசிச் சொட்டு பெட்ரோல் இருக்கும் வரையில் வண்டி ஓடுகிறது. "வண்டிதான் நன்றாய் ஓடுகிறதே?" என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். பெட்ரோலின் கடைசிச் சொட்டுத் தீர்ந்ததும் வண்டி அடியோடு நின்று விடுகிறது. அப்போதுதான், வண்டியை அதிகமாக ஓட்டுவதின் தவறை உணருகிறோம்.

ராஜாஜி இரண்டு வருஷம் சக்திக்கு மீறி உழைத்ததின் பலன் ஒரு நாள் திடீரென்று தெரிய வந்தது; படுத்த படுக்கையாகி விட்டார்.

காற்பங்கு வைத்திய சிகிச்சையினாலும் முக்காற்பங்கு மனோதிடத்தினாலும் மீண்டும் அவர் எழுந்து சட்ட சபைக்கும் ஒரு நாள் வந்து விடைபெறுவதற்கு முடிந்தது.

உத்தியோகப் பொறுப்பிலிருந்தும் அரசியல் தொல்லைகளிலிருந்தும் விலகிக்கொண்டபடியால், இனி ராஜாஜியின் ஆரோக்கியம் பாதுகாக்கப்படுமென்று எதிர்பார்க்கிறோம்.

நீண்ட காலம் ராஜாஜி பூரண உடல் நலத்துடன் திடமாக வாழ்ந்து வேறு பல துறைகளில் அவர் செய்யக் கூடிய சேவையின் பாக்கியத்தைப் பெறுவதற்கு இந்தப் பாரத நாடு கொடுத்து வைத்திருக்கும் என்று நம்புகிறோம்.

* * * *

ராஜாஜி முதன் மந்திரி பொறுப்பை ஏற்கக் கூடாது என்று நாம் கருதியதற்கு இரண்டாவது காரணம், "சென்னை இராஜ்யம் அடைந்திருக்கும் விபரீதமான நிலையில் ராஜாஜியினால்தான் என்ன நன்மை செய்துவிட முடியும்?" என்று நாம் எண்ணியதுதான்.

சென்னை இராஜ்ய சட்ட சபைக்குப் பற்பல நோக்கங்களுடன் வந்திருக்கும் எம். எல். ஏ. க்கள் ராஜாஜியின் நேர்மையான நிர்வாகத்தை நடக்க விட்டுக் கொண்டிருப்பார்களா என்று பெரிதும் ஐயமுற்றோம்.

நாம் எண்ணியதற்கு மாறாக, இரண்டு ஆண்டு காலத்தில் ராஜாஜியினால் மகத்தான பல நன்மைகளை இந்த இராஜ்யத்துக்குச் செய்ய முடிந்தது; இந்த நன்மைகளினால் பாரத நாடு முழுவதுமே பயன் அடைந்தது.

ராஜாஜி முதன் மந்திரி பொறுப்பு ஏற்றுக் கொண்ட பின்னர் செய்த முதற் பெருங் காரியம் தானியக் கண்ட்ரோலை எடுத்தது.

அரசியல் தலைவர் ஒருவர் தமது வாழ்நாளில் இத்தகைய ஒரு காரியத்தைச் செய்தாலே போதுமானது. அவருடைய அரசியல் சேவை பரிபூரணமாகி விட்டது என்று சொல்லலாம்.

1947-ம் ஆண்டில் இந்தியா அரசியல் சுதந்திரம் பெற்று விட்டது என்று சொல்லப்பட்டு வந்த போதிலும், 1952-ல் ராஜாஜி தானியக் கண்ட்ரோலை எடுத்த பிறகுதான் மக்கள் "உண்மையில் நாம் சுதந்திரம் பெற்று விட்டோம்" என்று உணரத் தொடங்கினர்கள்.

ராஜாஜி இந்த இராஜ்யத்தில் தானியக் கட்டுப்பாட்டை எடுத்த பிறகு, பாரத நாடு முழுவதிலும் அந்தக் கட்டுப்பாடு நீங்கியது.

மழை இல்லாமையால் நேர்ந்திருந்த பஞ்சத்தைக் காட்டிலும் தானியக் கட்டுப்பாட்டு விதிகளினால் அதிகார வர்க்கம் ஏற்படுத்தி வந்த பஞ்சம் மிகக் கொடுமையாக இருந்தது.

அதிகார வர்க்கம் ஏற்படுத்திய பஞ்சம் நீங்கிய பிறகு தானியப் பஞ்சமும் நீங்கலாயிற்று.

தற்போது பாரத நாட்டில் வேறு பல "இல்லைகள்" நிலவி வந்த போதிலும், "அரிசி இல்லை; தானியம் இல்லை" என்ற பேச்சு மட்டும் எங்கும் கேட்கப் படுவதில்லை.

1952-ம் ஆண்டில் தேசம் இருந்த நிலையில் ராஜாஜியைத் தவிர வேறு யாராலும் தானியக் கட்டுப்பாட்டைத் துணிந்து எடுத்திருக்க முடியாது என்பது மக்களின் ஒருமுகமான வாக்கு.

ராஜாஜியை எப்பாடு பட்டாவது முதன் மந்திரி பொறுப்பு ஏற்கச் செய்ய வேண்டுமென்று அந்தக் காலத்தில் பெருமுயற்சி செய்தவர்கள், தங்கள் முயற்சியின் வெற்றியால் விளைந்த இந்த ஒரு பலனை எண்ணியே என்றென்றைக்கும் மன நிறைவு கொள்ளலாம்.

இன்னும் எத்தனையோ அரும்பெரும் சாதனைகளை ராஜாஜியின் ஆட்சி காலத்தில் கண்டோம். ஆறு வருஷத்துத் தொடர்ந்த பஞ்சத்தினாலும் கைத்தறித் தொழில் அடியோடு நசித்துப் போனதினாலும் லட்சக் கணக்கான மக்கள் நிராதரவாகி மடிந்து போகும் நிலையில் இருந்தார்கள். மத்திய சர்க்காருடன் போராடி, கோடிக்கணக்கான ரூபாய் பஞ்ச நிவாரண வேலைகளுக்காகப் பெற்று, பஞ்சத்தினால் ஓர் உயிரும் மடியாமல் காப்பாற்றினர்

கைத்தறி நெசவுக்கு ஓரளவு பாதுகாப்புப் பெற்றுக் கொடுத்து, இடைவிடாத தீவிரப் பிரசாரம் செய்து மீண்டும் அத்தொழில் புத்துயிர் பெறும்படி செய்தார்.

சென்னை இராஜ்ய சர்க்காரின் பொருளாதார நிலைமை ராஜாஜி பொறுப்பை ஏற்றுக் கொண்ட போது மிக மிக மோசமான நிலைமையி லிருந்தது.

இரண்டு முறை ராஜாஜி பொது ஜனங்களிடையே கடன் எழுப்பினர். இரண்டாம் முறை ஐந்து கோடி ரூபாய் கேட்டதற்கு ஒன்பது கோடி ரூபாய் கிடைத்தது. அரசாங்கங்களின் பொருளாதார வரலாற்றிலேயே இம்மாதிரி அதிசயம் நடந்தது கிடையாது.

இவ்வாறு இராஜ்யத்தின் பொருளாதாரத்தைச் சீர்திருத்தியபடியால், மத்திய அரசாங்கத்துடன் மன்றாடி, அமராவதித் திட்டம், வைகைத் திட்டம் முதலிய பல பொதுநலத் திட்டங்களைப் புதிதாகச் சேர்த்துக் கொள்ளச் செய்வதில் வெற்றி அடைந்தார்.

தமிழ் நாட்டின் நெற்களஞ்சியமாகிய தஞ்சை ஜில்லாவில், மிராசுதார்களுக்கும் குடியானவர்களுக்கும் வெட்டுப் பழி குத்துப் பழியாக இருந்த நிலைமையில் விவசாயப் பாதுகாப்புச் சட்டத்தைக் கொண்டு வந்து, இரு சாராரும் உற்சாகமாக ஏற்றுக் கொள்ளும்படி செய்தார். நெற் களஞ்சியம் தப்பிப் பிழைத்தது.

ஆந்திரப் பிரிவினைக் கட்டத்தில் ராஜாஜி முதன் மந்திரியாயிருந்திரா விட்டால், சென்னை நகர் தமிழ் நாட்டைச் சேர்ந்ததாகி யிராது என்பதை உணராதவர் யாருமில்லை.

** ** **

ராஜாஜி முதன் மந்திரியா யிருந்த முதல் ஆண்டில் செய்த அளவு நன்மைகளை இரண்டாம் ஆண்டில் செய்ய முடியாமற் போயிற்று.

இதற்குக் காரணம், நாம் ஆரம்பத்தில் ஐயமுற்றபடி, சட்ட சபை அங்கத்தினர் தொல்லை கொடுக்க ஆரம்பித்ததுதான்.

ஆந்திர ராஜ்யம் பிரியப்போவது நிச்சயமானவுடன் இவர்களில் பலரும் தங்கள் உண்மை சொருபத்தைக் காட்ட ஆரம்பித்தார்கள்.

"நாம் என்ன வெல்லாமோ ஆசைப் பட்டுக் கொண்டு சட்டசபைக்கு வந்திருக்க, இந்தக் கிழவர் ஏன் இன்னமும் வழி மறைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார்!" என்று கேட்டார்கள்.

இவர்களுடைய தொல்லையைச் சமாளிப்பதிலேயே ராஜாஜியின் காலத்தில் ஒரு பெரும் பகுதி செல்ல வேண்டியதாயிற்று.

இரண்டாம் ஆண்டில் இந்த எம். எல். ஏ.க்கள் இன்னும் சிறிது பொறுமையைக் கடைப் பிடித்திருந்தார்களானால், ஆறு மாதத்துக்கு முன்பே பூரண ஆரோக்கியத்துடன் ராஜாஜி விலகிக் கொண்டிருப்பார்.

காங்கிரஸ் எம். எல். ஏ. க்கள் கையெழுத்துப் படலத்தை ஆரம்பித்த படியால், ராஜாஜி அச்சமயம் விலகிக் கொள்வதைப் பற்றிய பேச்சை எடுக்க முடியாமற் போயிற்று.

ஒவ்வொரு தடவையும் சுயநலங் கொண்ட எம். எல் ஏ. க்கள் நிர்ப்பந்தித்து மந்திரி சபை மாறுகிறது என்று ஏற்பட்டால், ஜனநாயகமே பாழாய்ப் போய்விடுமல்லவா! இந்த அம்சத்தைக் காங்கிரஸ் மேலிடத்தாரும் வற்புறுத்தியபடியால், ராஜாஜி முதலில் உத்தேசித்திருந்ததை விட மேலும் சில காலம் நீடித்துப் பொறுப்பு வகிக்க வேண்டியதாயிற்று.

இப்படி நிர்ப்பந்தமாக உத்தியோகப் பொறுப்பு நீடித்த காலத்தில் அவருடைய ஆரோக்கியமும் சீர்குலைந்தது.

ஏதோ இந்தமட்டில் கையெழுத்துப் படலங்கள் ஒரு மாதிரி ஓய்ந்து, ராஜாஜி நிம்மதியாகப் பொறுப்பிலிருந்து விலகிக் கொள்ள முடிந்ததைக் குறித்துப் பெரிதும் திருப்தி அடைகிறோம்.

** ** **

ராஜாஜியின் ஆட்சி நடந்த இரண்டு பொன் வருடங்களில் அவர் தமிழகத்தின் நன்மைக்கும் மேன்மைக்கும் நிகழ்த்திய சாதனைகள் எல்லாவற்றிலும் மிக முக்கியமானது ஒன்று உண்டு.

அதை அவருடைய ஆட்சிக் காலம் முழுவதும் அவரை எதிர்த்தவர்களும் ஒப்புக் கொள்கிறார்கள்.

"இரண்டு வருடகாலம் முதன் மந்திரி ஸ்தானம் தூய்மையாக இருந்தது; அரசாங்க நிர்வாகம் நேர்மை தவறாமல் நடை பெற்றது" என்று அவருடைய திட்டங்களை மூர்த்தண்யமாக எதிர்த்தவர்களே சொல்லுகிறார்கள்.

கட்சியைச் சேர்ந்தவன் என்பதற்காக யாருக்கும் பட்சபாதம் காட்டப்படவில்லை. பெர்மிட்டுகளினால் யாரும் சுயலாபத்தைச் சாதித்துக்கொள்ள முடியவில்லை. அரசாங்க அதிகாரிகளின் காரியங்களில் அனாவசியமான குறுக்கீடுகள் நடக்கவில்லை.

ஒரு மந்திரி சபை வகுக்கும் திட்டங்களில் சில பூரண வெற்றி அடையலாம்; சில அரைகுறையான வெற்றி யடையலாம்; சில வெற்றி பெறாமலும் போகலாம்.

வேலைத் திட்டங்கள் வெற்றி பெறுவது நாட்டின் சூழ்நிலையையும் மற்றும் பல்வேறு சந்தர்ப்பங்களையும் பொறுத்தது.

ஆனால் "நேர்மையான நிர்வாகம் நடந்தது" என்று பெயர் வாங்குவது மந்திரி பதவி வகிப்பவர்களின் திடசித்தத்தை மட்டுமே பொறுத்தது.

இனி, முதன் மந்திரி பதவிக்கு யார் வந்த போதிலும், அரசாங்க நிர்வாகப் பொறுப்பை யார் வகித்த போதிலும், அவர்கள் இந்த விஷயத்தை மறந்துவிட முடியாது.

அவர்கள் மறந்து விடுவதற்குப் பொது மக்கள் அநுமதிக்க மாட்டார்கள்.

அரசாங்க பதவி வகிப்பவர்கள் நேர்மை தவறி நடப்பதை இனி ஒரு நாளும் பொதுமக்கள் பொறுத்துக்கொள்ள மாட்டார்கள்.

கட்சியைச் சேர்ந்தவன் என்பதற்காகப் பட்சபாதம் காட்டுவதைப் பொறுக்க மாட்டார்கள்.

சட்ட சபை அங்கத்தினர்கள் தங்கள் இஷ்டம் போல் அரசாங்க அதிகாரிகளை ஆட்டி வைப்பதற்கு இடம் கொடுக்க மாட்டார்கள்.

யார் அரசாங்க பதவிக்கு வந்தாலும் நடுநிலைமை தவறாத நேர்மையான அரசாட்சி நடக்க வேண்டும் என்று அறிவாளிகளாகிய தமிழ் மக்கள் எதிர்பார்ப்பார்கள். இது விஷயத்தில் மிக மிக விழிப்புடன் இருப்பார்கள்.

தமிழ் மக்களின் பிரதிநிதிகளாக அடுத்தபடி ஆட்சி பீடங்களுக்கு வருகிறவர்கள் இதை நன்கு மனதில் பதித்து வைத்துக் கொண்டு பொது மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகும் முறையில் நடந்து கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

# இந்தியாவின் ஆகாச அரண்!

சில தினங்களுக்கு முன் புது டில்லிக்கு அருகில் நடந்த விமானப் போரைப் பற்றி எல்லோரும் அறிந்திருக்கலாம். அந்தப் போரில் இந்திய விமானப் படையைச் சேர்ந்த நூறு விமானங்களுக்கு மேல் கலந்து கொண்டன வென்றால், அவை நாலாயிரத்து ஐந்நூறு பவுண்டு வெடிகுண்டுகளை வீசின வென்றால், போரின் 'உக்ர'த்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை!

அந்த விமானங்களில் சில தீயையும் புகையையும் கக்கிக் கொண்டு ஆகாயத்தை அல்லோல கல்லோலப் படுத்தின. சில பீரங்கிகளால் குறி தவறாமல் சுட்டன. மற்றும் சில மணிக்கு ஆயிரத்து இருநூறு மைல் வேகத்தில் வான வீதியைக் கிழித்துக் கொண்டு சென்றன. அவற்றில் ஒரு விமானம், கழுகு ஆட்டுக் குட்டியைத் தூக்கிச் செல்லுவது போல் ஜீப் மோட்டாரைத் தன் காலில் தூக்கிக் கொண்டு சென்றது. இந்தக் காட்சிகளை யெல்லாம் நேரில் கண்ட சற்றேறக் குறைய லட்சம் ஜனங்களும் ஆகாயத்தைப் பார்த்த வண்ணம் அதிசயத்தில் ஆழ்ந்தார்கள்.

இந்த வேடிக்கைகள் எல்லாம் இந்திய விமானப் படையின் இருபத்தோராவது ஜெயந்தி வைபவத்தை முன்னிட்டுப் புது டில்லிக்கு அருகில் நிகழ்ந்தன. மேற்படி படையைச் சேர்ந்த விமானங்கள் உண்மையிலேயே வெடிமருந்துகளை உபயோகித்ததால் அது பகட்டு யுத்தமாக ஜனங்களுக்குத் தோன்றவில்லை. அந்த விமானங்கள் அணி வகுத்துச் சென்று லட்சியஸ் தானங்கள் மீது பீரங்கி மாரியும் குண்டு மாரியும் பொழிந்தபோது, பூகம்பம் ஏற்பட்டதுபோல் தோன்றியதாம். எனினும் சிறிது தூரத்திலிருந்த ஜனங்களுக்கு அதனால் எவ்விதச் சேதமும் ஏற்படவில்லை. அதிலிருந்து நமது விமானப் படையின் குறிதவறாத லட்சியமும் திறமையும் வெளியாகிறது அல்லவா!

* * *

ஜெர்மனியில் அடால்பு ஹிட்லர் அதிகாரத்துக்கு வந்த பிறகு, 1933-ம் ஆண்டில் தான் இந்திய விமானப் படை நிறுவப் பட்டது. இரண்டாவது மகாயுத்தம் ஆரம்பமான போது இ. வி. படை சிருஷ்டிக்கப்பட்டு ஆறு ஆண்டுகளே ஆகி யிருந்தன. அப்படி யிருந்தும் இந்திய விமானிகள் ஜெர்மன் நகரங்கள் மீது வெடி குண்டுகளை வீசி வெற்றியுடன் திரும்பினர். ஜெர்மன் கப்பல்களையும் மூழ்கடித்தனர். பர்மா போர் முனையிலும் அவர்கள் பங்கு எடுத்துக் கொண்டு புகழ் பெற்றனர்.

ஆறு ஆண்டுகளுக்கு முன் காஷ்மீர் மீது பாகிஸ்தானியர்கள் அக்கிரமமாகப் படையெடுத்த போது அவர்களை விரட்டி வெற்றிக் கொடி நாட்டுவதற்கு இ. வி. படையினர் பெரிதும் உதவியாக இருந்தனர். ஹைதராபாத் மீது இந்திய சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொண்டபோது மேற்படி படையினர் பக்க பலமாக இருந்து தங்கள் கடமையை ஆச்சரியகரமாக நிறைவேற்றினார்கள்.

இ. வி. படையினர் போர் முனையில் மாத்திரமல்ல, சமாதான காலத்திலும் பாரத நாட்டுக்கு மகத்தான தொண்டு புரிந்துள்ளனர்.

அவர்கள் மனிதர் செல்ல முடியாத பிரதேசங்களை, விமானங்களில் சென்று ஆராய்ச்சி செய்து வந்தார்கள்; வெட்டுக் கிளிகளின் படை யெடுப்பைத் தடுத்துப் பயிர்களுக்குச் சேதம் ஏற்படாமல் காப்பாற்றினார்கள்; விமானங்களின் மூலம் பாலைவனப் பிரதேசங்களில் விதை விதைத்து அவை சுபிட்சம் அடையச் செய்தார்கள்; மேற்குப் பாகிஸ்தானில் ஹிந்துக்களுக்குப் பேராபத்து ஏற்பட்ட போது அங்கிருந்து பதினாயிரக் கணக்கான அகதிகளைத் தாமதமின்றிப் பாரத நாட்டில் கொண்டு வந்து சேர்த்தார்கள்; பூகம்பத்தினாலும் வெள்ளத்தினாலும் கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளான லட்சோப லட்சம் ஜனங்கள் உய்வதற்கு உணவு முதலிய சாதனங்களைக் கொண்டு சென்று அவர்களைக் காப்பாற்றினார்கள்.

இவ்வாறாக, சமாதான காலத்திலும் யுத்த காலத்திலும் பாரத நாட்டுக்குத் தொண்டு புரியும்

பேராற்றல் வாய்ந்துள்ள இந்திய விமானப் படையின் இருபத்தோராவது ஆண்டு விழா ஏப்ரல் 1-ம் தேதி புது டில்லியில் விமரிசையாக நடைபெற்றது. இந்திய விமானப் படையின் பிரதம தளபதியாக நியமிக்கப் பட்ட முதல் இந்தியர் ஏர் மார்ஷல் எஸ். முகர்ஜி அதே தினத்தில் பதவி யேற்றதால், அவ்வைபவம் இரட்டிப்புக் குதூகலத்துடன் கொண்டாடப் பட்டது.

உலகில் உள்ள வல்லரசுகளின் விமானப் படையுடன் ஒப்பிடும் போது நமது விமானப் படை அளவில் சிறியதுதான். எனினும் இந்தக் குறுகிய காலத்துக்குள் பல போர்முனைகளிலும் தனது வீரப் பிரதாபத்தை நிலை நாட்டியுள்ள நமது விமானப் படை அளவிலும், உருவிலும், மேன் மேலும் பெருகி, சுதந்திர இந்தியாவின் ஆகாச அரணாக விளங்குமாக!

# இருவரையும் மிஞ்சி விட்டார்!

இலங்கையின் வளத்துக்காகத் தலை முறை தலைமுறையாய் உழைத்த இந்தியர்களை, இலங்கையைத் தாயகமாகக் கொண்ட இந்தியர்களை, அந்த நாட்டிலிருந்து விரட்டும் கைங்கர்யத்துக்கு இலங்கைப் பிரதமராக இருந்த ஸ்ரீ ஸ்டீபன் சேனநாயகா அஸ்திவாரம் அமைத்தார். அவருக்குப் பிறகு பிரதமர் பதவியை வகித்த ஸ்ரீ டட்லி சேனநாயகா அவ்விஷயத்தில் இன்னும் ஒரு அடி மேலே பாய்ந்தார். அந்தக் கைங்கர்யத்தில் தந்தைக்குத் தாம் சளைத்தவர் அல்ல என்பதை நிரூபணம் செய்தார். இப்போது பிரதமராக இருக்கும் ஸர் ஜான் கொத்தலாவலை அவ்விருவரையும் மிஞ்சி விட்டார்.

இலங்கைப் பிரஜா உரிமை பெற முடியாத இந்தியர்கள் இலங்கையில் அவரவர் ஈடுபட்டுள்ள தொழில்களில் தொடர்ந்து இருந்து வருவதை இலங்கை சர்க்கார் தடுக்க மாட்டார்கள் என்று ஸ்ரீ ஸ்டீபன் சேனநாயகா நேருஜிக்கு உறுதி கூறியிருந்தார். அதை அனுசரித்து அப்போது இலங்கைக் குடியேற்றச் சட்டத்திலும் ஒரு விதி சேர்க்கப்பட்டது. இலங்கை இந்தியர்களுக்கு மேற்படி விதிதான் ஓரளவு பாதுகாப்பாக இருந்து வந்தது. ஆனால் இப்போது அதற்கும் ஆபத்து ஏற்பட்டிருக்கிறது.

சமீப காலத்தில் டில்லியிலே கையெழுத்தான இலங்கை-இந்தியா ஒப்பந்தத்தை அமுல் நடத்துவதற்காக இலங்கை மந்திரிகள் அடங்கிய ஒரு கமிட்டி நியமிக்கப் பட்டிருக்கிறது. அக் கமிட்டியார் தங்கள் அலுவல்களை முடிக்கும் வரையில், இந்தியர்களுக்கு வழங்கப் பட்டுள்ள வாச'பர்மிட்'களைப் புதுப்பிக்கக் கூடாது என்று இலங்கை சர்க்கார் திடீரென்று உத்தரவுபிறப் பித்திருக்கிறார்கள்.

இலங்கைப் பிரஜா உரிமை பெறுவதற்காகச் சுமார் எட்டு லட்சம் இந்தியர்களுக்கு மேல் சர்க்காருக்கு மனுக் கொடுத்திருக்கிறார்கள். அந்த மனுக்கள் பைசலாகும் வரையில் அவர்கள் இந்தியாவுக்குச் செல்லவோ, இலங்கைக்குத் திரும்பி வரவோ தடை ஏதும் இராமல் இருப்பதற்காக அவர்களுக்கு இலங்கை சர்க்கார் அடையாளச் சீட்டுகள் வழங்கி யிருந்தனர். ஆனால், இந்தச் சீட்டுகள் வழங்குவதையும் இப்போது இலங்கை சர்க்கார் திடீரென்று நிறுத்தியிருக்கிறார்கள். எனவே, பிரஜா உரிமைக்காக மனுச் செய்து கொண்டுள்ள இந்தியர்கள் இனி எக்காரணத்துக்காகவும் இந்தியாவுக்கு வர முடியாது. அப்படி வந்தால் அவர்கள் இலங்கைப் பிரஜா உரிமையைக் கைவிட வேண்டியதுதான். அதாவது இலங்கைப் பிரஜா உரிமையை இந்தியர்கள் இழக்கும்படி செய்து, அவர்களை வற்புறுத்தி இந்தியாவுக்கு விரட்டுவதற்கு மேற்படி திடீர் உத்தரவுகள் இலங்கை சர்க்காரின் நியாயமற்ற, மறைமுகமான நடவடிக்கை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

பிரஜா உரிமை பெற வேண்டிய இந்தியர்களின் தொகையைப் பற்றி டில்லி ஒப்பந்தத்தில் நிர்ணயமாக எதுவும் குறிப்பிடப்படவில்லை. எனவே, இத்தனை இந்தியர்களுக்குத்தான் பிரஜா உரிமை அளிக்க வேண்டும் என்பது தங்களுடைய இஷ்டத்தைப் பொறுத்தது என்பது இலங்கை மந்திரிகளின் கருத்து என்று தெரிகிறது.

பிரஜா உரிமை பெற வேண்டிய இந்தியர்களின் தொகையைப் பற்றி டில்லி ஒப்பந்தம் எதுவும் கூறவில்லை என்பது உண்மையே. ஆனால், மேற்படி ஒப்பந்தத்தில் இலங்கை இந்தியர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் வெகு முக்கியமான ஷரத்து சேர்க்கப்பட்டிருப்பதை இலங்கை சர்க்கார் கவனிக்க வேண்டும். இலங்கை இந்தியர்களின் இஷ்டத்துக்கு விரோதமாக அவர்களை இந்தியாவுக்குச் செல்லும்படி நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ நிர்ப்பந்திக்கக் கூடாது என்று ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனவே, இப்போது இலங்கை சர்க்கார் பிறப்பித்துள்ள திடீர் உத்தரவுகள் ஒப்பந்தத்தின் வாசகத்துக்கும் நோக்கத்துக்கும் முற்றிலும் முரணானவை என்பதை யாரும் மறுக்க முடியாது.

## புத்தாண்டு வாழ்த்து

★ ★ ★

புதிய ஜய வருஷம் நமது நேயர்கள் அனைவருக்கும் மூன்றாவது பொன் வருடமாகத் திகழ வேண்டும் என்றும் இவ்வருஷத்தில் நம் நேயர்களுக்கும், அவர்கள் குடும்பத்தினருக்கும் சகல நலன்களும் விளைய வேண்டும் என்றும் இறைவனைப் பிரார்த்தித்து வாழ்த்துகிறோம்.

## கவலை வேண்டாம்!

ஓ கவலைப் படாதீர்கள்!!
பத்திரமாகப் பாதுகாக்கவே
நான் இதைச் சாப்பிடுகிறேன்!
இலங்கை இந்தியா ஒப்பந்தம்
இலங்கை - சர்க்கார்

## தேர்தல் வெடி!

கிழக்கு வங்காளத் தேர்தலுக்கு முன்னால்.
பாகிஸ்தான் சர்க்கார்

தேர்தலுக்குப் பிறகு...
பாகிஸ்தான் சர்க்கார்

## ஒன்று சேர்ந்தன !

பாகிஸ்தானும் துருக்கியும் அமெரிக்காவின் தூண்டுதலினால், தங்களுக்குள் பாதுகாப்பு ஒப்பந்தம் செய்து கொண்டன.

## விடைபெற்றார் !

# தமிழ் தந்த முனிவர்

தமிழுக்கும் அகஸ்திய முனிவருக்கும் உள்ள தொடர்பு பரம்பொருளுக்கும் பிரபஞ்சத்துக்கும் உள்ள தொடர்பைப் போல் ஆதி அந்தமற்றது.

தமிழ் நூல்களில் மிக மிக ஆதியானது "அகத்தியம்" என்னும் நூல்தான்.

"தாழ்புனை சடைக் கடவுள்
தந்த தமிழ் தந்தான்!"

என்றும்,

"நீண்ட தமிழால் உலகை
நேமியின் அளந்தான்!"

என்றும் அகஸ்தியரைக் கம்பர் போற்றுகிறார்.

பழந் தமிழர்கள் கடல் கடந்து எந்தெந்த நாடுகளுக்குச் சென்றிருந்தார்களோ, அங்கேயெல்லாம் அகஸ்திய முனிவரையும் உடன் அழைத்துச் சென்றார்கள்.

சிங்களம், புட்பகம், சாவகம் ஆகிய தீவுகள் பலவற்றிலும் இன்றைக்கும் அகத்திய முனிவரின் விக்கிரகங்கள் காணப்படுகின்றன.

* * *

அகஸ்திய முனிவரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் இதிகாச புராணங்களில் பல இடங்களில் காணப்படுகின்றன. அவற்றை யெல்லாம் தொகுத்துச் சித்திரக் காட்சிகளாக இந்தப் புத்தாண்டு மலரில் தந்திருக்கிறோம்.

அகஸ்தியர் சித்திர மடலின் முதற் பக்கத்தில் தமிழகத்திலும் பிற நாடுகளிலும் காணப்படும் அகஸ்தியரின் சிலை வடிவம் காட்சி தருகிறது. பின்னணியில்,

"குண்டிகையினிற் பொருவில்
காவிரி கொணர்ந்தான்!"

என்ற வரலாற்றின் பிரகாரம், அம்மாமுனிவரின் கமண்டலம் கவிழ்ந்து, அதிலிருந்து தெய்வப் பொன்னி நதி பெருக்கெடுக்கிறது.

அடுத்த மூன்று பக்கங்களில் காணப்படும் சித்திரங்கள் பின்வரும் இதிகாச - புராண வரலாறுகளைக் குறிக்கின்றன :—

கைலயங்கிரியில் பரமசிவனுக்கும் பார்வதிக்கும் திருமணம் நடந்தபோது தேவர்கள், முனிவர்கள், மனிதர்கள் அனைவரும் அந்தத் திருமணத்தைப் பார்ப்பதற்காக அங்கு வந்து விட்டார்கள். இதனால் பூமி நிலை குலைந்து வடதிசை தாழ்ந்து தென்திசை உயர்ந்து தடுமாற்றம் உண்டாகி விட்டது. பூமியைப் பழைய சம நிலைக்குக் கொண்டு வரும் பொருட்டுச் சிவபெருமான் அகஸ்தியரை அழைத்து "முனிவரே! நீர் பொதிகை மலைக்குச் செல்லுவீராக! அப்போதுதான் பூமி சமநிலை அடையும்! என் திருமணம் தடங்கலின்றி நடக்கும்" என்று அருளினார்.

அகஸ்தியர் அதற்கு இசைந்து புறப்படும் போது, "ஐயனே! தங்களுடைய திருமண வைபவத்தைப் பாராமல் போகிறேனே! அதற்கு ஈடாக என்ன பரிசு தரப் போகிறீர்கள்!" என்று கேட்டார். "இதோ தமிழைத் தருகிறேன்! வேறெதிலும் காணாத ஆனந்தத்தைத் தமிழில் காண்பீர்!" என்றார் இறைவன்.

அகஸ்தியர் தெற்கு நோக்கிச் சென்றபோது விந்தியமலை அகந்தை கொண்டு உயர்ந்து நின்று வழிமறித்தது. அகஸ்தியர் அதன்மேலேறி நின்று ஒரு முறை அழுத்தியதும் மலையே அமுங்கிப் போய் விட்டது. இந்த நிகழ்ச்சியை,

"நாகமது நாகமுற நாகமென நின்றான்!"

என்றார் கம்பநாடர். நாகம் என்னும் சொல்லுக்கு மலை, நாகலோகமாகிய பாதாளம், யானை என்னும் மூன்று பொருள்கள் உண்டு. அந்த மூன்று பொருள்களையும் ஒரே வரியில் அமைத்துக் கம்பர் பாடி அருளினார்.

விந்திய மலையைக் கடந்து தென்திசை நோக்கிச் சென்று பொதிகை மலையைக் கண்டு அதன் மேலேறி அமர்ந்து தவத்திலும் தமிழாராய்ச்சியிலும் குறு முனிவர் ஈடுபட்டிருந்தார்.

* * *

அகஸ்தியருடைய தந்தை ஒரு நாள் அவருடைய கனவிலே தோன்றி "நீ இல்லறத்தை மேற்கொண்டு புத்திரப்பேறு அடையாவிட்டால் நம்முடைய குலம் அழிந்து விடும்!" என்று சொல்லிப் போனார்.

அகஸ்தியர் அதன்பேரில் கலியாணம் செய்து கொள்ள விரும்பினார். உலகில் அப்போதிருந்த கன்னிப் பெண்களை யெல்லாம் ஞான திருஷ்டியினால் பார்த்தார். எல்லாப் பெண்களும் குறைகள் உள்ளவர்களாகவே இருந்தார்கள்.

தாம் மணந்து கொள்ளக்கூடிய குறையில்லாத பெண் பிறப்பதற்காக அகஸ்தியர் பல ஆண்டுகள் தவம் புரிந்தார். அதன் பலனாக ஒரு ராஜாவுக்கும் ராணிக்கும் பெண் குழந்தை ஒன்று பிறந்தது. அது லோபம் (குற்றம்) எதுவும் இல்லாத குழந்தையா யிருந்தபடியால், 'லோபா முத்திரை' என்று அதற்குப் பெயரிட்டார்கள்.

அந்தப் பெண்ணுக்கு வயது வந்தபோது அகஸ்தியர் அரசனிடம் சென்று இராஜ குமாரியைத் தமக்கு மணம் செய்து கொடுக்கும்படி கேட்டார்.

அரசன் "நீர் குள்ளர்; வறியவர்; வனத்தில் வசிப்பவர். உமக்கு எப்படி என் புதல்வியைக் கொடுப்பேன்!" என்றான்.

அப்போது லோபா முத்திரை "தந்தையே! இந்த முனிவர் கோபக்காரர் என்றும், மிகத் தபோ வலிமை வாய்ந்தவர் என்றும் கேள்வியுற்றிருக்கிறேன். ஒரு சமயம் நகுஷ மகாராஜனை இவர் மலைப்பாம்பு உருவம் பெறும்படி சபித்து விட்டாராம். இன்னொரு சமயம் கடலையே குடித்து விட்டுத் திரும்பத் தேவர்கள் கேட்டுக் கொண்டபடி வெளியே உமிழ்ந்தாராம். இவர் நம்மையும் சபித்து விடப் போகிறார். என்னை இவருக்கே மணம் செய்து கொடுத்து விடுங்கள். என் விதியின்படி ஆகட்டும்!" என்றாள்.

அகஸ்தியர் லோபா முத்திரையை அழைத்துக்கொண்டு பொதிகை மலைக்குப் போனார். பன்னிரண்டு வருஷம் இருவரும் தவ வாழ்க்கை நடத்தினார்கள். பின்னர் அவள் இல்லறத்துக்குத் தகுதியாகி விட்டாள் என்று அகஸ்தியர் அறிந்து தமது கருத்தை வெளியிட்டார். "முனிவரே! நான் அரசனின் குமாரி. இல்லறம் நடத்துவது என்றால், அரண்மனையும் ஆடை ஆபரணங்களும் தங்கக் கட்டிலும் பஞ்சணை மெத்தைகளும் இதர சுக போகப் பொருள்களும் எனக்கு வேண்டும்! இல்லாவிடில் உங்கள் விருப்பத்துக்கு ஒருப்படேன்!" என்றாள்.

"காட்டில் வாழும் முனிவனாகிய நான், நீ கேட்கும் சுக போகப் பொருள்களுக்கு எங்கே போவேன்!" என்றார் அகஸ்தியர்.

"என்னை மணந்து கொண்டபோது அதைப் பற்றித் தாங்கள் யோசித்திருக்க வேண்டும்!" என்றாள் லோபாமுத்திரை.

அகஸ்தியர் பல தேசத்து அரசர்களிடம் சென்றார். லோபாமுத்திரை கேட்ட பொருள்களைக் கேட்டார். அவர்கள் "இவ்வளவு பொருள்களையும் உமக்குத் தருவதானால் ஜனங்களுக்கு நாங்கள் புதிய வரிகள் போட்டு வசூலிக்க வேண்டும்!" என்றார்கள். "அப்படியானால் வேண்டாம்!" என்று சொல்லி விட்டு அகஸ்தியர் திரும்பினார்.

இல்வலன், வாதாபி என்று இரு அசுர சகோதரர்கள் இருந்தார்கள். அவர்கள் பிதாவின் சிராத்தம் என்று சொல்லி ரிஷிகளைச் சாப்பிட அழைப்பார்கள். இல்வலன் வாதாபியை ஆட்டின் உருவம் எடுக்கச் செய்து சமைத்துச் சாப்பாட்டுடன் கலந்து விடுவான். ரிஷி சாப்பிட்டு முடிந்தவுடன் "வாதாபி! ஓடி வா!" என்று அழைப்பான். வாதாபி ரிஷியின் வயிற்றில் உருப் பெற்று "இதோ வந்தேன்" என்று வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளி வருவான்.

அகஸ்தியர் இல்வலனிடம் சென்று தமக்கு வேண்டிய பொருள்களை யாசித்தார். "வேண்டிய பொருள் தருகிறேன். முதலில் உணவருந்துங்கள்!" என்று சொல்லி இல்வலன் வழக்கம்போல் வாதாபியைக் கறி வகைகளுடன் கலந்து சமைத்துப் பரிமாறச் செய்தான்.

சாப்பாடு முடிந்ததும் இல்வலன் "வாதாபி!" என்று அழைத்தவுடனே, அகஸ்தியர் வயிற்றைத் தடவிக்கொண்டு "ஜீரணம்!" என்றார்.

வாதாபி அகஸ்தியர் வயிற்றில் ஜீரணமாகி விட்டான். அகஸ்தியரைக் கொல்ல வந்த இல்வலனும் அவருடைய சாபத் தீயினால் மாண்டான்.

பின், அவன் தருவதாகச் சொல்லியிருந்த பொருள்களையெல்லாம் எடுத்துக் கொண்டு அகஸ்தியர் லோபாமுத்திரையிடம் வந்தார்.

முனிவரும் முனிபத்தினியும் சில காலம் இல்வாழ்க்கை நடத்திய பிறகு அவர்களுக்கு ஒரு புதல்வன் பிறந்தான்.

மீண்டும் அகஸ்தியர் தமிழாராய்ச்சிக்கும் தவ வாழ்க்கைக்கும் திரும்பினார்.

பொதிகை மலையின் உச்சியில், பாபநாசம், கல்யாணி தீர்த்தம் ஆகியவற்றுக்கு மேலே, ஐயாயிரம் அடி உயரத்தில் இன்னமும் அகஸ்தியர் மலை என்னும் பெயர் கொண்ட சிகரம் இருக்கிறது. அங்கிருந்து பார்த்தால் மூன்று கடல்களும் தெரிகின்றன.

அகஸ்தியர் மலைக்குப் போவதற்குத் தற்சமயம் நல்ல பாதை மட்டும் கிடையாது.

இப்போது தமிழ் ராஜ்யம் தனி ராஜ்யமாகியிருக்கிறது. தமிழ் ராஜ்யத்தின் அரசினர் இப்புத்தாண்டில் தமிழ் முனிவர் வாழ்ந்த அகஸ்தியமலைக்குப் போக நல்ல பாதை அமைத்துக் கொடுத்தால் மிகப் பொருத்தமாயிருக்கும் அல்லவா!

முகப்புப் படம்

# கலை மடந்தை

ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் தமது நிறைந்த வாழ்க்கையில் பல நண்பர்களோடு பழகி அளவளாவிக் குதூகலமாக இருந்து வந்தவர். நண்பர்களுடன் குலாவுவதற்கென்றே அடிக்கடி பிரயாணம் செய்வார். அத்தகைய அவருக்கு உடல் நலக் குறைவினால் பிரயாணம் செய்ய முடியாமலே போய் விட்டது. மூன்று ஆண்டுக்குமேல் குற்றாலத்தில் தமது இல்லத்திலேயே தங்கி யிருக்க வேண்டியதாகி விட்டது. அதனால் ரஸிகமணியின் குதூகலத்தில் ஏதாவது குறைவு உண்டா என்றால், கிடையவே கிடையாது.

நண்பர்களுடன் குலாவுவதற்குப் பதிலாக அவர் புத்தகங்களுடன் குலாவினார். கம்ப ராமாயணம், திருக்குறள், முத்தொள்ளாயிரம், ஆழ்வார்கள்—நாயன்மார்களின் பாடல்கள் இவற்றைத் துணைக் கொண்டார். ஆயிரத்துக்கு மேற்பட்ட கவிதா ரஸம் செறிந்த தனித் தமிழ்ப் பாடல்களையும் சேகரித்து வைத்துக் கொண்டிருந்தார். ஷேக்ஸ்பியர், தாகூர் நூல்களும் அவரிடம் இருந்தன.

இத்தகைய அருமையான நூல்களுடன் பழகிய ரஸிகமணி அவர்கள் "ஆனந்தம் என்பது வெளியில் எங்கேயோ இல்லை; அகத்துக்குள்ளேயே இருக்கிறது!" என்ற முதிர்ந்தஞானத்தை அடைந்திருந்தார். இந்த ஞானத்தினால் அவருடைய உள்ளம் பளிங்குபோல் தெளிந்திருந்தது. அந்தகைய தெளிவு பெற்றிருந்த உள்ளத்திலே சோர்வுக்கு இடம் ஏது! எல்லாம் ஆனந்த மயந்தான்!

ரஸிகமணியைப் போலவே பழந்தமிழ் காட்டில் உயரிய புத்தகங்களின் சுவை அறிந்து அநுபவித்தவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். இவர் பாடிய பெரு நூலில் சிற்சில பாடல்களே நமக்குக் கிடைத்திருக்கின்றன. கிடைத்த பாடல்கள் எல்லாம் கவிதை மணிகள். ரஸிகமணியின் தமிழ்க் களஞ்சியத்தில் சேகரிக்கப்பட்டவை.

பெருந் தேவனாரின் காப்புச் செய்யுள்களில் ஒன்று பின்வருமாறு:

"புத்தகமும் ஞானந்து
முத்திரையும் பொற்பளிங்கும்
வைத்த கமல
மலர்க்காந்தாள்—முத்து
வடங்கொண்ட பூண் முகையாள்
வந்தென் மனத்தே
இடங் கொண்டாள் நீங்கிற்று
இடர்!"

கலை மடந்தை எந்த பாக்கியசாலியின் நெஞ்சத்தில் கோயில் கொண்டிருக்கிறாளோ, அந்த நெஞ்சத்திலிருந்து இடர் உடனே நீங்கிப் போய்விட வேண்டியதுதானே!

ரஸிகமணியின் அந்திய கால வாழ்க்கை இதை நன்கு எடுத்துக் காட்டி நிரூபிக்கும் உதாரண வாழ்க்கையாக அமைந்திருந்தது.

கவிதையை ரஸித்து அநுபவித்தது போலவே சித்திரம் முதலிய கலைகளையும் ரஸிகமணி டி.கே.சி. தகுதி யறிந்து பாராட்டி அநுபவித்தவர்.

மேற்கண்ட பெருந்தேவனார் பாடலைச் சகோதரி ஸ்ரீமதிக்கு ரஸிகமணி எழுதி அனுப்பினார். அந்தப் பாடலை வைத்து நமது முகப்புப் படத்தில் உள்ள கலைமடந்தையின் அற்புத சித்திரத்தை ஸ்ரீமதி எழுதினார்.

சித்திரத்தைப் பாராமலே ரஸிகமணி காலமாகி விட்டா'ரென்றாலும், அவர் சித்திரத்தின் பின்னணியில் கலந்து நின்று நமக்குக் காட்சி அளிக்கத்தான் செய்கிறார்.

புதிய ஜய ஆண்டில் தமிழ் மக்கள் கலைமடந்தையின் பூரண அருளைப்பெற்று இடர்கள் எல்லாம் நீங்கி ஆனந்த வாழ்க்கை அடைவார்களாக!



சிறப்பின் சிகரம்..
No.1506
அசோகா
MILD SCENTED
ASOKA
பீடி
நெ.1506

# வீணை



# ரத்தினம் பிள்ளையின் துறவு

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"ஐயோ, பாவம்! ரொம்பவும் அநியாயம்!" என்று சென்னைப் பட்டினத்தில் எல்லாப் பக்கங்களிலும்—குமாஸ்தாக்களும், உத்தியோகஸ்தர்களின் மனைவிமார்களும்—பேசிக் கொண்டார்கள்.

போலிஸ் பஞ்சாயத்து விசாரணையும் வைத்திய சோதனையும் எல்லாம் ஒரே முடிவுக்கு வந்தன:

ஸ்ரீமான் புருஷோத்தம நாயுடு ஜூன் மாதம் இருபத்தி நான்காம் தேதி பாஷாணம் உட்கொண்டு தற்கொலை செய்து கொண்டார். காரணம், முப்பது வருஷம் சர்க்காருக்கு யோக்கியமாகவும் சாமர்த்தியமாகவும் புகழுடனும் தொண்டு செய்து வந்தவர் அவருடைய இலாக்காவுக்குச் சிகரமான உயர்ந்த பதவி கிடைக்கும் சமயத்தில் திடீர் என்று ஒரு மொட்டை விண்ணப்பத்தின் பேரில் லஞ்சக் கேஸ் தொடரப்பட்டதுதான்.

விசாரணைகள் எல்லாம் முடிந்து தீர்ப்புச் சொல்லப் போகும் தறுவாயில் மானத்துக்குப் பயந்து நாயுடு தற்கொலை செய்து கொண்டு விட்டார். ஆனால் அவர் உயிர் நீத்த இரண்டாவது நாளில் தீர்ப்பு அவருக்கு அனுகூலமாகவே கொடுக்கப் பட்டது. 'லஞ்சக் குற்றம் ஏதும் ருசுவாகவில்லை. யோக்கியமான உத்தியோகஸ்தர் மீது புகார் செய்தது சில விரோதிகளின் சூழ்ச்சி' என்று அவர் கௌரவத்துக்குச் சிறிதும் களங்கம் ஏற்படாமல் தீர்ப்பு அளிக்கப்பட்டது.

யாரோ தெரியவில்லை, தீர்ப்பு பிரதிகூலமாகப் போகிறது என்று புருஷோத்தம நாயுடுவுக்கு ரகசியமாக டெலிபோனில் விஷயம் தெரியப் படுத்தியதாகவும், அதன் மேல் அவர் உள்ளம் கலங்கி, இம்மாதிரி உயிர் நீக்கிக் கொண்டார் என்றும் போலீசு அதிகாரிகள் முடிவு செய்தார்கள். பிரேதப் பரிசோதனையில் வயிற்றில் பாஷாணமும் காணப்பட்டது.

'இப்படியாயிற்றே!' என்று ரத்தினம் பிள்ளை மிகவும் வருத்தப் பட்டார். இவர் ஒரு பெரிய தர்ம சங்கடத்தில் சிக்கியிருந்தார். ரத்தினம் பிள்ளை, உத்தியோக பரம்பரையில் புருஷோத்தம நாயுடுவுக்கு அடுத்த ஸ்தானத்திலிருந்தவர். நாயுடு அவர்களுக்கு ஆகியிருக்க வேண்டிய பெரிய உத்தியோகம் அவர் இறந்துவிட்ட படியால் ரத்தினம் பிள்ளைக்கு உரிமையாயிற்று.

"இந்த ஸ்தானம் எனக்கு வேண்டாம். என் மனம் பெரும் கொந்தளிப்பில் இருக்கிறது. அன்று சாயங்காலம் நானும் காலம் சென்ற புருஷோத்தம நாயுடுவும் தேநீர் சாப்பிட்டோம். 'உங்களுடைய கேசு அனுகூலமாக முடியும்; உங்களுக்கு ஏற்பட்ட கஷ்டம் நீங்கி விடும்' என்று சொல்லி விட்டு வீட்டுக்கு வந்தேன். பிறகு இந்தத் துக்ககரமான சம்பவம் ஏற்பட்டு விட்டது. அதன் லாபத்தை நான் அடைவது எனக்குக் கொஞ்சமும் பிடிக்க வில்லை" என்று இலாக்கா நிர்வாகஸ்தருக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதியனுப்பினார்.

இதைச் சர்க்கார் மிகவும் பாராட்டிய போதிலும், 'உத்தியோக முறைகளில் இந்த மாதிரியான உணர்ச்சிகளுக்கு இடமில்லை. டைரக்டர் வேலையை நீர் தான் ஒத்துக்கொள்ள வேண்டும்' என்று சொல்லி விட்டார்கள். அவரும் மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டு வேலையில் அமர்ந்தார்.

பஞ்சாயத்து விசாரணையில் ஒரு கடுதாசி ஒப்புவிக்கப் பட்டது. அது ஒரு ஜோஸ்யருடைய கடிதம். அதன் விவரம்:

**உங்களுடைய ஆபத்து இந்த மாதம் அமாவாசையில் உச்ச நிலை அடையும். நீதிபதி உங்களுக்கு விரோதமாகத் தீர்ப்புக் கூறினாலுங்கூட அதற்கு விமோசனம் பிறகு உண்டு. நன்றாகப் பரிசீலனை செய்து இதை எழுதினேன். தைரியமாக இருக்கலாம். மனோ வேதனை வேண்டாம்.**

**இப்படிக்கு,**

ஜோதிஷம் வெங்கட்ராமய்யர்

இந்தக் கடிதத்தைப் பார்த்ததும் ஸ்ரீமான் நாயுடு அவமானத்துக்குப் பயந்து தற்கொலை செய்துகொண்டு விட்-

டார் என்று விசாரணை புரிந்த பஞ்சாயத்தார்கள் அபிப்பிராயம் கொடுத்து விட்டார்கள். "யோக்கியமாக வேலை செய்யும் உத்தியோகஸ்தர்களுக்கு இந்தப் புது லஞ்சக் கோர்ட்டுகளினால் ஒரு பெரும் ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. இந்தக் கோர்ட்டுகளை உடனே நீக்கிவிட வேண்டும்" என்று உத்தியோக வட்டாரங்களில் தீவிரமான பேச்சு நடந்தது. சிலர் "அது என்ன நியாயம்? அனாவசியமாக வீண் பயம் ஒருவர் உண்டாக்கிக் கொண்டு பிராணத் தியாகம்செய்துகொண்டதனால் லஞ்ச விசாரணையே வேண்டாம் என்று சொல்லி விடலாமா?" என்று வேலையிலிருந்து விலகிப் 'பென்ஷன்' வாங்கிவரும் நீதிபதிகள் எதிர் வாதம் செய்தார்கள்.



## 2

போலீஸ் இன்ஸ்பெக்டர் தீனதயாளுவுக்குத் திருப்தி ஏற்பட வில்லை. "இந்த விசாரணையின்போது உண்மை வெளியாக வில்லை. இன்னும் பார்த்துப் பரிசிலனை செய்ய வேண்டிய விஷயங்கள் இருக்கின்றன" என்று ரகசிய போலீஸ் இலாக்காவுக்கு ஒரு நீண்ட யாதாஸ்து தயார் செய்து அனுப்பினார்.

"இந்த வேலையை நீரே செய்யலாம்" என்று அவருக்குத் தாக்கீதும் வந்தது.

தீனதயாளு அவ் வேலையை மேற்கொண்டு ஒரு வருஷம் பெருமுயற்சி எடுத்தார். ஆனால் புலன் ஒன்றும் திருப்திகரமாக வெளியாக வில்லை.

இன்ஸ்பெக்டர் தீன தயாளுவைப் பற்றி ரகசிய போலீஸ் இலாக்காவில் கேலி செய்ய ஆரம்பித்தார்கள். தீன தயாளு பல ஜோஸ்யர்கள் வீட்டுக்குப் போய் வருவதைப் பார்த்து "இவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டது; ஒன்றும் செய்ய முடிய வில்லையே என்று ஜோஸ்யர்களிடம் சென்று உதவி தேட ஆரம்பித்திருக்கிறார்" என்று எகத்தாளம் செய்தார்கள். ஆனாலும் தீனதயாளு இதற்கெல்லாம் மனம் தளர வில்லை.

இன்னும் ஆறுமாதம் ரகசிய விசாரணை யிலேயே கழித்தார். பிறகு ஒரு ரிப்போர்ட்டும் அனுப்பி வைத்தார். நூறு பக்கம் கொண்ட அந்த ரிப்போர்ட்டின் முக்கிய அம்சம் வருமாறு:

புருஷோத்தம நாயுடு விஷம் அருந்தி இறந்தார் என்பது உண்மை. ஆனல் அது தற்கொலை யல்ல. அவருக்குப் போட்டியாக நின்ற ரத்தினம் பிள்ளை தேநீரில் விஷத்தைக் கலந்து புருஷோத்தம நாயுடுவை அருந்தச் செய்தார். அதனுல் இறந்தார். இறப்பதற்கு முன்னமே லஞ்சக் கேசு விசாரணையைப் பற்றி நாயுடுவுக்கு அனுகூலமான தகவல் எட்டியதாக ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது.

ஆனபடியால் தற்கொலைக்குக் காரணமே இருக்கவில்லை. இது 'டைப்' செய்யும் குமாஸ்தா என்னிடம் கொடுத்த சாட்சியத்தினல் சந்தேகமற ஊர்ஜிதமாகிறது. ஆகவே புருஷோத்தம நாயுடுவின் மரணமானது தற்கொலை யல்ல.

ரத்தினம் பிள்ளையைப் பற்றிப் பல விஷயங்கள் சந்தேகத்துக்கு இடம் தரக் கூடியவைகளா யிருக்கின்றன. லஞ்சக் கேசுத் தீர்ப்பு யாதாஸ்து ஒன்று டைபிஸ்ட் குமாஸ்தாமூலம் அவர் கைக்கு இருபத்திரண்டாம் தேதியே கிடைத்ததாகத் தெரிய வருகிறது. இவர் அதற்கு முன் பல தடவை ஒரு சோதிடரிடம் சென்று தன் ஜாதகத்தைக் கொடுத்து ஆரூடம் கேட்டு வந்திருக்கிருர். அந்தச் சோதிடர் இவருக்கு ஒரு பெரிய வேலை இந்தத் தேதியில் காயமாகும் என்று ஆரூடம் பார்த்துச் சொல்லி யிருக்கிருர். சோதிடர் சொன்னவாறே நடந்ததென்று மகிழ்ச்சியடைந்து சோதிடருக்கு ஐம்பது ரூபாய் இனம் வேறு கொடுத்து இருக்கிருர். பிறகும் ஆரூடம் பல தடவை கேட்டு வந்திருக்கிருர் என்றும் நிச்சயமாகத் தெரிகிறது. தமக்கு ஏதாவது அபாயம் உண்டா என்று சோதிடர்களைக் கேட்டு வந்திருக்கிருர்.

"அபாயமான ஒரு காரியம் நீர் தைரியமாகச் செய்வீர். அதனின்று உமக்கு ஒரு பெரிய உத்தியோகம் கிடைக்கும்" என்று ஒரு சோதிடர் அவருக்குக் கடிதம் மூலமாகத் தெரிவித் திருக்கிருர். இந்தக் கடிதத்திற்கு நகல் அந்த சோதிடர் வீட்டில் இருக்கிறது. இது ஜூன் மாதம் பத்தாம் தேதி எழுதப் பட்டது. இதற்காக நூறு ரூபாய் சோதிடருக்கு ரத்தினம் பிள்ளை அனுப்பியதாகவும் தெரிகிறது. சோதிடரும் என்னிடம் வாக்கு மூலம் கொடுத்திருக்கிருர். ரத்தினம் பிள்ளைக்குத் தவருன ஆசையும் நம்பிக்கையும் ஏற்பட்டு இந்தப் பாப காரியத்தைச் செய்து விட்டார் என்று வியக்தமாகத் தெரிகிறது. இருபத்தி நான்காம் தேதி யன்று மாலை நான்கு மணிக்கு ரத்தினம் பிள்ளை தேநீர்



அருந்தப் புருஷோத்தம நாயுடு வீட்டுக்குப் போனார் என்றும், அங்கே இருவரும் தனியாக ஓர் அறையில் தேநீர் அருந்திக் கொண்டிருந்த சமயம், ஆபீஸ் அறையில் டெலிபோன் மணியின் ஓசை கேட்டது என்றும், நாயுடு டெலிபோன் பேச ஆபீசு அறைக்குச் சென்றார் என்றும், அந்தச் சமயமே தகுந்த சந்தர்ப்பம் என்று ரத்தினம் பிள்ளை நாயுடுவின் தேநீர்க் கோப்பையில் பாஷாணத்தைப் போட்டுக் கலக்கி விட்டார் என்றும், நாயுடு திரும்பி வந்து "லஞ்சக் கேசு முடிவடைந்து விட்டது; அனுகூலமாகத் தீர்ப்பு எழுதி விட்டார்கள். 'டைப்' அடிக்கும் குமாஸ்தா சொன்னார்" என்று ரத்தினம் பிள்ளையிடம் சொன்னதாகவும் விஷயம் தெரிகிறது.

இதைக் கேட்ட ரத்தினம் பிள்ளை, "மங்களம்! மங்களம்!" என்று வெள்ளைக்காரர் வழக்கப்படி உரக்கக் கூறித் தேநீர் குடித்தார்.

"உங்களுக்கும் மங்களம்!" என்று சொல்லிப் புருஷோத்தம நாயுடுவும் தம் கோப்பையை எடுத்துக் குடித்து விட்டார். உடனே ரத்தினம் பிள்ளை தம் வீட்டுக்குத் திரும்பினார்.

* * *

இந்த யாதாஸ்துக்கு அனுபந்தமாகத் தாம் சம்பாதித்த ஆதாரங்களை யெல்லாம் தீனதயாளு வரிசைக் கிரமமாகச் சேர்த்து அனுப்பினார். புருஷோத்தம நாயுடு வீட்டில் ஒரு வேலைக்காரி — அவளுடைய பெயர் மங்களம்—இவளுடைய வாக்கு மூலமும் முக்கியமான அனுபந்தமாக வைக்கப் பட்டிருந்தது.

## 3

இதற்குள் ரத்தினம் பிள்ளை புது உத்தியோகத்தில் இன்னும் ஒரு படி உயர்வு பெற்றார்.

சர்க்கார் இன்ஸ்பெக்டர் தீனதயாளுவின் ரிப்போர்ட்டை ஒரு மாதம் பரிசீலனை செய்து, "இப்படியும் நடந்திருக்கலாம். ஆனால் ஊகத்தை ஆதாரமாகக் கொண்டே பல விஷயங்கள் கோக்கப் பட்டிருக்கின்றன. சந்தேகத்துக்கு இடம் ரொம்ப இருக்கிறது. ஆயினும் நீதி மன்றத்தில் வழக்கு நிற்காது. காலமும் ரொம்பச் சென்று விட்டது. இந்த விஷயம் மறு விசாரணைக்குத் தகுந்ததல்ல" என்று எழுதி முடித்து விட்டார்கள்.

* * *

பத்து வருஷங்கள் சென்றன. இதற்குள் பல சம்பவங்கள் ரத்தினம் பிள்ளையின் வாழ்க்கையில் நிகழ்ந்து விட்டன. அவர் மனைவி காரணமின்றித் திடீர் என்று காலமானார். பிறகு அவருடைய இரண்டு மக்களும் ஒருவர் பின் ஒருவராக நோய்வாய்ப் பட்டுக் காலமாயினர். இந்தச் சோகம் தாங்கமுடியாமல், வேலையிலிருந்து ஓய்வு பெற்று இமய மலையில் சுவாமி பரமானந்தர் ஆசிரமத்தில் செம்மண் துணி தரித்து உபதேசம் பெற்றுக் கொண்டு காலம் கழித்து வந்தார். தம் சொத்தை யெல்லாம் குஷ்டரோக நிவாரணத்துக்கு எழுதி வைத்து விட்டார்.

தீனதயாளுவும் அதே ஆசிரமத்தில் ஒரு பக்தராக இருந்தார்.

ஒரு நாள் மாலை அவரிடம் ரத்தினம் பிள்ளை "**சோதிடம் கேட்பது பாபம் என்று பெரியோர்கள் சொல்லி யிருப்பது மிகவும் உண்மை. நடப்பது நடக்கும் என்று ஆண்டவனுக்கு விட்டு விடாமல் வருங்கால ரகசியங்களில் பிரவேசித்தால் பாப எண்ணங்கள் உண்டாகும். ஆசைகளும், அதற்கான அக்கிரம சூழ்ச்சிகளும் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றும். பாழும் பள்ளத்தில் விழ்வோம்**" என்றார்.

"ஆமாம், சுவாமி!" என்றார் ஸ்ரீமான் தீனதயாளு.

தாம் செய்த ரிப்போர்ட் சரியானதுதான் என்று தீனதயாளு மனத் திருப்தியும் அடைந்தார்.

* * *

முதலில் உள்ளத்தில் ஒரு எண்ணம் உண்டாகிறது. அதைத் திரும்பத் திரும்ப நுகர்ந்து மகிழ்ச்சி அடைகிறோம். அதன் பயனாக ஒரு ஆசை தோன்றுகிறது. அந்த ஆசை கொஞ்சம் கொஞ்சமாக வேகம் அடைந்து உள்ளத்தைக் கவர்ந்த ஒரு நெருப்பாகி விடுகிறது. அதன் பயனாக நாம் படித்த படிப்பும் அடைந்த அறிவும் தேய்ந்து சூன்யமாகிப் போய், பாப புண்ணிய உணர்ச்சி, நாணம் எல்லாம் அழிந்து போகின்றன. முடிவில் விநாசம். இதைக் கீதாச்சாரியன் எடுத்துக் காட்டி யிருக்கிறான்.

ஒரு துராசைக்கு உள்ளத்தில் இடம் கொடுத்தால் இவ்வாறு படிப்படியாகக் கெட்டு விநாசம் அடைகிறோம். ஆசையுடன் சோதிடமும் சேர்ந்து விட்டால் சொல்லவும் வேண்டுமா?

சோதிடத்தில் உண்மை உண்டா, என்பதல்ல கேள்வி. உண்மையாக இருக்கலாம்; பொய்யாக இருக்கலாம்; இரண்டும் கலந்ததாகவும் இருக்கலாம். அதில் பாபவினைக்கு நிறைய இடம் உண்டு என்பதே நமக்குப் போதும். இந்த விஷயத்தை விளக்குவதற்காகக் கதை எழுதப் பட்டது. வெறும் பொழுது போக்குக்கு எழுதவில்லை. பொழுது தானாகவே போகும்; அதை யாரும் **போக்க** வேண்டியதில்லை!




"செய்தொழில் பலவற்றிலும் குற்றம் அற்றது நெய்தற் தொழில் ஒன்றே" என்பதை உணர்ந்த திருவள்ளுவர் மயிலாப்பூரில் கைத்தறியில் ஆடைகள் நெய்து வாழ்க்கை நடத்தி வந்தார்.

ஒரு நாள் திருவள்ளுவர் துணி நெய்துகொண்டிருந்தபோது ஓர் அதிசயம் நிகழ்ந்தது. பிரம்மா, விஷ்ணு முதலிய தேவர்கள் திருவள்ளுவர் வீட்டைத் தேடி வந்தார்கள். "திருவாலங்காட்டில் சிவபெருமான் நடனமாடியபோது திடீரென்று ஒரு காலை மேலே தூக்கி ஊர்த்துவ தாண்டவம் ஆடினார். அதன் காரணத்தைத் தங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளும்படி பணித்தார்" என்றார்கள். அப்போது திருவள்ளுவர் பாடிய பாடல்:

"பூவில் அயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி அளந்தோனும் தாமிருக்க — நாவில்
இழை யோட்டி நூல்நெருடும் ஏழை அறிவேனோ
குழை யோட்டும் பிஞ்சகன்தன் கூத்து."

சிவபெருமான் நடனமாடும்போது காது ஒன்றிலிருந்து விழுந்துவிட்ட குண்டலத்தை யாரும் அறியாவண்ணம் அவ்வாறு லாகவமாக எடுத்துச் செவியில் திரும்ப ஒட்டிவிட்டதைத் திருவள்ளுவர் தாம் இருந்த இடத்திலிருந்தே ஞானக் கண்ணால் அறிந்து கொண்டார். தேவர்களும் அறிய முடியாத இரகசியத்தை அறிந்து அவர்களுக்கு அறிவித்தார்.



ஏலேல சிங்கர் என்ற வியாபாரியின் வீட்டுக்குத் திருவள்ளுவர் சென்றார். வீட்டு வாசலில் நின்ற அவர் மனைவியிடம் ''செட்டியார் எங்கே?'' என்று கேட்டார். ''சிவபூஜை செய்கிறார்'' என்றார் அந்த அம்மையார். ''சிவ பூஜை இங்கு செய்கிறாரா? குப்பத்தில் உள்ள கடையில் செய்கிறாரா?'' என்றார் திருவள்ளுவர். உண்மையில் சிவ பூஜையில் இருந்த செட்டியார் வியாபார விஷயத்தைப் பற்றித் தான் அச்சமயம் நினைத்துக்கொண் டிருந்தார்! இதை அறிந்து கூறிய திருவள்ளுவரின் பெருமையை உணர்ந்து அன்று முதல் அவருக்குச் சீடராக அமர்ந்தார்.

ஏலேல சிங்கரின் மனத் திடத்தை அறிய வள்ளுவர் ஒரு சோதனை செய்தார். ஏலேல சிங்கரை ஒரு மரத்தின் உச்சிக்கு ஏறச் சொல்லிக் கையையும் காலையும் மரத்திலிருந்து விடச் சொன்னார். திருவள்ளுவரின் ஆணையைச் சிரமேற் கொண்ட ஏலேலசிங்கரும் அப்படியே செய்தார். மிக இயல்பாகத் தரையில் நிற்பது போல ஆகாயத்தில் நின்ற ஏலேல சிங்கரின் மனோதிடத்தை வியந்து பாராட்டி அவருக்குத் திருவள்ளுவர் சமய ஞான உபதேசம் புரிந்தார்.



மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர்கள் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளைப் பரிசோதித்து ஏற்றுக்கொள்ள இலேசில் இணங்கவில்லை. கடைசியாக ''நாங்கள் வீற்றிருக்கும் சங்கப் பலகை எந்த நூலுக்கு இடம் கொடுக்குமோ அதுவே செந்தமிழ் நூல். உம்முடைய திருக்குறளுக்குப் பலகை இடம் தந்தால் அதைச் செந்தமிழ் நூல் என்று ஏற்றுக் கொள்வோம்'' என்றனர்.

திருவள்ளுவர் அதற்குச் சம்மதித்தார். பாண்டிய மன்னனும் மந்திரி பிரதானிகளும் புடைசூழப் பொற்றாமரைக் குளத்துக்கு வந்தார். பொற்றாமரைக் குளத்தில் புலவர்களைத் தாங்கி மிதந்து கொண்டிருந்த சங்கப் பலகையில் திருவள்ளுவர் திருக்குறளை வைத்தார். உடனே அப்பலகை தன் மீது அமர்ந்திருந்த நாற்பத்தொன்பது சங்கப் புலவர்களுக்கும் இருக்க இடமில்லாமல் சுருங்கித் திருக்குறளுக்குமட்டும் இடம் அளித்தது. புலவர்கள் பொற்றாமரைத் தடாகத்தில் வீழ்ந்து தவித்தனர். பின்னர், திருக்குறளைப் பரிசோதித்து அது அற்புதமான நூல் என்பதைக் கண்டு போற்றினார்கள்.



திருவள்ளுவர் ஒரு சமயம் உணவருந்தும்போது தம் மனைவியை அழைத்தார். கணவர் அழைத்த குரல் கேட்ட வாசுகி அம்மையார் கிணற்றில் தண்ணீர் இழுத்துக் கொண்டிருந்த குடத்தை அப்படியே விட்டுவிட்டு அவசரமாக ஓடி வந்தார். கற்புடைய பெண்டிரின் கடமைக்குத் துணை புரிந்து தண்ணீர்க் குடமும் பாதிக் கிணற்றில் அப்படியே அந்தரத்தில் நின்றது!

தினந்தோறும் திருவள்ளுவர் உணவருந்தும் போது இலைக்கு அருகில் ஒரு சிறிய பாத்திரத்தில் நீரும் ஓர் ஊசியும் வைக்கும்படி வாசுகி அம்மைக்குப் பணித்தார். ஆனால் அந்த ஊசியைத் திருவள்ளுவர் என்றும் உபயோகிக்க வில்லை. வாசுகி அம்மையும் அவை எதற்காக வென்று கேட்கவில்லை. வாசுகி அம்மை தமது அந்தியக் காலம் நெருங்கி விட்டது என்று தெரிந்த போதுதான் '' ஊசியும் நீரும் வைக்கச் சொன்னது எதற்காக?'' என்று கேட்டார். ''சோற்றுப் பருக்கை தவறித் தரையில் விழுந்தால் ஊசியால் எடுத்துக் கழுவி இலையில் போட்டுக் கொள்வதற்காக வைக்கச் சொன்னேன். ஊசியை உபயோகப்படுத்தச் சந்தர்ப்பம் நேரவே இல்லை. இதைப் பற்றி இத்தனை காலமும் 'எதற்காக?' என்று கூடக் கேளாமல் அந்தப் பணியைச் செய்து வந்தாயே? உன்னைப் போன்ற உத்தமியைப் பிரிந்து எப்படி வாழ்வேன்!'' என்று திருவள்ளுவர் கதறியதில் வியப்பில்லை அல்லவா?



பள்ளியில் குழந்தைகள்...
மர்பி ரேடியோ மூலம்
கல்வி புரோகிராம்
கேட்கிறார்கள்

இவைகள் மர்பி மாடல் 191, 193, டிஏ 193 ஏ.ஸி மெயின்களுக்கு மாத்திரம். டியு 193 ஏ.ஸி அல்லது டி.ஸி மெயின்களுக்கும் டிபி 191 - பாட்டரி செட்.



விலை ரூ. 800/-

மர்பி ரேடியோ

**murphy radio**

விநியோகஸ்தர்கள்:

அடிஸன் அன்டு கம்பெனி லிமிடெட் 160, மவுன்ட் ரோட், மதராஸ்-2.

மர்பி ரேடியோ ஆப் இந்தியா லிமிடெட், பம்பாய் 13.

# பளபளப்பிலும் வெண்மையிலும் அழகு இருக்கு






## நிராளா

உங்களுக்கு
இரண்டும் தருகிறது

துங்கபத்ரா
இன்டஸ்ட்ரீஸ் லிட்.,
கர்நூல்

கனத்திற்காக
ஒன்றும்
சேர்க்கப்படாதது

பிரதிநிதிகள் இல்லாத இடங்களுக்கு
வினியோகஸ்தர்கள் தேவை

ASP-TN-1/54

---

# நெஸ்ட்டோமால்ட்

சாப்பிடுவதால் தேகம் திட
கார்த்தமாயிருக்கிறது







சூடாகவோ, அல்லது
குளிர்ச்சியாகவோ சாப்பிடலாம்.
நல்ல ருசியாயிருக்கும்

# ‘மனோகரா’வின் வெற்றி

### கர்நாடகம்

தமிழ் நாட்டுத் திரைப் பட உலகில் ஒரு புத்துணர்ச்சியும் புதிய உற்சாகமும் ஏற்பட்டிருக்கின்றன. திரைப் படத் தொழிலில் ஈடுபட்ட முதலாளிகள், தொழிலாளிகள், விநியோகஸ்தர்கள், கொட்டகைக்காரர்கள் அனைவரும் குதூகலமாயிருக்கிறார்கள். வெகு காலத்துக்குப் பிறகு இத்தகைய குதூகலம் திரைப்பட உலகில் உண்டாகியிருக்கிறது. இதற்குக் காரணம் “மனோகரா” படத்தின் அரும் பெரும் வெற்றியாகும். ஒன்றன் பின் ஒன்றாக வந்த பல தமிழ்ப் படங்கள் மக்களின் ஆதரவைப் பெறாமல் சுமாரான வெற்றிகளாகவோ படுதோல்விகளாகவோ போன பிறகு, “மனோகரா” படம் மக்களின் அமோகமான ஆதரவைப் பெற்று நீடித்து நின்று ஓடிப் பண வருவல் கோணத்திலிருந்தும் மகத்தான வெற்றி என்று சொல்லக் கூடியதாக அமைந்தது, திரைப் படத் தொழிலில் ஈடுபட்ட அனைவருக்குமே உற்சாகத்தை உண்டு பண்ணியிருக்கிறது. திரைப் படத் தொழிலுக்கே மீண்டும் நல்ல காலம் பிறந்து விட்டது என்று எண்ணி அவர்கள் மகிழ்ந்திருக்கிறார்கள். ஒவ்வொருவரும் “மனோகரா”வின் வெற்றியைத் தங்கள் சொந்த வெற்றியாகவே கருதிப் பெருமிதம் அடைகிறார்கள்.

“மனோகரா” படம் அதைத் தயாரித்து வெளியிட்டவர்களுக்கும், திரைப்பட உலகத்தைச் சேர்ந்தவர்களுக்கும் வெற்றி அளித்திருப்பதாகச் சொன்னால் மட்டும் போதாது.

“மனோகரா” படம் பழைய பாரத நாட்டின் உயர்ந்த பண்புகள் எல்லாவற்றுக்கும் வெற்றி.

முக்கியமாக, “மனோகரா” பாரதப் பெண் குலத்தின் சிறப்பியல்பான கற்பு நெறிக்கு வெற்றி; பதி பக்திக்கு வெற்றி; “அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்” என்னும் முதுரைக்கு வெற்றி; நேர்மைக்கு வெற்றி; நல்ல ஒழுக்கத்துக்கு வெற்றி; பொறுமைக்கு வெற்றி; சகிப்புத் தன்மைக்கு வெற்றி; தாய்மைக்கு வெற்றி; சத்தியத்துக்கும் தர்மத்துக்கும் வெற்றி.

சூதும் வாதும் நெறியற்ற நடத்தையும் வஞ்சகமும் வேஷமும் சில காலம் வெற்றி யடைவது போல் காணப்படலாம்; திரும்பத் திரும்ப அவையே வெற்றி பெறுவது போல் தோன்றலாம்; ஆனால் இறுதியில் அத் தீய சக்திகள் மடிந்து தூய ஒழுக்கமும் நெறி தவறாத நேர்மையுமே வெற்றி பெறுதல் உறுதி என்பதை “மனோகரா” படம் தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டுகிறது.

அது மட்டுமல்ல; மேற்கூறிய பாரத நாட்டுப் பழமையான பண்புகளையே நம் மக்கள் பெரிதும் விரும்புகிறார்கள் என்பது இப்படத்தின் அமோகமான வெற்றியிலிருந்து நிரூபணமாகிறது.

பாரத நாட்டுப் பண்புகளுக்குள்ளே அச்சுவேர் போன்ற பண்பு யாது!

பெண் குலத்தின் கற்பு நெறிதான்.

சீதை, சாவித்திரி, நளாயினி, தமயந்தி, கண்ணகி போன்ற பெண்ணரசிகளையே நமது பாரத நாட்டுப் பெண் குலத்துக்கு இலட்சியமாக எடுத்துக் காட்டுவது வழக்கம்.

ஆண் மக்கள் நெறி தவறி நடந்தாலும், பெண் குலத்துக்கு அநீதிகளும் கொடுமைகளும் இழைத்தாலும், அவற்றைப் பொறுமையுடன் சகித்துக் கொண்டு, கைப் பிடித்த கணவனிடம் பக்தி குன்றாமலிருப்பது தான் பாரத நாட்டுக் கற்பு நெறியின் தலை சிறந்த அம்சம்.

இத்தகைய கற்பரசிகளின் தெய்வீக பரம்பரையில் வந்தவள் புருஷோத்தம ராஜனின் தர்ம பத்தினியாகிய பத்மாவதி.

அம்மம்மா! அவளுடைய கற்பின் மகிமையைத்தான் என்னவென்று சொல்வது! பதி பக்தி என்னும் இமயப் பெரு மலையின் எவரெஸ்ட் சிகரத்தின் மேல் அவள் ஏறி நிற்கிறாள்!

பட்ட மகிஷியாகிய பத்மாவதியை மூலையில் ஒதுக்கிவைத்துவிட்டு, மாயமோகினியாகிய வஸந்தசேனையைப் புருஷோத்தம ராஜன் சிங்காதனத்தில் தன் அருகில் அமர்த்திக் கொள்கிறான். வஸந்த சேனையின் துர்ப் போதனையினால் பத்மாவதியை மிக மிகக் கேவலப் படுத்துகிறான்; கடைசியாக அவளைப் பாதாளச் சிறையிலேயும் தள்ளுகிறான்.

மனோகரன் தன்னுடைய அருமைத் தாய்க்கு இழைக்கப் படும் அநீதிகளைக் கண்டு அடிக்கடி பொங்கி எழுகிறான். வஸந்த சேனையைத் தண்டிக்கவும், அவளுடைய மாய வலையில் விழுந்த தந்தைக்கு அறிவு புகட்டவும் விரும்புகிறான்.

ஒவ்வொரு தடவையும் பத்மாவதி தன் மகனைத் தடுத்து நிறுத்துகிறாள்; அவனுக்குப் பொறுமையைப் போதிக்கிறாள்.

பத்மாவதியை ‘வேசி’ என்றும், மனோகரனை ‘வேசி மகன்’ என்றும் வஸந்தசேனை ஏசியபோது கூடப் பத்மாவதி ‘பொறுமை என்னும் நகையணிந்து’ விளங்குகிறாள்; மகனையும் கட்டுப் படுத்தி அடங்கியிருக்கச் செய்கிறாள்.

கடைசியாக, பத்மாவதியின் கணவனைச் சிறையிலே இட்ட பிறகுதான், அந்தப் பெண்ணரசி “பொறுத்தது போதும்; பொங்கி எழு!” என்று மகனுக்குக் கட்டளை இடுகிறாள்.

இத்தகைய அற்புதமான கற்பு நெறி எவ்வளவு அரிய சக்தி வாய்ந்தது என்பதே இப் படத்தின் சிகரமான கட்டமாக அமைந்திருக்கிறது.

கற்பரசியின் வாயிலிருந்து பிறக்கும் சொல் எவ்வளவு தெய்வீக சக்தி வாய்ந்தது என்பது அந்தக் கட்டத்தில் நிரூபிக்கப் படுகிறது.

தந்தையின் கட்டளையினால் மனோகரன் இரும்புச் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டு இராஜ சபைக்கு வரும் காட்சி நாடக மேடையிலேயே மிகப் பிரசித்தி பெற்றதாகும்.

இந்தத் திரைப் படத்தில் வரும் மனோகரன் இராஜ சபையில் நீண்ட தொரு சொற்பொழிவு நிகழ்த்துகிறான். அதைச் ‘சொற்பொழிவு’ என்று சொன்னால் போதாது. ஏனெனில், சாதாரணப் பேச்சுக்களைக் கூட இந்தக் காலத்தில் ‘சொற்பொழிவு’ என்று குறிப்பிடுகிறோம்.

மனோகரன் இராஜ சபையில் பேசும் பேச்சைச் ‘சொற் பிரவாகம்’ ‘சொல் வெள்ளம்’ ‘சொற் பிரளயம்’ ‘சொல் சண்டமாருதம்’ என்றெல்லாம் சொன்னாலும் திருப்தி உண்டாகவில்லை.

‘சொல் அம்பு மழை’ ‘சொல் குண்டு மழை’ ‘அணுக் குண்டு சொல் மாரி’ ‘எரிமலைச் சொற் பொழிவு’ என்றெல்லாம் சொல்லக் கூடிய விதமாக மனோகரன் தீப்பொறி பறக்கும் காரசாரமான சொற்களைக் கொட்டித் தீர்க்கிறான்.

தமிழ் மொழியை எவ்வளவு வன்மையாகக் கையாள முடியும் என்பதற்கு மனோகரனின் இராஜ சபைப் பேச்சு நல்ல எடுத்துக் காட்டு.

ஆனால் இவ்வளவு வன்மையான பேச்சும் காரியத்துக்கு உதவாமற் போகிறது.

அதனால் கேட்டவர்களின் மனமும் மாறவில்லை; வேறு பயனும் விளையவில்லை.

அடுத்தாற் போல், கற்பரசியாகிய பத்மாவதியோ ஒரு சில சொற்களைத்தான் சொல்கிறாள்.

"சங்கிலி அறுந்து விழட்டும்!"

"சங்கிலி அறுந்து விழட்டும்!"

"சங்கிலி அறுந்து விழட்டும்!"

என்று திரும்பத் திரும்ப மந்திரம் ஜபிப்பது போல் ஆவேசத்துடன் சொல்லுகிறாள்.

மனோகரனைப் பிணைத்திருந்த இரும்புச் சங்கிலிகள் அறுந்து விழுந்தே விடுகின்றன!

ஆகா! படம் பார்ப்பவர்கள் அச்சமயம் எவ்வளவு பரவசமடைந்து கொட்டகை அதிரும்படி கைதட்டி ஆர்ப்பரிக்கிறார்கள்!

* * *

சிலகாலமாக நமது நாட்டில் சமூக சீர்திருத்தவாதிகள் மாதர் சம உரிமையைப் பற்றித் தீவிரப் பிரசாரம் செய்து வருகிறார்கள்.

"கற்பு நெறி என்பது பெண்களுக்கு மட்டுந்தானா! ஆண்களுக்கு இல்லையா! இரு பாலாருக்கும் பொது நெறியாக இருக்க வேண்டாமா!" என்று பாரதியார் கேட்டு வைத்தார்.

ஆண்களும் ஒழுக்கத்தோடு இருக்க வேண்டும் என்பதற்காகவே இம்மாதிரி பாரதியார் கூறினார்.

பாரதியாருக்குப் பின்னால் வந்த சமூக சீர்திருத்தவாதிகள் அவரைக் காட்டிலும் மிக மிக முன்னாலே சென்றார்கள்.

"ஆண்கள் நெறி தவறினால், பெண்களும் ஏன் நெறி தவறக் கூடாது!" என்று கேட்டார்கள்.

"கற்பு என்பது பெண்களை ஆண்கள் அடிமைப் படுத்தி வைத்திருப்பதற்காகச் செய்த சூழ்ச்சி!" என்று சொன்னார்கள்.

இம்மாதிரியான ஒழுக்கக் கேட்டுக்கு ஆதரவு அளிக்கும் பிரசாரம் நம் நாட்டு மக்களின் உள்ளத்தில் சிறிதும் இடம் பெறவில்லை என்பதை "மனோகரா" படத்தின் வெற்றி நிரூபிக்கிறது.

"சங்கிலி அறுந்து விழட்டும்!" என்ற பத்மாவதியின் வாக்குப் பலிக்கும்போது மக்கள் அடையும் குதூகலமும் செய்யும் ஆரவாரமும் அந்த உண்மையைத் தெள்ளத் தெளிவாக்குகிறது.

திருவள்ளுவர் பெருமானின் மனைவி வாஸுகி அம்மையார், கிணற்றிலிருந்து நீர் இழுத்துக் கொண்டிருந்தபோது வள்ளுவர் 'வாஸுகி!' என்று அழைத்தார். உடனே, கயிற்றை அப்படியே விட்டு விட்டு வாஸுகி வந்தார்; கயிறும் குடமும் கிணற்றில் விழாமல் அப்படியே நின்றன.

நளாயினி என்னும் பத்தினித் தெய்வம் தன் கணவர் பொழுது விடிந்தவுடனே இறந்து விடுவார் என்று அறிந்ததும், "சூரியன் உதயமாகாமற் போகக் கடவது!" என்று கூறினாள். அவள் வாக்குப் பலித்தது.

"இவை யெல்லாம் கட்டுக் கதைகள்" என்று எளிதில் சொல்லி விடலாம். ஆனாலும் அக் கட்டுக் கதைகளில் "கற்பு நெறி அபார சக்தி வாய்ந்தது" என்னும் உண்மை அடங்கி யிருக்கிறது.

ஆகையினாலேதான், போலிச் சீர்திருத்தவாதிகள் எவ்வளவு தீய பிரசாரம் செய்தும் மேற் கூறிய கட்டுக்கதைகள் பாரத மக்களின் மனத்தை இன்னமும் வசீகரித்து வருகின்றன.

அந்தப் பாரத மக்களின் பண்புதான் கற்பரசி பத்மாவதியின் வார்த்தைகளின் சக்தியால் இரும்புச் சங்கிலிகள் அறுந்து விழும்போது நம் ஜனங்களை ஆர்ப்பரித்து மகிழச் செய்கின்றன.

* * *

இந்தத் திரைக் கதையில் புருஷோத்தம மகாராஜா சோழ மன்னர் என்று குறிப்பிடப்படுகிறார். பாண்டிய மன்னன் ஒருவனும் யானைமேல் ஏறி வந்து இறந்து படுகிறான்.

பேராசிரியர் ஸ்ரீ சம்பந்த முதலியார் அவர்கள் சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால் "மனோகரா" நாடகம் எழுதியபோது, சோழ–பாண்டிய குலத்தைப் பற்றிய சரித்திர ஆராய்ச்சிகள் அவ்வளவாக வெளி வந்திருக்கவில்லை.

மக்களுக்குத் தெரிந்த ஏதேனும் இராஜகுலத்தைக் குறிப்பிட வேண்டுமென்பதற்காகச் சோழ–பாண்டிய குலங்களைக் குறிப்பிட்டிருக்கிறார்.

புருஷோத்தமன், பத்மாவதி, வஸந்த சேனை, முதன் மந்திரி சத்தியசீலர், மனோகரனுடைய மனைவி விஜயா முதலிய பெயர்கள் தமிழகத்துச் சோழ–பாண்டிய குலத்துக்குரிய பெயர்கள் அல்ல; நிகழ்ச்சிகளும் தமிழக வரலாற்றுக்கு உரியனவல்ல.

பழைய பாரத நாட்டிலிருந்ததாகச் சொல்லப் படும் ஐம்பத்தாறு தேசங்களில் எந்தத் தேசத்திலும் இம்மாதிரி பெயர்களுடைய ராஜா — ராணிகள் இருந்திருக்கலாம்; இத்தகைய நிகழ்ச்சிகளும் நடந்திருக்கக் கூடும்.

எந்தத் தேசத்திலும் நடந்திருக்க முடியாத நிகழ்ச்சி ஒன்றும் வருகிறது.

வஸந்தசேனையின் காலஞ் சென்ற கணவனின் பிசாசு ஒன்று ஸ்ரீ சம்பந்த முதலியாரின் நாடகத்தில் சில சமயம் திரைக்குப் பின்னால் வந்து அவளைப் பயமுறுத்தி விட்டுப் போகும்.

திரைக் கதையில் அந்தக் கணவனை உயிரோடு வைத்திருக்கிறது. மாய மந்திர ஔஷதத்தினால் அவன் விரும்பிய போது உருவமும் பொழுதும் நினைத்த போது அருவமாகவும் சக்தி பெறுகிறான். சில சமயம் அவனுடைய உடல் மட்டும் மறைந்து உடைகள் கண்ணுக்குத் தெரிந்து கலவரம் உண்டாக்குகின்றன; சில சமயம் உடைகளும் மறைந்து விடுகின்றன.



"இரும்புச் சங்கிலியில் மனோகரன்"

நல்ல வேளையாக இந்த மாய மந்திர மனிதன் தீய சக்திகளுக்கு உதவி செய்வதற்காக வராமல், நல்ல சக்திகளுக்கு உதவி செய்வதற்காகவே படத்தில் வருவது திருப்தி அளிக்கிறது.

இவ்வளவு பகுத்தறிவுப் பிரசாரம் இந் நாட்டில் நடந்த பின்னரும், இந்த மாய மந்திர மனிதனுடைய அபூர்வச் செயல்கள் படம் பார்ப்பவர்களுக்கு அபரிமிதமான குதூகலம் உண்டாக்குகிறது. அதன் காரணம் என்ன!

நல்லவர்கள் நன்மையும் வெற்றியும் அடைய வேண்டும் என்றும், ஒழுக்கங் கெட்ட தீயவர்கள் தக்க தண்டனை அடைய வேண்டும் என்றும் மக்கள் மனமார விரும்புகிறார்கள்.

இந்த நல்ல முடிவுக்கு மாய வித்தையும் மணி மந்திர ஔஷதமும் உதவி செய்வதாயிருந்தால் ஜனங்களுக்கு ஆட்சேபம் இல்லை.

ராணி பத்மாவதி

"இது நடந்திருக்குமா!" "இப்படிச் செய்ய முடியுமா!" "இது பகுத்தறிவுக்கு உகந்ததா!" என்று யாரும் கேட்கத் தயாராயில்லை.

* * *

"திரைப் படங்களின் மூலம் மக்களுக்குப் போதனை செய்ய முற்படுவது உசிதமா!" என்ற கேள்வி சில காலத்துக்கு முன்பு எழுந்தது. "திரைப் படம் ஜனங்களுக்குக் களிப்பூட்டும் சாதனம்; அதைப் போதனை செய்வதற்காகப் பயன் படுத்தும் முயற்சி வெற்றி பெறாது" என்று ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் கல்கத்தாவில் கூறினார். இதைப் பற்றிய வாதப் பிரதிவாதங்கள் நடந்தன. ஸ்ரீ வாஸன் அவர்களுடைய கட்சியை எதிர்த்துப் புகழ்பெற்ற டைரக்டர் சாந்தாராம் வட நாட்டுப் பத்திரிகைகளில் எழுதியிருந்தார்.

ஸ்ரீ வாஸனுடைய கட்சியை ஆதரித்தவர்கள் போதனையைப் பிரதான அம்சமாகக் கொண்ட படங்கள் படு தோல்வி அடைந்ததை உதாரணமாகக் குறிப்பிட்டார்கள்.

ஸ்ரீ சாந்தாராமும் அவருடைய கட்சியை ஆதரித்தவர்களும் ஸ்ரீ வாஸனின் "ஔவையார்" படத்தையே உதாரணமாகக் குறிப்பிட்டார்கள்.

திரைப் படங்கள் முக்கியமாக ஜனங்களுக்குக் களிப் பூட்டும் சாதனங்களாகவே இருந்து வரவேண்டுமென்றுதான் நானும் கருதுகிறேன்.

"போதனை செய்யப் படம் எடுக்கிறேன்" என்று சொன்னால், உடனே ஜனங்கள் "நீங்கள் யார் எங்களுக்குப் போதனை செய்வதற்கு!" என்றுதான் கேட்பார்கள்.

மேலும் ஒரு திரைப் படம் வெற்றி அடைவது அதில் அடங்கிய போதனைகளை மட்டும் பொறுத்ததன்று.

ரஸமான கதை, அதில் விறுவிறுப்பான நிகழ்ச்சிகள், ஒன்றுக்கொன்று மாறுபட்ட குணங்களையுடைய பாத்திரங்கள், அப் பாத்திரங்களை ஏற்று நடிக்கக் கூடிய திறமையுள்ள நடிகர்கள், ஜீவசக்தியுள்ள வசனம், நல்ல சங்கீதம், எதிர்பாராமல் வந்து திடுக்கிடவைக்கும் சம்பவங்கள், கண்ணுக்கினிய காட்சிகள், உள்ளத்தை உருக்கும் உணர்ச்சி மயமான கட்டங்கள்,—இவை போன்ற பல அம்சங்கள் சேர்ந்து ஒரு படத்தின் வெற்றிக்குக் காரணமாகின்றன.

"மனோகரா" படத்தில் இந்த அம்சங்கள் எல்லாம் ஏறக்குறையச் சேர்ந்திருப்பதே அதன் வெற்றிக்கு முக்கிய காரணமாகும்.

இவ்வாறு வெற்றிக்கு அவசியமான அம்சங்கள் பெரும்பாலும் சேர்ந்து எடுத்திருக்கும் படத்தில், இயற்கையான முறையில் கொஞ்சம் நல்ல போதனையும் சேர்ந்திருந்தால் சர்க்கரைப் பந்தலில் தேன் மாரி பொழிந்தது போலாகும்.

அந்தப் போதனை மக்களின் மனத்தில் ஏற்கனவே பதிந்துள்ள நம்பிக்கைகளுடன் ஒட்டியதாயிருந்தால், படத்தின் வெற்றிக்கு மேலும் கொஞ்சம் உதவி செய்வதாயிருக்கும்.

* * *

பாரத நாட்டின் பழைய பண்பாட்டுக்கு உரிய கற்பு நெறி, நல்லொழுக்கம், பொறையுடைமை, பெற்றோர்களிடம் பக்தி, புத்திர பாசம் ஆகிய நற் பண்புகளே நம் மக்களின் உள்ளத்திலும் இரத்தத்திலும் ஊறிப்போயிருக்கின்றன என்பதற்கு "மனோகரா" படத்தின் வெற்றி ஒரு மகத்தான சான்றாக விளங்குகிறது.

இராமபிரான் முதல் காந்திமகான் வரையில் தங்கள் வாழ்க்கையில் கடைப் பிடித்திருக்கும் சன்மார்க்க நெறியையே "மனோகரா" படம் வற்புறுத்தி வெற்றி அடைந்திருக்கிறது.

பாபிலோனியா, அஸீரியா, எகிப்து, கிரீஸ், ரோமாபுரி ஏகாதிபத்தியங்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயிருக்க, பதினாயிரம் ஆண்டுகளாக நம் பாரத தேசம் மட்டும் எத்தனையோ இன்னல்களைச் சமாளித்துக் கொண்டு, இன்றைக்கும் தலைதூக்கி மேன்மையுடன் விளங்குவதற்குக் காரணம் இந்தப் பாரத புண்ணிய பூமியின் மக்களுடைய உள்ளத்தில் அழியாமல் பதிந்திருக்கும் கற்பு நெறி, நல்லொழுக்கம் முதலிய தலைசிறந்த பண்புகளேயாகும்.

அந்தப் பண்புகளே வருங்காலத்தில் நம்மை அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டு முதலிய விபரீத விபத்துக்களிலிருந்தும் பாதுகாக்கப் போகின்றன என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

இத்தகைய பாரத நாட்டின் நற் பண்புகளை அடிப்படையாகக் கொண்ட "மனோகரா" படத்தை வெளியிட்ட படத் தயாரிப்பாளரையும், அம் முயற்சிக்குத் துணைபுரிந்த அனைவரையும் மகிழ்ச்சியுடன் பாராட்டுகிறேன்.

# கடல் கடந்த தமிழன்

மு. ஏரம்பமூர்த்தி

யாழ்ப்பாணத்திலே ஒரு கால்வாய் பல ஊர்களுக்கு ஊடாகச் செல்கிறது. அது கடலோடு சேருமிடத்துக்குத் 'தொண்டைமானாறு' என்று பெயர் வழங்கிவருகிறது.

இத்தொண்டைமானாறு இன்று உலகப் பிரசித்தி அடைந்து விட்டது. ஸ்ரீ மு. நவரத்தினசாமி பிறந்து வளர்ந்து ஓடியாடிய ஊர் அல்லவா!

ஸ்ரீ நவரத்தினசாமி பருத்தித் துறை ஹாட்லி கலாசாலையிலே மாணவனா யிருக்கும் பொழுது, விளையாட்டுக்களிலும் நீந்துதலிலும் முதன்மை பெற்று விளங்கினர். அந்தக் காலத்திலே "இந்தப் பாக் நீரிணைக் கடலை நான் நீந்தியே இந்தியக் கரையை அடைந்தால் என்ன!" என்ற எண்ணம் அவர் மனத்திலே பதிந்தது.

பத்தொன்பதாவது வயதிலேயே ஸ்ரீ நவரத்தினசாமி அரசாங்க சேவையில் ஈடுபட்டு விட்டார். அதனுல் அவர் ஆசை இலேசில் நிறைவேற வழியில்லாமல் போய் விட்டது.

இப்பொழுதுதான் சொந்த ஊருக்கு மாறி வந்தார். ஆதலால் "இப்பொழுதே பாக்கு நீரிணையைக் கடந்து விடவேண்டும்" எனத் தொடங்கினர்.

இலங்கையின் வடபகுதிக்கு, இந்தியாவிலே மிகக் கிட்டிய இடம் கோடிக் கரை.

காங்கேசன் துறையிலிருந்து கோடிக் கரை 30 மைல். வல்வெட்டித் துறையிலிருந்து 34 மைல். அவர் முயற்சிக்கு ஆதரவளித்தவர்களும் வல்வெட்டித் துறையார். காற்றும் காங்கேசன் துறையிலிருந்து கிழக்காகத்தான் புறப்படச் சாதகமா யிருந்தது. ஆதலால் ஸ்ரீ நவரத்தினசாமி வல்வெட்டித் துறையிலிருந்து புறப்பட்டார்.

மார்ச் 16-ம் தேதி கடலிலே குதித்தார். ஆனுல் காற்று சதி செய்தது; சுழற்றி யடித்தது. கடல் குமுறியது. ஆனுலும் அவர் 24 மைலைத் தாண்டினர். டாக்டர்களின் பிடிவாதத்தால், மனமில்லாமலே இந்தியக் கரை தெரிந்தும் திரும்ப வேண்டிய தாயிற்று. ஆனுலும் முதல் முயற்சியிலேயே உலக ரிகார்ட் 22 மைலை முறியடித்தார்.

தோள் வலி படைத்த ஸ்ரீ நவரத்தினசாமி மன வலிமையும் பெற்றவர். அசளுல் மார்ச்மாதம் 25-ம் தேதி திரும்பவும் வல்வெட்டித் துறைக் கடலிலே இறங்கினர்.

அன்று யாழ்ப்பாணம் முழுவதும் கொந்தளித்தது. மத்தியானமே, வல்வெட்டித்துறை முழுவதும் கார்களும் ஜனங்களும் அலை மோதின.

ஸ்ரீ நவரத்தினசாமி அரைக் கச்சை மாத்திரந் தரித்து, உடலெல்லாம் கிரீஸ் பூசி, உள்ளங் கைகளிலும், உள்ளங் கால்களிலும் தார்பூசி, கூப்பிய கையுடன் தோன்றியவுடனே ஆயிரம் ஆயிரம் முகங்கள் மலர்ந்தன. சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் ஸ்ரீ குமார குலசிங்கம் அவர்களும் ஸ்ரீ இராமலிங்கம் எம். பி. அவர்களும் வழியனுப்ப அவர் கடலில் பாய்ந்த பொழுது எழுந்த 'அரோகரா' சத்தம் வானைப் பிளந்தது!

"நாற்பத்தெட்டு மணி நேரத்திலேயே இந்தியக் கரையைச் சேர்வேன்" என்று சொல்லிய ஸ்ரீ நவரத்தினசாமி 27 மணி நேரத்துக்குள்ளேயே 34 மைலையும் நீந்தி முடித்து, மாலை ஏழு மணிக்குக் கோடிக்கரை மண்ணிலே கால் மிதித்தார்!

அரை மணி நேரம் நீரில் ஊறியவுடன் உடலில் தடிமல் கட்டி விடுகிறது. ஆனுல் ஸ்ரீ நவரத்தினசாமி 27 மணி நேரம் இடை விடாமல் நீரிலே கிடந்து ஊறினர்; பொங்கி வரும் அலைகளுடனே போராடினர்.

வெள்ளிக் கிழமை மாலை ஏழு மணிக்குக் கோடிக் கரையை அடைந்தவுடன் அக் கிராமவாசிகள் பொங்கிப் பூரித்தனர்.

ஸ்ரீ நவரத்தினசாமியை மூன்றுமைல் தூரமுள்ள வேதாரண்யம் வரை தோளிலே சுமந்து சென்றனர். சனிக்கிழமை மாலை ஐந்து மணிக்கு வேதாரண்யத்திலே பிரம்மாண்டமான கூட்டம் கூடியது. தமிழ் நாட்டு மக்கள் அவருக்கு மகத்தான வரவேற்பு அளித்தனர்.

ஞாயிற்றுக் கிழமை மாலை ஆறு மணிக்கு வல்வெட்டித் துறையிலே யாழ்ப்பாண மக்கள் பெருந்திரளாகக் கூடி வரவேற்பளித்தனர். கைத்தொழில் வீடமைப்பு மந்திரி ஸ்ரீ வைத்தியநாதன் வரவேற்ருர். அயல் நாட்டு மந்திரியின் பாராளுமன்றக் காரியதரிசி ஸ்ரீ வி. நல்லையா, நீதி மந்திரியின் பாராளுமன்றக் காரியதரிசி ஸ்ரீ குமாரசாமி, எதிர்க் கட்சி தோழர் ஸ்ரீ என். எம். பெறரு, சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் ஸ்ரீ குமாரகுலசிங்கம் செனட்டர் ஸ்ரீ கனகநாயகம், அரசாங்க ஏஜண்ட் ஸ்ரீ ஹட்சன் முதலிய பிரமுகர்கள் நீந்திக் கடல் கடந்த தமிழருக்கு நல்வரவு கூறினர்.

ஸ்ரீ நவரத்தினசாமி நீந்துதலில் உலக ரிகார்டை ஏற்படுத்தி இலங்கையை உலகமறியச் செய்து விட்டார். தமிழர் சமூகத்துக்கே உலக அரங்கில் மகத்தான சிறப்பை அளித்து விட்டார்.

# "உதவி புரியுங்கள்"

மேற்கண்ட தலைப்பில் 14–2–54 "கல்கி" இதழில் ஸ்ரீ டி. கே. ராஜகோபாலனின் கடிதம் வெளியாகி யிருந்தது. அவரும் அவர் மனைவியும் க்ஷயரோகத்தினுல் பிடிக்கப்பட்டு வறுமையின் காரணமாகச் சிகிச்சை செய்து கொள்ள இயலாத பரிதாப நிலைமையில் இருப்பதைப் பற்றிப் பின் வருமாறு எழுதி யிருந்தார்: "எனக்குக் கல்யாணம் ஆகிவிட்டது. அவளும் தாயில்லாதவள். ஒரு ஆண் குழந்தை இருக்கிறது. பல இடங்களில் வேலை தேடியும் வேலை கிடைக்காமல் இருக்கிறேன். இந்த நிலைமையில் எனக்கும் என் மனைவிக்கும் க்ஷயரோகம் என்று டாக்டர்கள் தெரிவித்து விட்டார்கள். க்ஷயரோக வைத்திய சாலைகளில் கட்டணமின்றி இடம் கிடைக்கவில்லை. என் மனைவியிடம் இப்போது தாலி ஒன்றுதான் இருக்கிறது. உயிருடன் இருந்து கொண்டு வைத்தியமும் இல்லாமல் சாப்பாட்டுக்கும் இல்லாமல் கஷ்டப்படுகிறோம். இதை விட உயிரை விடுவது மேல் அல்லவா!"

மேற்படி கடிதத்தைக் கண்ணுற்ற பின்வரும் அன்பர்கள் அந்த நிர்க்கதியான தம்பதிகளுக்குப் பொருள் உதவி செய்ய முன் வந்தார்கள்.

ஸ்ரீ எஸ். பட்டாபிராமன், கரோல்பாக், புது டில்லி. ரூ. 100; ஓர் அன்பர் ரூ. 11-6-0; ஸ்ரீமான்கள் ஆர். கே. வெங்கடசாமி, ஈரோடு, ரூ. 10-0-0; டி. எஸ். பஞ்சாபகேசன், கல்கத்தா, ரூ. 10-0-0; டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி, புது டில்லி, ரூ. 10-0-0; ஆர். சீனிவாசன், குரோம்

பேட்டை, ரூ. 10-0-0; பி. கே. ராமசாமி, பெருந்தலையூர் ரூ. 5-0-0; பி. கோவிந்தசாமி, புதுச்சேரி ரூ. 5-0-0; வி. நடேச நாயக்கர், கொச்சி ரூ. 2-0-0; ஜி. ஏ. விக்டர், மங்களூர் ரூ. 1-0-0; வி. குஞ்சிதபாதம், பொன்மலை ரூ. 1-0-0. ஆக ரூ. 165-6-0

"நிர்க்கதியாக இறக்க வேண்டியதுதானா!" என்ற நிலையிலிருந்த பிணியாளர்களுக்கு விரைந்து உதவி செய்ய முன்வந்த மேற்கண்ட நன்கொடையாளர்களைப் பெரிதும் பாராட்டி மனமார்ந்த நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸ்ரீ டி. கே. ராஜகோபாலன் தம்பதிகள் பெருந்துறையில் உள்ள ஸ்ரீ ராமலிங்கம் க்ஷயரோக வைத்திய சாலையில் மார்கழி 29உ சேர்க்கப்பட்டுச் சிகிச்சை பெற்று வருகிறார்கள். மேற்படி வைத்திய சாலை நிர்வாகிகள் இத் தம்பதிகளின் ஏழ்மையையும் திக்கற்ற நிலையையும் கருதி ஓரளவு சலுகை காட்டி வைத்திய சாலையில் சேர்த்துக் கொண்டு சிகிச்சை செய்ய இசைந்திருப்பதை நன்றியுடன் குறிப்பிட விரும்புகிறோம். எனினும், அவ்வாறு செலுத்தவேண்டிய சலுகைக் கட்டணத்துக்கும் இதர செலவுகளுக்கும் குறைந்த பட்சம் ஆயிரம் ரூபாய் தேவையாகும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. இந்த ஜீவகாருண்யப் பணிக்கு மேலும் பல நேயர்கள் முன் வந்து உதவி செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

# திரு. வி. க. மணிமண்டப நிதி

ராயப்பேட்டை முனிவர் திரு. வி. கலியாண சுந்தரனாரின் ஞாபகார்த்தமாக அப்பெரியார் பல காலம் வாசம் செய்து புனிதப்படுத்திய ராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபையை ஒட்டியுள்ள திறந்த வெளியில் திரு. வி. க. மணி மண்டபம் எழுப்புவதற்கு ராஜாஜி அவர்களால் அஸ்திவாரம் இடப்பட்டது.

மணி மண்டபத் திருப்பணிக்குத் தேவையாயுள்ள ஐம்பதினாயிரம் ரூபாயில் பதின்மூன்றாயிரம் ரூபாய்தான் இதுவரை கிடைத்திருக்கிறது.

புதிய தமிழ் ஆண்டில் நீங்கள் முதன் முதலில் செய்யும் நற்பணியாகத் திரு. வி. க. மணி மண்டப நிதிக்கு உங்கள் காணிக்கையை அனுப்பி வைக்குமாறு வேண்டிக் கொள்கிறேன். ஜய ஆண்டில் மணி மண்டபம் கட்டி முடிவதற்கு உங்கள் உதவியைக் கோருகிறேன்.

எஸ். சச்சிதானந்தம் பிள்ளை,
காரியதரிசி,
175-ஏ, லாயிட்ஸ் ரோடு, சென்னை-14.

திரு. வி. க. மணிமண்டப நிதிக்கு ஏற்கெனவே வெளியான தொகைகளுக்குப் பின்னர் கீழ்க்கண்ட நன்கொடைகள் அறிவிக்கப்பட்டிருக்கின்றன:

திருவாளர்கள்: வி. எஸ். தியாகராஜ முதலியார், திருவாரூர், ரூ. 1000; ராஜா சர் முத்தையா செட்டியார், சென்னை ரூ. 1000; ஸர் பி. டி. ராஜன் எம். எல். ஏ., மதுரை ரூ. 1000; திருப்புகழ் மணி டி. எம் கிருஷ்ணசாமி ஐயர், சென்னை ரூ. 600; கஸ்தூரி சீனிவாசன், "ஹிந்து" ஆசிரியர் ரூ. 500; டி. கோவிந்தராஜுலு நாயுடு, நகை வியாபாரம், சென்னை (முதல் தவணை) ரூ. 501; வி. எஸ். லோகநாத முதலியார் ரூ. 501; கமலக் கண்ண முதலியார், ராயப்பேட்டை: (இரண்டாம் தவணை) ரூ. 500; எம். வேதாசல முதலியார், செங்கல்பட்டு ரூ. 250.

திருவாளர்கள்: ஏ. சிவசங்கர முதலியார், தேனாம்பேட்டை ரூ. 101; ஏழுமலை நாயகர் ரூ. 101; ஆர். சம்பந்த நாயகர் ரூ. 101; மோகன கிருஷ்ணன் ரூ. 100; டி. எம். நாராயணசாமிப் பிள்ளை எம். எல். ஸி. ரூ. 100; ரவை மாணிக்க முதலியார், திருவல்லிக்கேணி ரூ.100; ஸ்டாண்டர்ட் வாக்குவம் ஆயில் கம்பெனி சென்னை உத்தியோகஸ்தர்கள் ரூ. 79-8; நடராஜா கல்விக் கழகம் திருவல்லிக்கேணி (ஒரு பவுன்) ரூ. 57; ஆர். சம்பந்த முதலியார், திருவாரூர் ரூ. 51; கேசவன் நாயர், லாயிட்ஸ் ரோட், சென்னை ரூ. 51; சண்முக முதலியார் ரூ. 50; ஆர். கண்ணப்ப நாயுடு, சீனிவாசபுரம் ரூ. 50; எஸ். பிஎஸ். எஸ். பிச்சையப்பா, தேவகோட்டை ரூ. 50; எம். அருணாசலம், ராயப்பேட்டை ரூ. 50; கே. பாஷ்யம் பி. ஏ. பி. எல். எம். எல். ஸி. மயிலாப்பூர் ரூ. 50; கே. என். சிவம், தியாகராயநகர் ரூ. 50; ஆர். வி. தனபாலன் ரூ. 25; சேப்பாக்கம் செண்டிரல் சர்வே ஆபீஸ் உத்தியோகஸ்தர்கள் ரூ. 25; திரு. எஸ். நரசிம்மலு நாயுடு, வேலூர் ரூ. 20; சின்ன சேலம் கோபால கிருஷ்ணன் மூலம் வரவு ரூ. 17; ஸ்ரீமதி புஷ்பம் நடராஜன், மதுரை ரூ. 15; ஸ்ரீ பி. பி. ரத்னவேலு முதலியார், சென்னை, ரூ. 11.

ரூ. 10. கொடுத்த அன்பர்கள்:—

திருவாளர்கள் டாக்டர் குணசேகரன், ராயப்பேட்டை; சாமி வேலாயுதம் பிள்ளை, நுங்கம்பாக்கம்; ஆர். எஸ். கிருபாகரன்; என். ஜி. சந்தான கிருஷ்ணன்; கே. எஸ். ராமசாமி சாஸ்திரியார், ராயப்பேட்டை.

டி. வி. பி. ஹாஸ்டல் மாணவர் சங்கம், திருவலஞ்சுழி ரூ. 6-8; திருப்புகழ் தொழும்பன் ரூ. 6-6-6; பி. எஸ். முத்து, பெங்களூர் ரூ. 6.

ரூபாய் ஐந்து கொடுத்த அன்பர்கள்:—ஸ்ரீமதி ஞானதிக்கம் மாணிக்கம்; திருவாளர்கள் தெய்வசிகாமணி ஆசாரியார், சென்னை; வித்வான் குஞ்சிதபாதம் பிள்ளை, நுங்கம்பாக்கம்; கே. ஏ. பி. விசுவநாதம், திருச்சி; வி. எஸ். விசுவநாதம் முதலியார், வாணியம்பாடி; டி. டி. எம். ராஜன், கூனூர்: மோகனவேலு செட்டியார்; எம். ஓ. அனசிங்கராச்சாரி, திருவல்லிக்கேணி; கே. என். வெங்கடாசலம், மதராஸ் கிருஸ்துவக் கல்லூரி; இ. நாராயணன், புது டெல்லி; ஐந்தாம் படிவ மாணவர், பெரமணநல்லூர் உயர்நிலைப் பள்ளி; ந. கோபால கிருஷ்ணன், ஸ்டேஷன் மாஸ்டர், சேர்ந்தனூர்.

திருச்சி ஸ்ரீ கே. ஏ. பி. விசுவநாதன் அவர்களின் சொற்பொழிவுத் தொண்டு மூலம் வரவு:— அங்கயற் கண்ணி செந்தமிழ்க் கழகம், மதுரைக் கல்லூரி, மதுரை ரூ. 151; மாணவர் தமிழ்ச் சங்கம், போர்ட் உயர்நிலைப்பள்ளி, கம்பம் ரூ. 125; ஸ்ரீ வெங்கடேசுவராக் கல்லூரி தமிழ் மாணவர் சங்கம், திருப்பதி ரூ. 105; போர்டு உயர் நிலைப் பள்ளி ஆத்தூர், ரூ. 101; திரு. வி. க. மணி மண்டப கால்கோள் விழாவில் வசூல் ரூ. 74.

ஸ்ரீமதி செண்பக அம்மாள், சிவன் கோயில் வார வழிபாட்டுச் சங்கம், சிவகாசி மூலம் வரவு ரூபாய் 155-8-0க்கு விவரம்:

ஸ்ரீமதிகள் செண்பகம்மாள், ரூ. 25; மாரியம்மாள் ரூ. 25; ஜானகியம்மாள், ரூ. 25; ப. பா. சீதாலக்ஷ்மி ரூ. 25; ராஜம்மாள், ரூ. 15; ரத்தினத்தாயம்மா, ரூ. 10; சங்கரேச்வரி, ரூ. 5; கு. சீதாலக்ஷ்மி, ரூ. 5; பல சகோதரிகளின் நன்கொடைகள் ரூ. 20-8-0.

# பூண்டி-உக்கடைத் திருமணம்



தஞ்சை ஜில்லா, பூண்டி திரு அ. கிருஷ்ணசாமி வாண்டையார் அவர்களின் செல்வத் திருக் குமாரன் ஸ்ரீ கி. துளசி ஐயாவுக்கும், உக்கடை திரு அ. அப்பாவுத் தேவர் அவர்களின் செல்வத் திருக்குமாரி பத்மாவதிக்கும் உக்கடையில் மார்ச் 25௳ வியாழக் கிழமை திருமணம் சிறப்பாகவும் கோலாகலத்துடனும் நடைபெற்றது. தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த பல பிரமுகர்களும், தமிழ் நாடெங்கிலுமிருந்து பல பிரபலஸ்தர்களும் திருமணத்துக்கும் மறு நாள் பூண்டியில் நடந்த வரவேற்பு வைபவத்துக்கும் விஜயம் செய்து சிறப்பித்தார்கள். 25௳ மாலை விகடக் கச்சேரி, நாட்டியக் கச்சேரிகளுடன் ஆலத்தூர் சகோதரர்கள் சக்கைப் போடாகக் கச்சேரி செய்தார்கள். மறுநாள் பூண்டியில் புல்லாங்குழல் கச்சேரி, பல தேச நடனங்கள் நடந்தன. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் அமோகமான சங்கீத மழை பொழிந்தார். இவ்வளவு வைபவங்களுடன் திருமணம் புரிந்து கொண்ட இளந் தம்பதிகள் நீடூழி வாழ்ந்து இல்லறம் புரிய இறைவன் தன்னருள் புரிவாராக! ★★★



# பூட்டுகளில் மிகுந்த வலியினால்

## நான் முடமாக்கப் பட்டிருந்தேன் — இப்பொழுது பரம சுகம்!

"க்ருஷன்" உபயோகித்ததனால் நான் அடைந்துள்ள அத்யாச்சரியமான பலன்களை நான் அவசியம் உங்களுக்குச் சொல்ல வேண்டும். வருஷக் கணக்காகக் கீல் வாதத்தினால் முடங்கிக் கிடந்தேன். பல தரப்பட்ட சிகிச்சைகள் செய்தும் நிரந்தரமான பலன் ஒன்றும் ஏற்படாது போயிற்று. ஆனால் மூன்று மாதங்களுக்குத் தவறாமல் ஒழுங்காக "க்ருஷன்" உட்கொண்ட பின்னர் அதன் உண்மையான குணங்களை உணர்வதுடன் ஏறக் குறைய எனது வியாதிக்கு முன்னிருந்த தன்மையையும் பெற்றிருக்கிறேன்.— A. R."

குடல்கள் நன்கு இயங்கி கழிவு பதார்த்தங்களைச் சரிவர வெளித் தள்ளத் தவறுவதால் விஷத் தன்மை வாய்ந்த அசுத்தங்கள் உள்ளேயே தங்கிவிடுகின்றன. இவைகளே கீல் வாய்வுக்குச் சாதாரணமான காரணம். க்ருஷனிலுள்ள ஆறுவித உப்புக்கள், இவ் விஷப் பொருள்கள் நன்கு வெளியேற்றப் படுமாறு உட்புற அவயவங்களைச் சரிவர இயங்கச் செய்ய உதவுகிறது. தினசரி 'க்ருஷன்' உட்கொள்ளுவது உங்களது குடல்களை ஒரே நிதானத்துடன் இயங்கச் செய்கிறது. இதைத் தொடர்ந்து உட்கொள்ளுங்கள்; கீல் வாயு ஒரு போதும் திரும்பி வராது.

**"க்ருஷன்"** உங்களது ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் உதவுகிறது

KSA—1

# வாட்டர்மன்ஸ் இங்க்

இப்பொழுது இந்தியாவில் முற்றிலும் இந்திய மூலப்பொருள்களால், பிரசித்தி பெற்ற வாட்டர்மன்ஸ் உயர்தர முறைப்படி தயாரிக்கப்படுகிறது.

**ஹெக்ஸா ப்ளூயிட் கூடியது**



**முனை வரை நிரப்பும் புட்டி**

நிரப்புவது சுலபம்

கையாளுவது சௌகரியம்.

**'லக்' வகை மூடி!**






அழுத்தமாக மூடும் - சுலபமாக திறக்கலாம்.

இங்க் கசியாது - விசேஷமான கற்றை அரிப்பைத் தடுத்து.

மையின் தரத்தை பாதுகாக்கும்.

இந்தியாவிற்கு ஏகபோக சலுகையாளர்கள்:

ரைட்எயிட்ஸ் (ஓரியண்ட்) லிமிடெட்.

மதராஸ்-1

பூரண விற்பனை ஏஜண்டுகள்:

டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கம்பெனி

மதராஸ் பம்பாய் கல்கத்தா டில்லி




மாமரத்து நிழலில் உட்கார்ந்துகொண்டே யாரையோ எதிர் பார்த்துக்கொண்டிருந்த இனியன் மாமரத்து இலைகள் கலகல வென்று காற்றில் அசைவதைப் பார்த்துக் கொண்டிருந்தான். இனியன் துடிதுடிப்போடு உட்கார்ந்திருந்தான். அவன் உள்ளத்தில் ஏதோ சிந்தனை சுழன்று கொண்டிருந்ததால் அவனால் அமைதியாக உட்கார்ந்திருக்க முடியவில்லை. பச்சைக் கரை போட்ட பளபள வென்று மின்னும் அவன் அணிந்திருக்கும் பட்டுத் துண்டுக்கும் மாவிலைகளுக்கும் அதிக வித்தியாசம் இல்லாமல் இருந்தது.

மழமழ வென்று இருந்த இனியனின் அழகிய உருவம், தாமரைக் குளத்தை ஒட்டினாற்போல் இருந்த மாந்தோப்பில் செதுக்கி வைத்திருந்த சிற்பம் போலிருந்தது. இனியன் தான் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு எழுந்தான். சூரிய வெளிச்சத்துக்காகக் கண்ணை மறைத்துக்கொண்டு தூரத்தில் யாராவது வருகிறார்களா என்று பார்த்தான். பிரகாசமான சூரிய வெளிச்சத்தில் அடர்ந்த மாந்தோப்பில் ஒரு இடத்திலும் ஒருவரையும் காணவில்லை.

மயிர்கள் அடர்ந்த இமைகளுடன் கூடிய அவன் பிரகாசமான கண்கள் துடிதுடித்துக் கொண்டிருந்தன. சுருக்க மில்லாத அவன் முகத்தில் ஆவலும், ஏக்கமும் ததும்பி நின்றன.

அவ்வப்போது வாய்க்குள் ஏதோ முனகிக் கொண்டான். அமைதி இல்லாது மாமரத்தைச் சுற்றிச் சுற்றி வந்தான். அவன் காலடி பட்டு மாமரத்து அடியில் கிடந்த காய்ந்த சருகுகளிலிருந்து 'சலசல' வென்று சத்தம் வந்தது.

காய்ந்த இலைகளின் சலசலப்புச் சத்தமும், அவன் விட்ட பெருமூச்சும் தவிர அந்தத் தோப்பில் வேறு சத்தமே இல்லை. மாந்தோப்புக்கு அப்பால் வெகு தூரத்துக்கு வெகு தூரம் பொன்னிறமான நெற்பயிர் கடல் போலப் பரவிக் கிடந்தது. ஆகாயம் தெளிவாக இருந்தது.

முன் எப்பொழுதையும் விட இன்று இனியனின் மன நிலை சரியாக இல்லை. தன்னுடைய காரியம் எல்லாம் வீணாகி விடுமோ என்று வேதனைப் பட்டான். தந்தையின் மனம் மாறாதோ என்று தவித்தான். தேன்மொழியை இந்தப் பிறவியில் எல்லாரும் அறியக் கைப்பிடித்துக் கல்யாணம் செய்துகொள்ள முடியாமல் போய்விடுமோ என்று ஏங்கினான். அப்படித் தந்தை சம்மதிக்காவிட்டால் தந்தைக்கு விரோதமாக இந்தக் கல்யாணத்தைச் செய்து கொள்வதை அவன் அவ்வளவாக விரும்பவில்லை. அதைவிடச் சாவதே மேல் என்று தீர்மானித்தான். சாவதை அவன் அவ்வளவாகப் பொருட்படுத்த வில்லை. அது தவிர்க்க முடியாதது. என்றாவது ஒரு நாள் அது வந்தே தீரும் என்பதை அவன் அறிந்திருந்தான். ஆனாலும் தேன்மொழியைத் தனியே தவிக்க விட்டு விட்டு அவன் சாக விரும்பவில்லை. தேன்மொழியைப் பற்றிய நினைவு அவனுக்கு அதிகக் கவலையை அளித்தது. அப்புறம் தேன்மொழியின் கதி என்ன ஆகும்! அவர் தந்தை என்ன பாடுபடுவார்!

இதே கேள்வியைத் தனக்குத் தானே பல தடவைகள் கேட்டுக் கொண்டான். திடீரென்று அவனுக்கு ஒரு புது உணர்ச்சி உண்டாயிற்று. சீச்சீ! சாவது கோழைகள் செய்யும் காரியம். திறமை யற்றவன், நெஞ்சில் உறுதி யில்லாதவன், வாழப் பயந்தவன் செய்யும் கேவலமான செயல். மனிதன் வாழத்தான் பிறந்தான். அதில் எவ்வளவோ ஏற்றத் தாழ்வுகள் இருக்கத்தான் செய்யும். அதை யெல்லாம் எதிர்த்துப் போராடி வெற்றி பெறுவதுதான் வாழ்க்கை. அதில்தான்

தெவிட்டாத இன்பம் இருக்கிறது. அந்த இன்பம் தான் உண்மையான இன்பம்.

இப்படி யெல்லாம் எண்ணிக் கொண்டே மா மரத்து அடியில் மண்டியிட்டு அமர்ந்தான். தோளில் கிடந்த துண்டை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டு மரத்தின் இலைகளூடே ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தான்.

திடீரென்று ஏதோ சத்தம் கேட்டு எழுந்தான். வெய்யில் நன்றாகக் காய்ந்து கொண்டிருந்தது. அவனுக்கு அருகில் யாரோ சிரித்துக் கொண்டிருந்தார்கள். பெண்ணின் இனிய குரலில் இருந்து எழும் சிரிப்பொலியாக இருந்தது. சிரிப்பொலி கொஞ்சம் கொஞ்சமாகச் சிறிதாகி நின்றது. திடீரென்று மீண்டும் புதுபலத்துடன் சிரிப்பொலி கிளம்பியது. தலையைத் தூக்கி அருகில் இருந்த மாமரத்தை அண்ணாந்து பார்த்தான்.

தேன்மொழி மரத்தில் நின்று கொண்டிருந்தாள். அழகாக இருந்த அவள் சிவந்த முகம் உப்பி இருந்தது. கலகலவென்று சிரித்ததால் அவள் வெண்பற்கள் முத்துக்கள் போல் மின்னின.

அலட்சியமாக ஒரு கிளையில் சாய்ந்து கொண்டு மாம்பழத்தைப் பறித்துக் கொண்டிருந்தாள். உடல் குலுங்கக் குலுங்க அவள் சிரித்ததால் அவள் நின்று கொண்டிருந்த கிளை இலேசாக ஆடியது. ஏன் சிரிக்கிறோம்! எதற்காகச் சிரிக்கிறோம் என்று நினைத்துப் பார்க்காமலே சிரிக்கிறாளோ என்னவோ! பெரிய கருத்த அவள் கண்கள் ஆனந்தத்தால் மின்னிக் கொண்டிருந்தன. எலுமிச்சை நிறத்தை யொத்த அவள் பொன்னிறமான காதுகள் கருமையாக இருந்த அடர்ந்து சுருண்ட மயிர்களுக்கு இடையே எட்டிப் பார்த்தது. கலைந்து கிடந்த மயிர் நெற்றி, கன்னம், தோள்களில் எல்லாம் மெதுவாகப் பட்டு ஆடி விளையாடிக் கொண்டிருந்தது.

குதூகலமாக அவள் மரத்திலிருந்து கீழே இறங்கினாள். சிரிப்பு நின்று விட்டது. ஆனால் அதனால் ஏற்பட்ட பெருமூச்சு நிற்கவில்லை. சில விநாடி இனியனையே பார்த்தாள். உதடுகள் துடித்தன. விசித்திரமாக அவள் முகம் விரிந்தது. சிரித்துக் கொண்டே அவன் பேசினான்:

"என்னத்தை நினைத்துக் கொண்டு இப்படிச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தீர்கள்!"

"உன்னையும் என்னையும் பற்றித்தான். நம்முடைய எதிர்காலத்தை எண்ணிக் கொண்டு தான்" என்றான் இனியன். தன் உள்ளம் ஏதோ சுருங்கி விட்டதை இனியன் உணர்ந்தான். அன்போடு தேன்மொழியைக் கூப்பிட்டுக் கொண்டு மாமரத்து அடிக்கு வந்தான்.

"ஏன் இப்படிச் சிரித்தாய்! என்னைப் பார்த்தால் உனக்குச் சிரிப்பாகவா இருக்கிறது!" என்று கேட்டுக்கொண்டே அவளுக்கு முன்னால் சென்று அவள் முகத்தைப் பார்த்தான்.

"என் நிலையில் நீங்களும் இருந்தால் அப்படித்தான் சிரிப்பீர்கள்" என்று சொல்லிக் கொண்டே அவள் மீண்டும் சிரிக்க ஆரம்பித்து விட்டாள்.

"இதோ பார் தேன்மொழி. ஏன் இப்படிச் சிரிக்கிறாய்!" என்று அழுத்திக் கேட்டான்.

இதனால் ஒரு பலனும் ஏற்படவில்லை. அவள் சிவந்த விரல்களால் வாயைப் பொத்திக்கொண்டு சிரித்ததைக் கண்டு இனியனுக்கும் சிரிப்புத்தான் வந்தது. அவள் பக்கம் சாய்ந்து கொண்டே கையை மெதுவாக எடுத்து அவள் கருங்கூந்தலை அன்போடு தடவினான். அவள் அடக்கமாகப் புன்னகை செய்து கொண்டிருந்தாள். ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

"இதோ பார்!" என்று சொல்லி அவள் முகத்தைத் திருப்பினான்.

அவள் தலையைக் குனிந்து கொண்டே ஓரக் கண்ணால் இனியனைப் பார்த்தாள்.

தேன்மொழியின் அந்தப் பார்வை இனியனை என்னென்னவோ செய்து விட்டது. அவன் அவளைப் பார்த்துக் கொண்டே இருந்தான். அவன் மனம் சிந்தித்துக் கொண்டிருந்தது.

'எத்தனையோ பெண்களை நான் பார்த்திருக்கிறேன். அவர்களை எல்லாம் விட உருவிலும் குணத்திலும் தேன்மொழியைப் போல் நான் பார்த்ததில்லை. குணத்திலும், பண்பிலும் தேன்மொழிதான் சிறந்தவள். நான் கண்ணை அசைத்தால் எத்தனையோ பேர் என் காலடியில் வந்து விழுவார்கள். நான் அதை விரும்பினேனா! அவர்கள் எல்லாம் பெண்களே அல்ல. பெண் உருவம் கொண்ட பொம்மைகள்; உணர்ச்சி யற்ற ஜடங்கள். அன்பும் பண்பும் அழகும் நிறைந்த பெண்கள் வெகு சிலர்தான் இருக்கிறார்கள். அவர்களில் தேன்மொழியும் ஒருத்தி. நான் அவளை நேசித்தேன்; நேசிக்கிறேன். அத்துடன் என் பெற்றோர்களையும், அவர்கள் அன்பையும், ஆதரவையும் நான் அதிகமாக நேசிக்கிறேன். தேன்மொழிக்காக அவர்கள் அன்பை இழக்க விரும்பவில்லை. ஆமாம். தேன்மொழியைவிட என் பெற்றோர்கள் மேலானவர்கள்தான். ஆனாலும் தேன்மொழி யில்லாமல் என்னால் வாழ முடியாது. நான் இல்லாமல் தேன்மொழி வாழ முடியாது. அதனால் தான் நான் தவித்துக் கொண்டிருக்கிறேன்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டான்.

அவள் சிரித்தவாறே, "நீங்கள் என்னைப் பார்ப்பதைப் பார்க்கும்போது என் இதயம் மலர்கிறது. உங்கள் பேச்சைக் கேட்டு என் உள்ளம் பூரிக்கிறது. ஏதாவது சொல்லுங்கள்" என்றாள்.

"உன்னைப் போலக் கவலை இல்லாமல் என்னால் இன்று சிரித்துப் பேச முடியவில்லையே என்று தான் எனக்குக் கவலையாக இருக்கிறது."

"அப்படி என்ன கவலை வந்துவிட்டது? ஏன் ஊருக்குப் போகப் போகிறீர்களா!"

"ஊருக்குப் போவதற்காக நான் எதற்காகக் கவலைப் படப் போகிறேன்."

"பின் ஏன் கவலைப்பட வேணும்? தங்கள் தந்தையார் ஏதாவது சொன்னார்களா!"

"அப்பா என்ன சொல்லப் போகிறார்கள்!" என்று இழுத்தான் இனியன்.

தேன்மொழி மெதுவாகச் சிரித்தாள்.

"உன்னுடைய சிரிப்பைப் பார்த்தாலே என்னுடைய கவலைகள் எல்லாம் பறந்து போய்விடு



றேது'' என்று சொல்லிக் கொண்டே சற்று நெருங்கி உட்கார்ந்தான் இனியன்.

தேன்மொழி அவனை ஒரு பார்வை பார்த்து விட்டு அன்போடு சொன்னாள்.

''நம் கல்யாண விஷயமாகத் தங்கள் தந்தையிடம் ஏதாவது பேசினீர்களா!''

''பேசினேன்.''

''அவர் என்ன சொன்னார்!'' என்று தைரியமாகக் கேட்டாள் தேன்மொழி. இதைக் கேட்டு விட்டு இனியனின் கம்பீரமான முகத்தைப் பார்த்தாள்.

இனியனுக்கு இந்தக் கேள்விக்கே பதில் சொல்லச் சங்கடமா யிருந்தது. வார்த்தைகள் தொண்டைக்குள் சிக்கிக் கொண்டன.

தேன்மொழி அவனை வெறித்துப் பார்த்தாள். இனியன் ஒருமுறை கண்களைச் சுழித்து மூடி மீண்டும் திறந்து தேன்மொழியின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். அப்பொழுது அவன் முகத்தில் மகிழ்ச்சி குமிழி யிட்டது என்றாலும் தேன்மொழியின் நிமிர்க் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் ஒரு கணம் திகைத்துப் போய் விட்டான்.

''என்ன இருந்தாலும் நீங்கள் உங்கள் குடும்பத்துக்கு ஒரே மகன். உங்கள் தந்தையின் மனம் கோணாமல் நடக்க வேண்டியது உங்கள் முக்கியமான பொறுப்புகளில் ஒன்று'' என்றான்.

''அது எனக்குத் தெரியாதா! அதனால் தான் மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறேன். இருந்தாலும் நீ மட்டும் உன் தந்தைக்கு ஒரே மகன் இல்லையா!'' என்று கேட்டான்.

''என் வீடும் வாசலும் குடும்பமும் என்னால் கெட்டுப் போகாது. உங்கள் விஷயம் அப்படி இல்லையே!'' என்றான்.

இனியன் மனம் தெளிவற்றுக் குழம்பினான். தன் தந்தையின் அபிப்பிராயத்தை அவளிடம் சொல்லி விடலாமா! என்று நினைத்தான். 'சட்' டென்று மனத்தை மாற்றிக் கொண்டான். அவசரப்பட்டு ஒன்றும் தேன்மொழியிடம் சொல்லக் கூடாது. அவள் மனசு மிகவும் மென்மையானது. அத்துடன் குறைவற்றது; சுத்தமானது. அப்படி நாம் சொல்வதால் அவளுக்கு ஏதாவது ஏற்பட்டாலும் ஏற்பட்டு விடும் என்று எண்ணினான். அது சம்பந்தமான பேச்சை அப்பொழுதே மாற்ற விரும்பினான்.

''சின்னப் பையன் மாதிரி மாமரத்தில் ஏறிக் கொண்டிருந்தாயே! கீழே விழுந்து விட்டால் என்ன செய்வது!''

''கிளி மூக்கு மாம்பழத்தை நீங்கள் தின்றதில்லையா! அதன் ருசியைக் கண்டவர்கள் மரத்தின் மேல்தான் ஏறுவார்கள். ஆகாயத்தில் கூடப் பறக்க மாட்டார்களா!''

''அவ்வளவு இனிமையான பழமா!''

''ஆமாம்.''

''எங்கே எனக்கு ஒன்று கொடேன், சாப்பிட்டுப் பார்க்கலாம்.''



"ஒன்றுதானே வைத்திருக்கிறேன்!"

"ஒன்று இருந்தால் எனக்குத் தரக்கூடாதா?"

"இது அணில் கடித்த பழம்."

"அணில் கடித்த பழமா! அப்படியானால் மிகவும் ருசியா யிருக்குமே!"

"அணில் என்றால் உண்மையான அணில் இல்லை. நான்தான்" என்றாள்.

"அடாடா! அது இன்னும் ருசியாயிருக்குமே!" கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் அவன் கையிலிருந்த மாம்பழத்தை 'வெடுக்' கென்று பிடுங்கிக் கொண்டான்.

தேன் மொழி இனியனைப் பார்த்தாள்; அவன் கையில் இருந்த மாம்பழத்தைப் பார்த்தாள்; அதில் தான் கடித்திருந்த பகுதியைப் பார்த்தாள்; அப்பொழுது தன் உள்ளத்தில் தோன்றிய உணர்ச்சிகளை மறைத்துக் கொள்வதற்காகத் தலையைத் தாழ்த்திக் கொண்டாள்.

"சரி! நான் வருகிறேன். போய் வருகிறேன். நாழியாகி விட்டது" என்று எழுந்தான்.

தேன்மொழி ஒரு தரம் சுற்றும் முற்றும் பார்த்து விட்டுச் சென்றாள். இனியன் அவளோடு தொடர்ந்து சென்றான்.

'சட்'டென்று அவள் முன்தானையைப் பிடித்து நிறுத்தி, "என்ன இது! இன்று திமிர் என்று கிளம்பி விட்டாய்!" என்று கேட்டான்.

"இன்று என் மனசை என்னவோ செய்கிறது. உட்கார்ந்திருக்க முடியவில்லை. அதுதான் கிளம்பி விட்டேன்" என்றாள் தேன்மொழி.

"இங்கே என் பக்கத்தில் கொஞ்சம் நேரம் உட்காரு" என்று அவள் தோளைப் பிடித்து அமுக்கி உட்கார வைத்தான் இனியன்.

தேன்மொழி பேசாமல் உட்கார்ந்தாள்.

இனியன் தன் கருணைக் கண்களால் தேன் மொழியைக் கூர்ந்து பார்த்தான். அந்த அன்புப் பார்வையில் தேன் மொழி அப்படியே தன்னை மறந்து சொக்கிப் போய் விட்டாள்.

"தேன்மொழி!"

"என்ன!"

அவன் அவளைப் பார்த்தான்; அவளோ அவனைப் பார்க்க முடியாமல் கண்களை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டாள்.

"நீ என்னை எந்த நிலைமையிலும் மறந்து விட மாட்டாயே! அப்படி ஏற்பட்டு விட்டால் அது எனக்கு எவ்வளவு வருத்தத்தைக் கொடுக்கும் தெரியுமா!" என்றான் இனியன்.

"என்ன அப்படிக் கேட்டு விட்டீர்கள்! நான் ஒரு போதும் உங்களை மறக்க மாட்டேன். எந்த நிலைமையிலும் நான் உங்களுக்குப் பாரமாகவும் இருக்க மாட்டேன். உங்கள் சுதந்திரம், கௌரவம் எதுவும் என்னால் வீணாக நான் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன். உங்களை மறப்பது என்பது இந்த ஜன்மத்தில் முடியாத காரியம். ஆனால் அதற்காகவும் உங்களுக்குத் தொந்தரவாக வாழ மாட்டேன்" என்றாள்.

தேன்மொழியின் கருத்து இனியனுக்கு விளக்கமா யிருந்தது. அவள் உண்மையாக உணர்ந்ததைத்தான் பேசினாள். பேசியதை நிறைவேற்றும் ஆற்றலும் அவளுக்கு உண்டு. அதனால் இனியன் தேன்மொழியிடம் இத்தனை நாளும் காட்டாத விசேஷ அன்பைக் காட்டினான். அவனையும் அறியாமல் அவள் மலர்க் கரத்தைப் பிடித்தான்.

"என் செல்வமே! எனக்காக நீ மிகவும் கஷ்டப்படத்தான் செய்கிறாய்!" என்றான்.

தேன்மொழி இனியன் மேல் சாய்ந்து கொண்டு மெதுவாகச் சிரித்தாள். அவள் முகம் எல்லாம் சிவந்து விட்டது. அவன் குரல் மென்மையாக இருந்தது; அதில் அழுத்தம் இருந்தது.

இனியன் தொடர்ந்து சொன்னான்:

"தேன்மொழி என் வீட்டில் உருவாகிக் கொண்டிருக்கும் சூழ் நிலையைப் பார்த்தால் எனக்குப் பயமாக இருக்கிறது. உன்னை அடிக்கடி சந்திக்க முடியாமல் கூட இருக்கும் போலிருக்கிறது. உன் அன்பைப் பெறுவதற்கு மிகப் பெரிய தடைகள் எல்லாம் ஏற்படும் போலிருக்கிறது" என்றான்.

"நான் என்னுடைய அன்பு முழுவதையும் உங்களுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும் என்பதே என் ஆசை. உங்கள் மகிழ்ச்சிக்காக நான் எதை வேணுமானாலும் தியாகம் செய்யத் துணிந்து விட்டேன். அவசியமானால் உங்கள் நல்வாழ்வுக்காக நான் என் உயிரைக்கூடத் தியாகம் செய்து விடுவேன். என்னிடம் இருக்கும் உயர்ந்த பொருள் அது ஒன்றுதானே!" என்றாள்.

இனியனுக்கு அவள் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் 'சுரீர்' 'சுரீர்' என்று மனத்தில் தைத்தது. தன் தந்தைக்குத் தேன் மொழியின் இந்த உயர்ந்த அன்பு தெரிய வில்லையே என்று வேதனைப் பட்டான். இப்பேர்ப் பட்ட உயர்ந்த குணம் படைத்தவளைக் கீழ்ச் சாதியைச் சேர்ந்தவள் என்று சொல்லுகிறார்களே! என்று மனம் கலங்கினான். அன்பும் ஆதரவும் கலந்த குரலில் தேன்மொழியைக் கூப்பிட்டான். "தேன் மொழி! உன்னிடம் என்ன என்னவோ சொல்ல நினைத்தேன். உன்னுடைய மனத்தைத் திறந்து காட்டி விட்டாய். அதனால் நான் எதுவுமே இப்பொழுது சொல்ல முடியவில்லை" என்றான்.

பின் வெகுநேரம் வரை அவர்கள் மௌனமாக இருந்தார்கள். அவர்கள் இருவரைத் தவிர அங்கு வேறு யாரும் இல்லை. இருவரும் ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு நெருங்கி உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அப்படி அவர்கள் உட்கார்ந்திருப்பது அருமையான இன்பத்தை அனுபவித்துக் கொண்டு மோனத்தில் இருப்பது போல் இருந்தது. அந்தக் காட்சி மிக்க ஆனந்தமாகவும், இன்பம் கலந்தும் இருப்பதுபோல் இருந்தது.

இனியன் தேன்மொழியைத் திரும்பிப் பார்த்தான். அவளது கரிய பெரிய கண்கள் அவன் முகத்துக்கு நேராக நின்று சிரித்தன; அது அன்புச் சிரிப்பு; இனியனை வாழ்விக்க வந்த சிரிப்பு!

அவர்கள் இருவரும் அங்கிருந்து கிளம்பினர். ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்தனர்.

தூரத்தில் தேன்மொழி சென்று கொண்டிருந்தாள். அவளை மணந்து கொள்வதில் இருக்கும் தடையை எண்ணி இனியன் கலங்கினான்.

திடீரென்று ஏதோ சலசலப்புக் கேட்டது. இனியன் திரும்பிப் பார்த்தான்.

யாரோ ஒரு மனித உருவம் அவனுக்கு வெகு சமீபத்தில் இருந்து வேகமாக மறைந்து சென்றது போலிருந்தது. அந்த உருவம் சென்றதைப் பார்த்தால் இத்தனை நாழியும் அவனையே தொடர்ந்து கொண்டு வந்து விட்டுச் சென்றது போலிருந்தது.

இனியன் திக்பிரமை பிடித்ததுபோல் நின்றான்.

* * *

தேன்மொழி படுக்கையில் படுத்திருந்தாள். அன்று என்னவோ இரவில் தூக்கம் வரவில்லை. அவளுக்குப் பகலில் இனியனைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்ததெல்லாம் நினைவுக்கு வந்தது. வழக்கத்துக்கு விரோதமாக இன்று இனியனின் பேச்சில் சோகம் கலந்து கிடந்ததை நினைத்துப் பார்த்தாள். எப்பொழுதும் சற்றுத் தூரத்தில்

அமைப்பில் உயர்ந்த
கைகடிகாரம்

**ஸ்டைலோ**

நேர்த்தியான தயாரிப்புக்கும் நீண்ட கால உழைப்புக்கும் பெயர் பெற்றது.







| | |
|---|---|
| Rolled gold Rect. | Rs. 110 |
| Fancy | Rs. 140 |
| Extra Fancy | Rs. 160 |



# Gani & sons

55, RATTAN BAZAAR, 190, MOUNT ROAD,
MADRAS

AGENTS
FOR
**OMEGA - WEST END - FAVRE - LEUBA**
WATCHES

இருந்து பேசுபவர் சற்று நெருக்கமாக உட்கார்ந்தே பேசினுர். ஏதோ கிடைக்காத பொருளைப் போல், கைக்கு அகப்படாத பொருளைப் போல் அவர் என்னைப்பற்றி நினைத்து விட்டாரோ!

இந்தச் சமயத்தில் எதிரில் இருந்த பொருள் இனியனாக மாறி அவளைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது. இனியன் தன்னிடம் நெருங்கி வருவதுபோல் உணர்ந்தாள். அவளுக்குக் கையைப் பற்றி அழைப்பது போலிருந்தது. இக் காட்சியை இன்னும் தெளிவாக அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையில் அப்படியே கண்களை மூடிக் கொண்டாள். சந்தேகமே இல்லை, இனியனே தான். அவன்தான் அவளை நெருங்கி வந்து கொண்டிருந்தான். தன் கையில் உள்ள மலரை எடுத்து அவள் கருங்குழலில் சூடினுன். அப்படி அவள் திரும்பி நின்று கொண்டிருக்கும் அழகைப் பார்த்து மகிழ்ந்து போனுன். இந்த இன்பமயமான காட்சியைப் பார்த்து அனுபவித்தபடியே தேன்மொழி தூங்கி விட்டாள்.

•• •• ••

**ப**றவைகள் பாடிக் கொண்டிருந்தன.

சுந்தரியும் மாணிக்கமும் சுந்தரியின் கிராமத்து ஜனங்களின் உதவியைக் கொண்டு அழகாக வெட்டிய குளத்தங்கரையில் உட்கார்ந்திருந்தனர். அவர்களோடு அந்தக் கிராமத்துக்குக் குடியானவரும் உட்கார்ந்திருந்தார். காற்று லேசாக வீசிக் கொண்டிருந்தது. மாணிக்கம் பெரிய காரியத்தைச் சாதித்தவன்போல் உட்கார்ந்திருந்தான்.

முன் எப்போதையும்விட அவன் உடம்பு புதுத் தெம்புடன் விளங்கியது. சீக்கிரமே தான் ஏதோ இத்தனை நாள் நினைத்து வந்த காரியத்தைச் செய்து முடித்துவிடப் போவதுபோல் அவனுக்குப் பட்டது. கிராமத்தில் வேலை யெல்லாம் முடிந்து விட்டதால் அவனும் சுந்தரியும் அன்று சென்னைக்குத் திரும்புவதாக இருந்தார்கள். போவதற்கு முன் தாங்கள் வெட்டிய குளத்தையும், தாங்கள் முன்னின்று செய்த சீர் திருத்தங்களை ஒருதரம் கண்ணுல் பார்க்க வேண்டும் என்பதற்காக மாணிக்கமும் சுந்தரியும் கிராமத்தைச் சுற்றிப் பார்த்து விட்டு வந்து குளக்கரையில் அமர்ந்திருந்தனர்.

மாணிக்கம் கிராமத்து மனிதரைப் பார்த்தான். ஒரு தரம் தொண்டையைக் கனைத்து விட்டுக் கொண்டு பேச ஆரம்பித்தான் :

"எங்கள் வேலை முடிந்து விட்டது. இன்று நாங்கள் சென்னைக்குப் போகலாம் என்று இருக்கிறேம்; இங்கு தங்களுடன் வந்து பழகிய கொஞ்ச நாளில் நாங்கள் எவ்வளவோ விஷயங்களைத் தெரிந்து கொண்டோம்" என்றுன்.

மாணிக்கத்தின் அன்பு நிறைந்த குரல் குடியானவரை என்னவோ செய்து விட்டது. அவர்கள் கிராமத்தை விட்டுப் போவதை எண்ணி எண்ணி, வேதனைப் பட்டார்.

மாணிக்கம் குடியானவரின் முகத்தைப் பார்த்தான். அவர் முகத்தில் உள்ள சுருக்கங்கள் அவர் மன நிலையை எடுத்துக் காட்டுவதுபோலிருந்தது. அவனுக்கும் அவரைப் பிரிவது சங்கடமாகத் தான் இருந்தது. சுந்தரியைப் பார்த்தான். அவளும் அதே நிலையில்தான் இருந்தாள் என்பதை அவளுடைய சுருங்கிய முகம் எடுத்துக் காட்டியது.

மாலை வெய்யில் அந்தவெளி யெங்கும் பரவிக் கிடந்தது. அவ்வப்போது கருத்த மேகங்கள் சூரியனை மறைத்தன. அப்போது பூமியின் மேல் விழுந்த நிழல்கள் சற்று நேரத்துக் கெல்லாம் தரையில் வெய்யிலினுல் ஏற்பட்ட பிளவில் போய் மறைவதைப் போலிருந்தது!

"போகலாமா!" என்றுன் மாணிக்கம்.

"இன்னும் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருப் போமே" என்றுள் சுந்தரி.

அவளுக்கு அந்த இடம் ரொம்பவும் பிடித்திருந்தது. முன்னே பரந்து கிடக்கும் வெளியில் தோன்றிய அவள் கிராமம் இப்பொழுது அவள் கண்முன் தோன்றியது. அங்கிருந்த கட்டிடங்களும் ஜனங்களும் அவளுக்கு மிகவும் பழகியவர்கள். இதனுல் அவள் மனம் மகிழ்ந்தது.

சிந்தித்தவாறே அவள் தூரத்தில் பார்த்துக் கொண்டிருந்தாள். அங்கிருந்த மேகங்கள் மெல்ல மெல்ல ஊர்ந்து வந்து கொண்டிருந்தன. தன்னுடைய கிராமமே தன்னை நோக்கி நகர்ந்து வருவது போல அவளுக்குத் தோன்றியது.

மாணிக்கம் அசையாமல் சுந்தரியின் முகத்தைப் பார்த்தான். மரத்தின் இடுக்கின் வழியாக வந்த சூரியன் ஒளியில் தெரிந்த அவள் முகத்தில் ஒரு பக்கத்தில் அவள் தலையில் சூடியிருந்த மலர்களின் நிழலும் காற்றில் ஆடிய தலை மயிரின் நிழலும் விழுந்தன. அகலத் திறந்த கண்களுடன் அவள் உட்கார்ந்திருந்த காட்சி, காலம் எல்லாம் பார்த்துப் பார்த்து அநுபவிக்கும் எழில் ஓவியம் போல் இருந்தது. இது மாணிக்கத்துக்கு ஒரு புது உணர்வை ஊட்டியது.

சுந்தரி இதை யெல்லாம் கவனிக்காமல் எங்கோ வெகு தூரத்தில் பார்த்துக் கொண்டிருந்தாள்.

குடியானவர் அவர்கள் இருவரையும் மாறி மாறிப் பார்த்தார். "நீங்கள் இருவரும் நல்ல ஜோடிதான். இப்படி மனமொத்துக் கணவனுக்கு மனைவியும்; மனைவிக்குக் கணவனும் கிடைப்பது கஷ்டம். விரைவில் உங்கள் திருமணத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள். திருமணம் முடிந்தவுடன் நாங்கள் இந்த ஊரில் உங்களுக்குப் பெரிய வரவேற்பு அளிக்கப் போகிறேம்" என்றுர்.

இதைக் கேட்ட மாணிக்கமும், சுந்தரியும் திடுக்கிட்டனர். மாணிக்கம் பொருள் பொதிந்த சிரிப்புடன் சுந்தரியைப் பார்த்தான். சுந்தரி என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் ஒரு கணம் திகைத்தாள். மறு கணம் புன்னகை பூத்தாள்.

சட்டென்று அங்கிருந்து எழுந்தாள். அவளுடன் மாணிக்கமும் குடியானவரும் எழுந்தனர். கிராமத்தை நோக்கி நடந்தே சென்றனர். கிராமத்தின் தெரு வீதியில் அவர்கள் மூவரும் நடந்து செல்லும் போது எதிர்ப்படுகிறவர்கள் எல்லாம் அவர்களை மிகுந்த மரியாதையுடன் வணங்கினர். விரும்பியவர்கள் எல்லாம் அவர்களைப் பார்த்து அவர்கள் செய்த சேவையைச் சொல்லிப் புகழ்ந்தனர். அவர்களைச் சுற்றி யிருந்த எல்லாம் வேலிகள், வீடுகள் – அந்தக் கிராமம் முழுவதுமே அழகாகக் காட்சி அளித்தது. ஜனங்கள் உற்சாகத்துடன் அவர்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். அவர்களை நோக்கி ஒவ்வொரு வீடாக நகர்ந்தன. ஒரு கட்டிடத்துக்கு எதிரில் வந்து மூவரும் நின்றனர். "நான் சிறு குழந்தையாக இருந்தபோது இந்த வீட்டில் இங்குதான் உட்கார்ந்து கொண்டிருப்பேன்" என்று சொல்லி ஓர் இடத்தைக் காண்பித்தாள் சுந்தரி.

இந்தச் சமயத்தில் அவர்களை நோக்கி யாரோ ஒரு ஆள் ஓடி வந்தான். எதையோ சுந்தரியிடம் கொடுத்தான். சுந்தரி அதைப் பார்த்து அப்படியே திகைத்து நின்றுள்.

பக்கத்து வீட்டில் கலகலவென்று சிரிக்கும் குழந்தையின் இனிய குரல் ஒலி கேட்டது. அது பின்னுல் ஏற்பட விருக்கும் நல்ல காரியத்துக்கு அறிகுறி போலத் தோன்றியது. (தொடரும்)



# அப்பர்ணசாலையைப்பார்!

ரா. பி. சேதுப் பிள்ளை

முன்னாளிலே பாரத நாட்டில் வாழ்ந்த முனிவர்கள் பல்லாயிரவர். அவர்களுள் சாலப் பெருமை வாய்ந்தவர் அகத்தியர். அவர் முத்தமிழும் முழுதுணர்ந்த வித்தகர்; திரு முனிவர் என்றும், குறு முனிவர் என்றும் முத்தமிழ் முனிவர் என்றும் பெயர் பெற்றவர். அவரது தவச் சாலையில் தமிழ் மணம் கமழும்; தமிழ்த் தென்றல் விளையாடும்; அச் சாலையைச் சூழ்ந்த சோலையில் தேனுண்டு சுழலும் வண்டுகளும் தெள்ளிய தமிழ்ப் பாட்டிசைக்கும்.

இத்தகைய தவச்சாலையைக் காண ஆசையுற்றான் வனவாசம் செய்த இராமன். மங்கையருக் கணியாய சீதையோடும், தன்னலம் துறந்த தம்பியோடும் வந்து சேர்ந்த இராமனைக் கண்ட முனிவர் அகமும் முகமும் மலர்ந்தார்; தமிழ் வரவேற்புத் தந்தார். அருந்தமிழ் முனிவரைக் கண்டு அளவிறந்த மகிழ்ச்சியுற்ற இராமன் அவர் அடிபணிந்து வணங்கினான்.

"நின்றவனை வந்தநெடி யோன்அடி பணிந்தான்
அன்றவனும் அன்பொடு தழீஇ அழுத கண்ணன்
நன்றுவர வென்றுபல நல்லுரை பகர்ந்தான்
என்றுமுள தென்தமிழ் இயம்பிஇசை
[கொண்டான்"

என்று அக் காட்சியைக் கம்பர் அழகுறப் பாடினார். அடி பணிந்த திருமகனை ஆர்வமுற எடுத்தணைத்தார் முனிவர்; ஆனந்தக் கண்ணீர் உகுத்தார்; ஆசிமொழி கூறினார். இவ்வாறு இராமனை வரவேற்கும் பேறு பெற்ற முனிவரையும், அவர் பேணி வளர்த்த அருமைத் தமிழ் மொழியையும் மனமாரப் போற்றுகின்றார் கம்பர்; இனிமையும் அழகும் வாய்ந்த செம் மொழியைத் தென் தமிழ் என்று துதித்தார்; அம்மொழி அன்று இன்று என்றபடி என்றும் இயங்கும் தன்மையை மனமாரப் போற்றி "என்றுமுள தென் தமிழ்" என்று வாழ்த்தினார்.

தமிழ் முனிவர் வாயிலாகப் பஞ்சவடிச் சோலையின் சிறப்பினை அறிந்தான் இராமன். ஒருமையுடன் இருந்து இறைவனை வழிபடுதற்கேற்ற சூழ் நிலையில் அமைந்த அச் சோலையின் செழுமையைத் தேமதுரத் தமிழால் எடுத்துரைத்தார் முனிவர்.

"ஓங்குமரன் ஓங்கிமலை ஓங்கிமணல் ஓங்கிப்
பூங்குலை குலாவுகுளிர் சோலைபுடை விம்மித்
தூங்குதிரை ஆறுதவழ் சூழலதோர் குன்றின்
பாங்கர்உள தால்உறையுள் பஞ்சவடி மஞ்ச"

"மைந்தனே! பஞ்சவடி யென்னும் பெயருடைய அழகிய ஆலஞ்சோலை ஒன்று உண்டு. அடுக்கடுக்காக மரமோங்கி, மலையோங்கி, மணலோங்கிக் கண்ணுக்கினிய காட்சி தரும் சூழலில் அமைந்துள்ளது அச் சோலை. கொத்துக் கொத்தாக மலர்களும் கனிகளும் மல்கிய அச் சோலையின் இடையே கோதாவிரியாறு தவழ்ந்து செல்கின்றது. அங்கே கன்னி வாழைகள் குலை தள்ளும். செந்நெற் பயிர் செழித்து ஓங்கும். நறு மலர்கள் தேன் சொரியும். தெய்வப் பொன்னி போன்ற நதியொன்று புனிதமாய் ஓடும். இம் மங்கையாகிய சீதையோடு அங்குள்ள அன்னமும் குருகும் அன்போடு விளையாடும் என்று செஞ்சொற்களால் எடுத்துரைத்தார் முனிவர்.

"கன்னியின வாழைகனி
சுவைகதிர் வாகின்
செந்நெல்உள, தேன்ஒழுகு
போதும்உள. தெய்வப்
பொன்னியெனல் ஆயபுனல்
ஆறும்உள, போதா
அன்னம்உள, பொன்இவளொடு
அன்பின் விளையாட"

என்ற அருமையான மொழிகளைக் கேட்ட பொழுது அகம் குளிர்ந்தான் இராமன்; அகத்திய முனிவரிடம் விடை பெற்றுக் கொண்டு அவர் காட்டிய திசையிற் சென்று



பஞ்சவடிச் சோலையை வந்தடைந்தான்; அச் சோலை, முனிவர் சொல்லியவண்ணமே அமைதியும் அழகும் வாய்ந்த பூம்பொழிலாக இலங்கக்கண்டு சில காலம் அங்கே தங்கிச் செல்ல ஆசையுற்றான். ஐயன் கருத்தறிந்த இலக்குவன் கிளைகளும், கழிகளும், இலைகளும், தழைகளும் தேடிக் கொணர்ந்து அச் சோலையில் ஒரு பர்ணசாலை அமைத்தான். தவநெறியை மேற்கொண்ட இராமனும் சீதையும் அச்சாலையிலே தங்கியிருந்தனர்.

அந்தப் பர்ணசாலையைக் கண்டாள் இராவணன் தங்கையாகிய சூர்ப்பனகை. வஞ்சக் கோலம் புனைந்து, அன்னமென நடந்து வந்து இராமன் முன்னே நின்று சாகசம் செய்தாள்; அப்போது பர்ணசாலையின் உள்ளே மின்னொளி போல் விளங்கிய மங்கையைக் கண்ணுற்றாள்; திகைத்தாள்:

" பண்புற நெடிது நோக்கிப்
படைக்குநர் சிறுமை யல்லால்
எண்பிறங்கு அழகிற்கு எல்லை
இல்லையாம் என்று நின்றாள் "

'இத்தகைய பேரழகு வாய்ந்த பெண்ணைக் கண்ட கண்களால், பிற மாதரைக் காண்பரோ இவ் ஆடவர்' என்றெண்ணிக் கறுவினாள்; இராமன் இல்லாத வேளை பார்த்து அம் மங்கையைக் கவர்ந்து செல்ல முனைந்தாள். அப்போது பர்ணசாலையின் புறத்தே காவல் செய்து நின்ற இலக்குவன் அரக்கியின் மூக்கறுத்து மானபங்கம் செய்தான். அவள் நாசி அறுபட்ட காரணத்தால் இன்றும் பஞ்சவடி யென்னும் தபோவனத்திற்கருகே, 'நாசிக்' என்னும் நகரம் நின்று நிலவுகிறது.

மூக்கிழந்த சூர்ப்பனகை பதறினாள்; கதறினாள்; தன் உற்றார் உறவினரை யெல்லாம் ஓலமிட்டு அழைத்தாள்; இறுதியாக இலங்கை வேந்தனிடம் சென்று தன் குறையை முறையிட்டாள். " அரசே! பஞ்சவடிச் சாலையில் ஒரு பாவை இருக்கின்றாள்; அவள் அழகைச் சொற்களால் எடுத்துரைக்க

இயலாது. அவனை உன்னிடம் கொண்டு வரக் கருதிய என்னை அங்கிருந்த ஆடவன் ஒருவன் இவ்வாறு அலங்கோலப் படுத்தி விட்டான்'' என்று உருக்கமாகப் பேசினன். அந் நிலையில் தங்கை சொல்லிய மங்கையை அடைந்தே தீர வேண்டும் என்று ஆசை கொண்டான் அரக்கர் கோமான்; வஞ்ச வேடம் புனைந்து பஞ்சவடிச் சாலையை அடைந்தான். மாயமானை விடுத்து மங்கையின் மனத்தை மயக்கினன்; பர்ணசாலையில் தன்வர் தனியளாய் இருந்த பாவையைக் கண்டு இன்ப வாரியில் மூழ்கினன். எனினும் நிறையமைந்த மாதரை முறையிகந்து தீண்டினல் தலைவெடிக்கும் என்று முன்னமே பிறந்திருந்த சாபத்தை நினைந்தான். உடனே சீதை இருந்த பர்ணசாலையை நிலத்தோடு பெயர்த்து எடுத்துத் திண்ணிய தேரின்மீது ஏற்றித் தென்னிலங்கையை நோக்கிச் சென்ருன். அரக்கன் இயற்றிய வஞ்சனையையறிந்த சீதை அழுதாள்; அலறினள். என்னைக் காப்பார் யாரும் இல்லையோ என்று கதறினள். அப்பொழுது விரைந்து ஓடி வந்தான் கழுகரசனுகிய சடாயு. அரக்கனது தேரைத் தடுத்தான். அவனேடு போர் தொடுத்தான். தேரைத் தடைசெய்த பறவையின் சிறகைச் சிவன் தந்த வாளால் அறுத்து எறிந்தான் இராவணன். அந்நிலையில் செயலற்றுச் சோர்வுற்று மண்மேல் விழுந்தான் கழுகின் மன்னன்.

மாயமானைக் கொன்று திரும்பிய வீரர் இருவரும் பஞ்சவடிச் சோலையில் பர்ணசாலையைக் காணுது மனம் பதைத்தனர்; புதையல் எடுத்த இடம்போற் கிடந்த குழியை நோக்கினர். பர்ணசாலையோடு பாவை மறைந்த மாயம் அறியாது மயக்கமும் தியக்கமும் உற்றனர்; சிறிது தூரம் சென்ற போது குற்றுயிராய்க் கிடந்த சடாயுவைக் கண்டனர்; கண்ணீர் சொரிந்தனர். வீரர் இருவரையும் கண்ட கழுகரசன் "மைந்தரே! மங்கையாகிய சீதையை இராவணன் நிலத்தொடும் பெயர்த்தெடுத்துத் தேர்மீது வைத்து விரைந்து சென்ருன். என்னல் ஆனவரை தடுத்தேன். அரன் தந்த வாளால் அவன் என் சிறகை அறுத்து விட்டான். இது இப்பொழுது தான் நிகழ்ந்தது'' என்று சொல்லி முடித்தான்.

"வடுக்கண்வார் கூந்தலாளை
இராவணன் மண்ணி னேடும்
எடுத்தனன் ஏகுவானை
எதிர்ந்தெனது ஆற்றல்கொண்டு
தடுத்தனன், ஆவதெல்லாம்,
தவத்து அரன் தந்த வாளால்
படுத்தனன் இங்கு வீழ்ந்தேன்
இது இன்று பட்டது என்ருன்''

இச் செய்தியைச் சொல்லி முடித்தவுடன் சடாயு உயிர் நீத்தான். எனவே பஞ்சவடிச் சோலையினின்றும் பர்ணசாலையோடு சீதையை இலங்கை வேந்தன் எடுத்துச் செல்லும்பொழுது வழியிலே கண்ட சடாயுவின் வாய்மொழியை மரண வாக்கு மூலம் போல் கம்பர் எழுதிக் காட்டியுள்ளார்.

பர்ணசாலையில் இருந்த சீதையை அசோக வனத்தில் சிறை வைத்தான் அரக்கர்

கோமான். அவன் ஆணையால் பல்லாயிரம் அரக்கியர் அல்லும் பகலும் அப் பர்ணசாலையைக் கண்ணிமையாது காவல் செய்தனர்.

இவ்வாறு சிறையிருந்த சீதையை இராம தூதனாக வந்த அனுமன் தேடிக் கண்டு கொண்டான். மாசடைந்த மேனியோடும் மாற்றாத ஆடையோடும் கண்ணீர் சொரிந்து நின்ற மங்கையே சீதை என்று ஐயந்திரிபற அறிந்தான். காவல் புரிந்த அரக்கியரை மந்திர வலிமையால் தூக்கத்தில் ஆழ்த்தி விட்டு, அவலமே உருவாய் அமைந்த சீதையின் கண்ணெதிரே தோன்றி இராம தூதன் என்று தன்னை அறிவித்தான். அவன் உள்ளத் திலமைந்த அன்பினை அறிந்த சீதை தனது நெருக்கடியான நிலையினை அவன் உள்ளங் கொள்ள உணர்த்தினாள். அவள் சொல்லிய சொற்களைச் செவி வாயாகப் பருகிச் சிந்தை உருகி நின்றான் அனுமன். அப்போது சீதை "அருங்கடல் கடந்து வந்த அப்பனே! அரக்கருக்குரிய இந்த அசோக வனத்தில் நான் அடி வைக்கவில்லை. பஞ்சவடிச் சோலையில் என் மஞ்சனைய இலக்குவன் கட்டிய பர்ணசாலையினுள்ளே இன்றும் இருக்கிறேன். வஞ்சனையால் என்னைக் கவர வந்த அரக்கன் என் மேனி தீண்டுதற்கு அஞ்சி, பர்ண சாலையை நிலத்தொடு பெயர்த்து எடுத்து இங்கு வைத்துள்ளான். அதனை உன் மெய்யுணர் கண்களால் காண்பாயாக" என்று வேண்டினாள்.



"ஆண்டு நின்றும் அரக்கன் அகழ்ந்துகொண்டு
ஈண்டு வைத்தது இளவல் இயற்றிய
நீண்ட சாலையோடு நிலைநின்றது
காண்டி ஐய! நின் மெய்யுணர் கண்களால்"

என்று சீதை சொல்லிய பொழுது அப் பர்ண சாலையைப் பார்த்தான் அனுமன். அக மகிழ்ந்தான். சிறையிருந்த செல்வியின் தவ நிலையைக் கண்டு உள்ளம் தழைத்தான். வணங்கி விடை பெற்றுக்கொண்டு மீண்டும் கருங் கடல் கடந்து, இராமனிடம் போந்தான். அத் தலைவன் மனத்திலிருந்த ஐயத்தையும், துயரத்தையும் அகற்றுமாறு "ஐயனே! கண்டனன் கற்பினுக்கு அணியைக் கண்களால்" என்று தொடங்கி, இலங்கையில் தான் கண்ட மாசற்ற காட்சியை மணிமொழி களால் எடுத்துரைப்பானாயினான்.

"வேலையுள் இலங்கை என்னும்
  விரிநகர் ஒருசார் விண்தோய்
காலையும் மாலைதானும்
  இல்லதோர் கனகக் கற்பச்
சோலையங்கதனில் உம்பி
  புல்லினால் தொடுத்ததூய
சாலையின் இருந்தாள் ஐய, தவம்
  செய்த தவமாம் தையல்"

என்று சிறையிருந்த சீதையின் செம்மையை ஒரு சொல்லோவியமாக எழுதிக் காட்டினான் அனுமன். "ஐயனே, கடல் சூழ்ந்த இலங்கைமா நகரில் கதிரவன் ஒளி புகாத கற்பகச் சோலையில் இளைய வீரன் தொடுத் தமைத்த பர்ணசாலையில் வாடிய மேனியளாய்த் தவம் புரியும் தேவியைக் காணும் பேறு பெற்றேன்" என்று அனுமன் சொல்லிய பொழுது பஞ்சவடிப் பர்ணசாலை இராமன் உள்ளத்திலே மீண்டும் காட்சியளித்தது. முத்தமிழ் முனிவர் செஞ்சொற்களால் புகழ்ந்துரைத்த பஞ்சவடிச் சோலையும், அங்கு அன்பு நிறைந்த மனத்தினனாகிய தம்பி ஆர்வத்தோடு கட்டிய பர்ணசாலையும், அப் பர்ணசாலையோடு சீதையைக் கவர்ந்து சென்ற அரக்கனைத் தடுத்துத் தெய்வ மரணம் எய்திய சடாயுவின் சீலமும், அசோக வனத்தில் சிறையிருந்தும் அரக்கர் நிலத்தில் அடி தோயாமல் பர்ணசாலையில் இருந்து கண்ணீர் வடித்துக் கடுந்தவம் புரிந்த சீதையின் கற்பும் அலை அலையாக இராமன் மனத்திலே எழுந்து அவன் உணர்ச்சியை உருக்கிவிட்டன.

இலங்கையில் போர் முடிந்த பின்னர் சீதையின் சிறை வாழ்க்கை தீர்ந்தது. அவள் ஆற்றிய அருந்தவம் முடிந்தது. பர்ண சாலையை விட்டு அரியாசனத்தில் இராமனோடு இனிதமர்ந்தாள் சீதை.

பஞ்சவடியில் சீதை இருந்த தவச்சாலை அன்று முதல் இன்றளவும் புனிதமான இடமாகப் போற்றப் படுகின்றது. ஆற்றங் கரையிலமைந்த பஞ்சவடித் தலத்தில் ஒரு தபோவனமும், சீதையம்மன் குகையும் இப் போதும் காட்சி தந்து வருகின்றன.

கீழ்கண்ட
புதியரக ஊர்காய்கள்
தயாரித்துள்ளனர்

**புதினு தொக்கு · மல்லி தொக்கு**
**இஞ்சி சட்னி · நளன் தொக்கு**
**ஆவக்காய் · நார்த்தங்காய் ஊர்காய்**
**பச்சைமிளகா சட்னி · கடுமாங்காய்**
**எலிமிச்சங்காய் ஊர்காய்**
**P.V. சாம்பார் பொடி**

**P. வெங்கடாசலம்**
**காண்டிமெண்ட்ஸ்**
**சென்னை - 1**
ஸ்தாபிதம் :

---

சிறப்பும் - சிக்கனமும் சேர்ந்து விளங்கும்

# TITAN

மார்க்கு

## பெய்ண்டு
## வார்னிஷ்-இனமல்




•

முதன் முதலாக தென்னிந்தியாவில் நவீன இயந்திரங்களுடன் பெரிய தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட்டு, சென்ற 5 வருஷங்களாக தென்னிந்திய மக்களால் பெரும்பான்மையாக ஆதரிக்கப்பட்டு வருகின்றன. விஞ்ஞான ஆராய்ச்சியில் பெயர்பெற்ற டாக்டர் P. கிருஷ்ணமூர்த்தி, M. A., D. Sc., அவர்களால் ஆரம்பித்து நடத்தப்பட்டு வருகிறது.




டிடான் பெய்ண்டு - டிடான் வார்ணிஷ் - டிடான் இனமல்

விலை விவரங்களுக்கும், 24 வர்ணங்களடங்கிய ஷேட்கார்டுக்கும் உடனே எழுதுங்கள்

**TITAN PAINT & VARNISH CO., LTD., PODANUR, S. India**




## 5. சந்திப்பு

சேனாதிபதியும் வீரர்களும் எழுந்து கப்பல் மேல் தளத்திலேயே பூபதியை விட்டு விட்டுக் கீழே சென்றனர். பூபதி மீண்டும் சாளரத்தைப் பார்த்தான். சாளரத்தின் கதவு மூடியபடியே இருந்தது.

'சாளரம் மீண்டும் திறந்துகொள்ளாதா? அந்த அழகி எட்டிப் பார்க்கமாட்டாளா?' என்ற கேள்விகளைப் பூபதி தனக்குத்தானே கேட்டுக் கொண்டான். உடனே குழலை எடுத்து ஊதினான். அவன் குழல் ஊதத் தொடங்கிய சிறிது நேரத்துக்கெல்லாம் 'டப்' பென்று சாளரக் கதவு திறந்து கொண்டது. மீண்டும் அந்தத் தாமரை போன்ற முகம் தெரிந்தது.

பூபதியின் குழலோசை சட்டென நின்றது. அவன் அவளைப் பார்த்தான். அந்த முரட்டு மனிதர்கள் யாரும் அங்கே இல்லாததால் அவனுக்கு இப்பொழுது எங்கிருந்தோ தைரியம் வந்து விட்டது. கம்பீரமாக நிமிர்ந்து அவளைப் பார்த்தான்.

அவள் இதைப் புரிந்து கொண்டு விட்டாள். கலீர் என்று தன் வெண் பற்கள் தெரியச் சிரித்தாள்.

பிறகு, "திருட்டுக் கூட்டத்தினர் யாரும் இங்கே இல்லையா?" என்று மெல்லிய குரலில், ஆனால் தெளிவான குரலில் கேட்டாள்.

பூபதி அவளது இனிமையான குரலைக் கேட்டதும் மெய் மறந்து போனான்.

"ஒருவரும் இல்லை. நல்லவேளை. நீ ஒரு மெழுகுப் பொம்மை என்று அல்லவோ நினைத்தேன்? நீ நிஜமாகவே ஓர் உயிருள்ள பொம்மையா?" என்று கேட்டு விட்டுச் சிரித்தான் பூபதி.

"நீங்கள் கவலையற்றிருக்கிறீர்களே! நீங்கள் இப்பொழுது இருக்கும் அபாயகரமான நிலைமையை அறிந்திருந்தால், உங்களுக்குச் சிரிப்பு வருமா?" என்று கேட்டாள் அந்தப் பெண்.

பூபதி மீண்டும் சிரித்து விட்டு, "என் நிலைமை எனக்குப் புரிந்துதான் இருக்கிறது. நான் மாடு மேய்த்துக் கொண்டிருந்த போது ஒரு நாள் இந்தக் கூட்டத்தினர் திடீரென வந்து என்னைக் கட்டித் தூக்கிக் கொண்டு வந்தார்கள். அந்த நிமிஷத்திலிருந்து நான் அபாயத்தில் இருக்கிறேன் என்பது எனக்கு நன்றாய்த் தெரியும். ஆனால் நம்மை மீறி நடக்கும் திடீர்ச் சம்பவங்களைக் கண்டு பயந்து நடுங்கினால் மட்டும் வரப் போகும் அபாயம் நம்மை விட்டு நீங்கி விடுமா? அபாயம் நம்மை நெருங்கி வரும் போது, தைரியத்தைக் கைவிட்டு விடாமல், அதை வெல்லும் உபாயத்தைக் கண்டு பிடிக்க முயல வேண்டும்...!" என்றான்.

"ஆகா! கதைகளிலும் காவியங்களிலும் வரும் வீர புருஷர்களைப் போலல்லவா பேசுகிறீர்கள்? உங்கள் பேச்சைக் கேட்டு என் உடம்பு சிலிர்க்கிறது! முதலில் உங்கள் குழல் இசையைக் கேட்டு என்னை நானே மறந்தேன்" என்று அவள் கூறிக்கொண்டிருக்கும் போதே பூபதி குறுக்கிட்டு, "இப்பொழுது என் பேச்சைக் கேட்டதும் எல்லாவற்றையும் மறந்து விட்டாயாக்கும்!" என்று பரிகாசமாகக் கூறிவிட்டுச் சிரித்தான்.

அவளும் சிரித்தாள். "நீங்கள் பலே கைகாரர்! உங்களைப் பார்த்தால் மாடு மேய்ப்பவராகவே தோன்றவில்லையே!"



"பின்னே எப்படித் தோன்றுகிறது?" என்று கேட்டான் பூபதி.

"ராஜகுமாரர் மாதிரி தோன்றுகிறது. அற்புதமாகக் குழல் ஊதுகிறீர்கள். உங்களுடைய இணையற்ற வேணு கானம் சிறையில் அடைபட்டுக் கிடக்கும் என்னைக் கந்தர்வ லோகத்துக்குத் தூக்கிச் சென்று விட்டது" என்றாள்.

பூபதி சிரித்துக் கொண்டே, "நீயும் தான் அழகாக ராஜகுமாரியைப் போல் இருக்கிறாய். சிறையில் அடைபட்டுக் கிடக்கிறாய். என்ன செய்யலாம்! அது சரி; நான் கேட்கிற கேள்விகளுக்குத் தயவு செய்து பதில் சொல்லு பார்க்கலாம். இது யாருடைய கப்பல்? இது எங்கே போகிறது? இந்த முரட்டு மனிதர்கள் யார்? என்னத்துக்காக என்னைப் பிடித்துக் கொண்டு போகிறார்கள்? நீ எப்படி இந்த முரடர்களிடம் சிக்கினாய்? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் கீழே இறங்கி வந்து பதில் சொல்லு பார்க்கலாம்!" என்றான்.

அவள், "கீழே இறங்கி வருவதா? அது முடியாத காரியம். இன்று இரவு பத்து மணிக்கு மேல் இதே இடத்தில் வந்து என்னைச் சந்தியுங்கள். அப்பொழுது எல்லா விவரங்களையும் சொல்லுகிறேன். இப்பொழுது நாம் இங்கே பேசுவது மிகவும் அபாயம். காவலர்கள் பார்த்து விட்டால் உங்களையும் சிறையில் அடைத்து விடுவார்கள். சர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்!" என்றாள்.

பூபதி, "சரி. அப்படியே சந்திக்கிறேன். இரவு மணி பத்து ஆகிவிட்டது என்று எனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டான்.

"கப்பலில் 'டாண் டாண்' என்று இரவு ஒரு மணியோசை கேட்கும். அது சரியாகப் பத்து மணிக்குக் கேட்கும். அந்த ஓசை கேட்டதும் அவரவர்கள் படுக்கப் போய் விடுவார்கள். அதிலிருந்து பொழுது விடிகிற வரையில் எனக்கு விடுதலை. அறைக் கதவைத் திறந்து விடுவார்கள். அப்பொழுது நீங்கள் இங்கே வந்தால் நிம்மதியாகப் பேசலாம். என்னை இந்த இடத்தில் சாளரத்தின் வழியே பார்த்ததைப் பற்றி யாரிடமும் வாயைத் திறக்காதீர்கள். ஜாக்கிரதை!" என்று கூறி விட்டு அந்தப் பெண் சாளரத்திலிருந்து மறைந்தாள். மறு கணம் சாளரக் கதவு தானாகவே சாத்திக் கொண்டது.

பூபதி அவ் விடத்தை விட்டு நகர்ந்து கப்பலின் பல இடங்களையும் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தான். நீலக் கடலும் நீல வானமும் எத்தனை தடவை பார்த்தும் அலுக்கவில்லை. ஆழ் கடலைக் கிழித்துக் கொண்டு சென்ற கப்பல் பூபதியின் மனத்தில் ஒரு புறம் மகிழ்ச்சியையும் ஒரு புறம் பீதியையும் அளித்தது. என்ன நேருமோ என்று அவன் மனம் இடைவிடாது துடித்தது.

ஆனால் காலையில் அவன் கண்ட அந்தப் பெண்மணியின் முகம் அவன் மனத் திரையில் தோன்றி ஓரளவு அமைதியைத் தந்தது. கப்பலில் அவனுக்குக் காலைச் சிற்றுண்டியும் பாலும் வழங்கப் பட்ட பிறகு பகல் சாப்பாடும் சிறந்த முறையில் பரிமாறப் பட்டது. பூபதிக்கு இதெல்லாம் பார்க்க ஆச்சரியமாயிருந்தது.

மாலை வந்தது. சூரியன் அஸ்தமித்தது. இரவும் வந்தது. நேரம் ஆக ஆகப் பூபதியின் இருதயம் வேகமாக அடித்தது.

டாண், டாண்! டாண், டாண்!

மணியோசை மிகவும் பலமாகக் கேட்டது. காலையில் பார்த்த மேல்மாடிச் சாளரத்துக்கு அருகில் பூபதி ஆவலோடு நின்றான். 'கிறீச்' என்ற சத்தம் கேட்டது. தேவ கன்னிகையைப் போன்ற அழகிய பெண் ஒருத்தி கை வளைகள் குலுங்க அங்கே தோன்றினாள்.

பூபதிக்கு ஆச்சரியத்தினால் மூச்சே நின்று விடும் போலிருந்தது. அவளும் பூபதியை அதிசயத்துடன் பார்த்தாள். பூரண சந்திரன் வானத்தையும் கடலையும் தன் குளிர்ந்த கிரணங்களைப் பொழிந்து இன்பமயமாக்கிக் கொண்டிருந்தான். கப்பலின் மேல் தளத்தில் பூபதியும் அந்தப் பெண்ணும் பாதுகாப்பு வேலியின் மேல் சாய்ந்த வண்ணம் நின்றனர். (தொடரும்)




மாடி ஜன்னல் அருகில் போய் நின்று கீழே தெருவை எட்டிப் பார்த்த கிருஷ்ணமூர்த்தி தபால்காரர் தன் வீட்டு வாசற்படியில் காலை வைத்து ஏறுவதைக் கவனித்தான். சரேலென்று கீழே இறங்கி அவர் கொடுத்த கடிதத்தை வாங்கிக் கொண்டு மீண்டும் மாடிக்குப் போனான். தபால் முத்திரையையும் கையெழுத்தையும் பார்த்தவுடன் கடிதம் யாரிடமிருந்து வந்திருக்கிறது என்பதை ஊகித்தவனாய் அவசர வேகத்தில் உறையைக் கிழித்துக் கடிதத்தைப் படித்தான். ஆங்கிலத்தில் ஏழெட்டு வரிகளில் எழுதியிருந்த அந்தக் கடிதம் கிருஷ்ணமூர்த்திக்கு அளவில்லாத மகிழ்ச்சியைக் கொடுத்தது. மூன்று நான்கு முறை கடிதத்தைப் படித்தான்.

அப்போது மல்லிகைப்பூவின் பரிமள கந்தமும், கால் மெட்டியின் இனிய நாதமும் ஒன்று கலந்து அவனுடைய நாசியையும் செவிகளையும் தாக்கி அவன் மனைவி ருக்மிணியின் வருகையை அறிவிக்கவே, கிருஷ்ணமூர்த்தி கடிதத்தை வேகமாக மடித்துச் சட்டைப் பையில் மறைத்துக் கொண்டு திரும்பிப் பார்த்தான்.

"என்ன கடிதாசு?" என்று கேட்டாள் அங்கே வந்த ருக்மிணி.

"கடிதாசியா? ஏது கடிதாசு? நீ பார்த்தாயா?" என்று கேட்டான்.

"பார்த்ததனால் தான் கேட்கிறேன். தபால்காரர் கொடுத்து விட்டுப் போனாரே?"

"ஓஹோ! அப்படியா? சரி. கடிதம் வந்திருக்கிறது. எங்கே, சொல் பார்க்கலாம்! யாரிடமிருந்து வந்திருக்கும் என்று?"

"எனக்கு ஜோஸ்யம், ஆருடம் முதலியன தெரியாது. நீங்கள் சொல்லக் கூடுமானால் சொல்லுங்கள். இல்லையேல் வேண்டாம்" என்று சொல்லிச் சற்றுச் சிணுங்கினாள்.

"அடி அசடே! அதற்குள்ளே கோபித்துக் கொண்டு விட்டாயே! உன் தங்கையின் கணவர் எழுதியிருக்கிறார். வருகிற சனிக்கிழமை உன் அருமைத் தங்கை ஸ்ரீமதி சத்யபாமா அவர்கள் இங்கே விஜயம் செய்கிறார்களாம். ரயிலடிக்குச் சென்று அவர்களை அழைத்துப் போகுமாறு அடியேனுக்குக் கட்டளை பிறந்திருக்கிறது" என்று சொல்லிக் கொண்டே கடிதத்தை அவளிடம் கொடுத்தான் கிருஷ்ணமூர்த்தி.

கடிதத்தைப் பெற்றுக் கொண்ட அவள், "எனக்கு இங்கிலீஷ் படிக்கத் தெரிந்தால் நான் ஏன் இப்படி இருக்கிறேன்? நீங்கள் சொன்னால் சரிதான். சனிக்கிழமையா வருகிறாள்! அடே அப்பா? எத்தனை நாளாயிற்று, நான் பாமாவைப் பார்த்து! ஐந்து வருஷங்கள் இருக்கலாம் என்று நினைக்கிறேன். போகிறது! இப்பொழுதாவது நினைத்துக் கொண்டு வருகிறாளே! அந்த மட்டில் திருப்திதான்" என்று சொல்லிக் கொண்டே கடிதத்தை மீண்டும் அவனிடமே கொடுத்தாள்.

"உனக்குச் சந்தோஷந்தானே?"

"அதென்ன அப்படிக் கேட்கிறீர்கள்! உங்களுக்குக் கூடத்தான் சந்தோஷமாக இருக்கும். சொந்தத் தங்கையைக் காட்டிலும் மைத்துனியிடம்தானே உங்களுக்கு வாஞ்சை? அவளுக்கும் உங்களிடம் கொள்ளை அன்பு. 'தாய், தகப்பன் இல்லாத எனக்கு அக்காவும் அத்திம்பேரும் தான் தாய் தந்தையர்' என்று அவளே வாய்க்கு வாய் சொல்லுவாளே" என்று சொல்லிச் சற்று நிறுத்தினாள். அப்பொழுது அவள் கண்களில் நீர் சுரந்ததைக் கிருஷ்ணமூர்த்தி கவனித்து விட்டான். அவள் சிந்தனையை வேறு பாதையில் திருப்ப எண்ணியவனாய், "சரி! நாழிகை ஆகிறது. நான் கச்சேரிக்குப் போய் விட்டு வருகிறேன். வரும்போது செலவுக்கும் பணம் ஏற்பாடு செய்து கொண்டு வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே கிளம்பினான்.

வழியெல்லாம் ஏதோ நினைத்த வண்ணம் தன்னுள்ளே சிரித்துக் கொண்டே போனான் கிருஷ்ணமூர்த்தி. நாட்கள் நெருங்கிக் கொண்

டிருந்தன. கிருஷ்ணமூர்த்தி பணத்தைப் பணம் என்று பாராமல் வாரிச் செலவு செய்து வரப்போகிற பெண்ணுக்கு எதெது வாங்கலாம், என்னென்ன பிடிக்கும் என்று யோசித்து யோசித்து அவற்றை வாங்கிச் சேர்ப்பதில் மும்முரமாக இருந்தான்.

ருக்மிணியும் சும்மா இல்லை. தாங்கள் குடியிருக்கும் வீட்டைத் தன் சொந்தச் செலவில் பழுது பார்த்து ஒட்டடை அடித்துச் சுவர்களுக்குச் சுண்ணாம்பு பூசச் செய்தாள். ஒரு பெரிய ஜாபிதா போட்டு மளிகைச் சாமான்களை வரவழைத்தாள்.

வெள்ளி போய் சனிக் கிழமை வந்தது. விடியற் காலை நாலரை மணிக்கே கிருஷ்ண மூர்த்தி விழித்துக் கொண்டு ரயிலடிக்குப் போகத் தன்னைத் தயார் செய்து கொள்வதில் முனைந்தான்.

சென்னையி லிருந்து வரும் ரயில் ஏழு மணிக்கே வந்து விடுவதால், சரியாக ஆறரை மணிக்கே ரயிலடிக்குப் போய் விட்டான். ரயிலும் ஒரு நிமிஷம் முன் பின் வராமல் குறித்த நேரத்துக்கு வந்து விட்டது. ரயிலை ஒரு தரம் வெள்ளோட்டமாகப் பார்த்தான் கிருஷ்ண மூர்த்தி. ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டிக் கொண்டு, தன்னைக் கவனிக்கும் அந்தப் பெண்ணை அவன் கண்கள் தேடி யலைந்தன. யார் யாரோ தலையை நீட்டிக் கொண்டிருந்தார்களே அல்லாமல், கிருஷ்ண மூர்த்தி எதிர்பார்த்த அந்தப் பெண்ணைக் காணவில்லை. என்ஜின் முதல் 'கார்டு' வண்டி வரையில் ஒவ்வொரு பெட்டியாய்ப் பார்த்து விட்டான். ரயிலை விட்டுக் கீழே இறங்கி வெளியே போய்க் கொண்டிருக்கும் ஜனக் கும்பலைக் கவனித்தான். அந்த வண்டியில் அவள் வரவில்லை என்று நிச்சயமாகத் தெரிந்து கொண்ட பின்தான் பிளாட்பாரத்தை விட்டு நகர்ந்தான் கிருஷ்ணமூர்த்தி.

அவனுக்கு உள்ளமும் உடலும் சோர்ந்து போயின. அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. கடிதம் எழுதி விட்டு ஏன் அந்தப் பெண் வரவில்லை என்று அவனால் கண்டு பிடிக்க முடியவில்லை. எதற்கும் தபால் வரும் என்று நினைத்தவனாய்த் தபால் ஆபீசுக்குப் போனான். சோதனையாக அன்று அவனுக்குத் தபாலே இல்லை. சரி, இருக்கட்டும், பார்ப்போம் என்று நினைத்தவனாய் வீட்டுக்குப் போனான். அங்கே அவனுக்கு ஒரு அதிசயம் காத்திருந்தது. அவன் மைத்துனி பாமாவும், மனைவி ருக்மிணியும் கூடத்தில் சந்தோஷமாகச் சிரித்துப் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்து வியப்பு மேலிட்டவனாய், "பாமாவா? வா அம்மா! எப்பொழுது வந்தாய்?" என்று கேட்டான்.

"நன்றாயிருக்கிறது. நீங்கள் அவளை வரவேற்கிற விதம்! குழந்தை ரயிலடி யெல்லாம் உங்களைத் தேடு தேடென்று தேடி, வேர்த்து விறுவிறுக்கச் சோர்ந்து போய் வந்திருக்கிறாள். ரயிலடிக்குப் போவதாகச் சொல்லி விட்டு நீங்கள் எங்கே போய் விட்டீர்கள்?" என்று கேட்டாள் ருக்மிணி.




கிருஷ்ண மூர்த்தி ஒன்றும் பேச முடியாமல் திண்டாடிப் போனான். ஆனாலும் சமாளித்துக் கொண்டவனாய், "நான் ரயிலடிக்குத் தான் போனேன். எதிரே ஆபீஸ் மானேஜர் குறுக்கிட்டு விட்டார். அவருடன் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்ததில், உரிய சமயத்தில் ரயிலடிக்குப் போக முடியாமல் போயிற்று" என்று புளுகினான். தான் ரயிலடிக்குப் போய் ஏமாந்ததை ஆண் பிள்ளையான அவன் ஒப்புக் கொள்வானா!

அன்று முழுவதும் ருக்மிணியும் பாமாவும் பற்பல விஷயங்களைப் பற்றிப் பேசிப் பொழுதைப் போக்கினர். என்னென்ன சினிமாப் பார்ப்பது, கடைகளில் என்னென்ன சாமான்கள் வாங்குவது என்பதைப் பற்றிப் பேசி முடிவு செய்து கொண்டிருந்தனர். கிருஷ்ண மூர்த்தி என்ற ஒருவன் அந்த வீட்டில் இருப்பதாகவே நினைக்க வில்லை ருக்மிணி. அவ்வளவு சந்தோஷம் தன் தங்கை அங்கே வந்ததில். தன் கணவன் அவளுக்காக வாங்கி வைத்திருந்த பொருள்களை யெல்லாம், பாமாவிடம் கொண்டு வந்து காட்டி, "பாமா! இவைகளை வாங்குவதற்கு உன் அத்திம்பேருக்கு எவ்வளவு அநுபவம் வேண்டும், பார்த்தாயா? இதோ இந்தப் புடவையைப் பார். இதைத் தேடி வாங்குவதற்கு நூறு கடை ஏறி இறங்கி விட்டாராம்" என்று ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டு வந்து அவள் முன் பரப்பினாள் ருக்மிணி.

அவற்றைப் பார்த்த பாமா அசந்து போனாள். "இவை எல்லாம் எனக்குத்தானா, அத்திம்பேர்?" என்று வியப்புடன் கேட்டாள்.




கிருஷ்ண மூர்த்தி பதில் சொல்வதற்குள், ருக்மிணியே குறுக்கிட்டு, "எல்லாம் உனக்குத்தான், பாமா! உனக்கு என்றுதான் வாங்கி யிருக்கிறார்" என்றாள்.

பாமா அந்த வீட்டுக்கு வந்து ஒரு வாரம் தான் ஆயிற்று. அதற்குள் கிருஷ்ண மூர்த்தியிட மிருந்த பணம் எல்லாம் ரயில் வேகத்தில் செலவாகிக் கொண்டிருந்தது. அந்த வீட்டில் பாமாவுக்கு ராஜோபசாரம் நடந்தது. தினம் விருந்து மயம்தான். இடைவேளைக்கு எத்தனை ரக டிபன். மளிகைக் கடையில் பற்று ஏறிக் கொண்டே போயிற்று.

பகலில் ஒரு நாள் பாமா மாடி ஹாலில், மின்சார விசிறிக் கடியில் வழக்கம்போல் தூங்கிக் கொண்டிருந்தாள். ருக்மிணி சமையற் கட்டில் இடை வேளைக்குப் பட்சணம் தயாரித்துக் கொண்டிருந்தாள். அப்போது அங்கே வந்து நின்றான் கிருஷ்ணமூர்த்தி. அவன் கண்கள் கலங்கி யிருந்தன. முகம் சோர்ந்து போய் இருந்தது.

"ஏன், என்ன விசேஷம்?" என்று கேட்டாள் ருக்மிணி!

"ஒன்றுமில்லை. நான் சற்று தந்தி ஆபீஸ் வரையில் போய் விட்டு வருகிறேன்" என்றான் கிருஷ்ணமூர்த்தி.

"ஏதாவது விசேஷம் உண்டோ?"

"சுபத்ராவிடமிருந்து ஒரு வாரமாகக் கடிதம் எதிர் பார்க்கிறேன். வரவில்லை. அதனால் கவலையாக இருக்கிறது. மாப்பிள்ளைக்குத் தந்தி கொடுத்துக் கேட்கலாம் என்று நினைக்கிறேன்."

"அப்படி என்ன, கவலைப் படும்படியாக? ஒரு கார்டு எழுதினால் போதாதா?"

"தாய் அறியாத சூல் இல்லை என்பார்கள். தாய்க்குப் பின் தாரம் என்றும் சொல்லுவார்கள். அப்படி இருக்க உன்னிடம் ஒரு வாரமாக ஒன்றை மறைத்துக் கொண்டு, சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் கிடந்து தடுமாறுகிறேன்!"

"பீடிகை பலமாக இருக்கிறதே! விஷயத்தைச் சொல்லுங்கள்."

"ஒரு வாரத்துக்கு முன் என் தங்கையின் கணவரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் என் தங்கையின் வருகையைப் பற்றி எழுதியிருந்தார். இன்று வரை அவள் வரவில்லை. கடிதமும் வரவில்லை" என்று சொல்லும் போதே அவன் கண்களில் நீர் முட்டியது.

"உங்கள் தங்கை வருவதாக எழுதி யிருந்தாரா? நீங்கள் சொல்லவில்லையே?"

"தவறு என்மேல்தான். அன்று வந்த கடிதம் உன் தங்கையிட மிருந்து அல்ல. என்னுடைய தங்கையின் கணவர்தான் எழுதியிருந்தார். நான்தான் வேண்டுமென்று மாற்றிச் சொன்னேன். அதன்படியே நடந்தும் விட்டது."

"அடேடே! அந்தக் கடிதம் பாமாவின் கணவர் எழுதவில்லையா? என்னை எப்படி ஏமாற்றி விட்டீர்கள்? நான் ஒரு அசடு. ஏமாந்து போனேன். பகவான்தான் என் ஏமாற்றத்தைப் போக்கினார். அதிருக்கட்டும்,

உங்கள் தங்கை வரப்போவதாகச் சொன்னால் நான் வேண்டாம் என்று குறுக்கே நிற்பேனா? இவ்வளவு பழகியும் என் குணம் உங்களுக்குத் தெரியாமற் போனதுதான் ஆச்சரியம்!"

"அதைப் பற்றி இப்பொழுது என்ன? தந்தி ஆபீசுக்குப் போய்விட்டு வருகிறேன்."

"தந்தி, தந்தி என்று பறக்கிறீர்களே. வெங்காய அடை பண்ணியிருக்கிறேன். சூடாக இரண்டு சாப்பிட்டு விட்டுப் போங்கள்."

"என் கவலை உனக்குத் தெரியாது, ருக்கு!"

"ஏன் தெரியாது? நானும் இரண்டு மூன்று அண்ணன் தங்கைகளுக்கு மத்தியில்தான் பிறந்திருக்கிறேன். உங்களுக்குள்ள கவலை எனக்கும் உண்டு."

"நீ என்ன சொல்லுகிறாய், ருக்கு? சற்று புரியும்படியாகத் தான் சொல்லேன்."

"நீங்கள் தந்தி ஆபீஸுக்கும் போகவேண்டாம், ரயிலடிக்கும் போக வேண்டாம்" என்று சொல்லி விட்டு உள்ளே போய் ஒரு கார்டைக் கொண்டு வந்து நீட்டினாள்.

"அன்புள்ள அண்ணாவுக்கு.

உங்களுடைய மாப்பிள்ளையின் கடிதம் கிடைத்திருக்கும் என்று நினைக்கிறேன். அவருடைய தங்கைக்கு விவாகம் நிச்சயம் ஆகும் போலிருக்கிறது. ஆதலால் இச் சமயம் நான் அங்கு வருவதற்கில்லை. மன்னிக்குச் சொல்லவும். விவாகம் நிச்சயமானால் பத்திரிகை அனுப்புகிறோம். மன்னியை அழைத்துக் கொண்டு கட்டாயம் கல்யாணத்துக்கு வந்து சேரவும்.

—அன்புள்ள சுபத்திரா."

கடிதத்தைப் படித்து விட்டுக் கிருஷ்ண மூர்த்தி, "இந்தக் கடிதம் வந்த சுவடே தெரியாமல் மறைத்து விட்டாயே, ருக்கு! நான் எவ்வளவு கவலைப்பட்டுப் போனேன், தெரியுமா?" என்று கேட்டான்.

"உங்களுடைய தங்கையும் வராமல் என் தங்கையும் வராமல் இருந்திருந்தால் நான் எவ்வளவு கவலைப்பட்டுப் போயிருப்பேன்? நீங்கள் அதை நினைத்துப் பார்த்தீர்களா?"

"பாமாவை நாம் எதிர் பார்த்தோமா? அவள் வரா விட்டால் நாம் கவலைப்படுவானேன், ருக்கு?"

"உங்களுக்கு விஷயம் தெரியாது. சுபத்ரா விடமிருந்து கடிதம் வந்த அன்றைக்கே, நானும் பாமாவுக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டு விட்டேன். 'உன் அத்திம்பேர் உனக்காக எவ்வளவோ பொருள்கள் வாங்கியிருக்கிறார். அந்தப் பரிசுகளையெல்லாம் பெற உனக்கு விருப்பமும் அதிர்ஷ்டமும் இருக்குமானால், தவறாமல் சனிக்கிழமை காலை வந்து சேரவும்' என்று எழுதி விட்டேன். அவளும் வந்து விட்டாள். சென்னையிலிருந்து வந்த வண்டிக்குப் போனவர், கால் மணி தாமதித்திருந்தால் திருச்சியிலிருந்து வந்த வண்டியில் பாமாவைப் பார்த்திருக்கலாம். பாமா கொடுத்து வைத்தவள். அவளுக்கு நிறையப் பரிசு கிடைத்து விட்டன" என்று சொல்லி முடித்தாள்.

"அடி, போக்கிரி!" என்று சொன்ன கிருஷ்ணமூர்த்தியினால் ருக்மிணியின் அறிவுத் திறனை மெச்சாமல் இருக்க முடியவில்லை.

# பசுவும் பரத நாட்டியமும்




"என்னப்பா! நாளும் கிழமையுமாய் மாடு கறக்காமல் சதிராட ஆரம்பிச்சுட்டதே!"

"உள்ளே நட்டுவனாரைக் கொஞ்சம் நிறுத்தச் சொல்லுங்க, முதல்லே!"



# நல்லழகும் நறுமணமும் நாளும் நிலைபெற

**TSR**

- சந்தனாதித் தைலம் • அரப்பிரை விதைத் தைலம்
- பிருங்காமலக தைலம்
- கோகுல் சந்தன தைலம்
- கதம்ப காய்கறி ஊறுகாய்கள்
- நெ. 5000 பன்னீர் • வாசனைப் பாக்கு




## ஸ் ஆர். அன் கோ,

ஂ - தென்னிந்தியா.

EP

சென்னை நகரத்திற்கு ஏஜெண்டுகள்: ... 37, ஜானி ஜான்கான் ரோடு, திருவல்லிக்கேணி, ... கோயமுத்தூர், பாலக்காடு, ... சேலம் ஏஜண்டுகள்: B. பாலபட்டாபி செட்டியார் கோயமுத்தூர்

---



# பாலூஸேரி பெனிபிட் சிட் பண்டு லிட்.

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

3, சிங்கராச்சாரி தெரு, . . . . திருவல்லிக்கேணி

தபால் பெட்டி நெ. 414 ❂ மதறாஸ் – 5

தந்தி: 'EVERMANS' . . . . . . . . . போன்: 85834

சிட்டில் சேருவதற்கான கடைசி தேதி 15-4-54

முதல் ஏலத் தேதி 17 - 4 - 54

## மாதாந்திரச் சீட்டுகள்

(3வது சனிக்கிழமை ஏலச் சீட்டுகள்)

25 மாதங்கள் — 25 மெம்பர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- |
| E | ரூ. 20/- | ரூ. 500/- |
| F | ரூ. 15/- | ரூ. 375/- |
| G | ரூ. 10/- | ரூ. 250/- |

தெளிவாக விலாசம் எழுதி விண்ணப்பித்தால் சீட்டு விதிகளின் இலவச பிரதி அனுப்பப்படும். சீட்டில் சேர்த்துக் கொள்ளும் உரிமை நிதியைச் சார்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

**எங்கள் சேவை உங்களுக்குத்தேவை**

ஏப்ரல்
13 முதல்

கல்யாணம் பண்ணியும்
# பிரம்மச்சாரி

பத்மினி பிக்சர்ஸ்
...தயாரிப்பு...

டைரக்ஷன்:
ப. நீலகண்டன்



## மதராஸ் பிக்சர்ஸ்
...வெளியீடு...

எப்பொழுதும் உபயோகியுங்கள்

# வாலா ஸிந்தெடிக் எனமல்கள்

எங்கும் கிடைக்கும்

வாலா ஸிந்தெடிக் எனமல்கள் உஷ்ணப் பிரதேசத்தில் உபயோகிப்பதற்கு இணையற்றது என்று ஆராய்ச்சியில் நிரூபணமாயுள்ளது.

○●○

தயாரிப்பவர்கள் :

**மக்பர்லேன் & கம்பெனி லிமிடெட்**

கல்கத்தா :: பம்பாய்

○●○

தென்னிந்தியாவுக்கு ஏஜண்டுகள் & காரியதரிசிகள் :

**ஸவுத் இந்தியா கார்ப்பொரேஷன் (மதராஸ்) லிமிடெட்**

2, அரண்மனைக்காரத் தெரு :: சென்னை - 1

தந்தி : GOODWILL : போன் : 4911

---

அம்மா சொல்லுகிறாள்—





## ப்ரூக்லாக்ஸ் உங்களை ஒரே இரவில் குணமாக்கிவிடும்




குழந்தைகள் ப்ரூக்லாக்ஸின் இனிய ருசியை விரும்புகின்றனர். சுத்த கலவையுள்ள மருந்துகளிலிருந்து முற்றிலும் மாறுனது. படுக்குமுன் ஒரு சிறு வில்லை சாப்பிட்டால் நிச்சயம் நிவாரணமுண்டு. உங்களுக்கோ, குடும்பத்திற்கோ பேதி மருந்து வேண்டும்பொழுது ப்ரூக்லாக்ஸை கேட்டு வாங்குங்கள். மலச்சிக்கலைத் திருத்த அருமையான வழி.

லண்டன் வெஸ்ட்மின்ஸ்டர் லாபரேடரீஸ் லிமிடெட் தயாரிப்புகளில் ஒன்று.

ஏஜண்டுகள் : ஓரியண்டல் மர்க்கண்டைல் ஏஜன்ஸி

OMA-10 99-ஏ, அரமனைக்காரத் தெரு, மதராஸ்

# கருணைக்கடல்

தேசிக விநாயகம் பிள்ளை



மந்தை பெரிய மந்தை — உணவின்றி
வாடிமெலியு மந்தை

ஒந்தை தளரும் மந்தை — நடக்கவும்
சீவனிலாத மந்தை

தன்னந் தனியாகி — ஒருமறி
தாவி முன் ஓடுதையா

பின்னோர் இளமறியும் — விந்தியிங்கு
பீடை படுதேஐயா !

இடையர் :

'இந்திர யாகம் முடியுதென்றார் — அதில்
இத்தனையும் கொலையாகும் என்றார்
நின்றுசொல நேரம் இல்லை என்றார்-இன்னும்
நீண்டவழி போக வேண்டும்' என்றார்.

வள்ளலும் உள்ளம் வருந்தியானும் — அந்த
மாமகம் காண வருவேனென்று
அன்னும் மறியுஞ் சுமந்து கொண்டு-தாயும்
சேர்ந்து தொடர வழிநடந்தார்.



வையகந் தன்னில் உயிர்களின் மீதருள்
மாரி பொழியும் பெரியவனும்
ஐயனைக் கண்டவர் கொண்ட அதிசயம்
ஆராலே கூற இயலுமடி!

வாயிலைக் காத்திடும் சேவகரும்—வழி
மாறி விலகி ஒதுங்கி நின்றார்;
தாயினும் மிக்க தயாளன் இவன்—போல் இத்
தாரணி கண்டதும் உண்டோ வென்றார்?

பாதையிற் சென்றவர் பார்த்து நின்றார்—ஒரு
பக்கமாய் வண்டிகள் ஓட்டி நின்றார்;
மாதவம் ஈதலால் வேறுளதோ!—என
வாயார வாழ்த்திப் புகழ்ந்து நின்றார்.

சந்தை இரைச்சல் அடங்கியது—கடைச்
சண்டையும் இல்லா தொடுங்கியது!
வந்தவர் போனவர் கண்களுக்கும்—அந்த
வள்ளல் முகம் விருந்தானதம்மா!

மண்ணைச் சுமந்து வருங்குயவன்—ஈதோர்
மாமுனி என்று வணங்கி நின்றான்
எண்ணெய்க் குடமேந்து வாணியனும்—இவர்
யாரோ பெரியர் எனப் பணிந்தான்.

பள்ளிச் சிறுவரும் சாடிவந்தார்—அவர்
பக்கத் தண்ணுவியும் ஓடி வந்தார்;
கள்ளரும் உள்ளம் மறந்து நின்றார்—வட்டக்
காரரும் காகப்பை விட்டு வந்தார்.



மாடும் அரிசியைத் தின்றதம்மா!—அதை
மாற்றி யடிப்பாரும் இல்லையம்மா!
வீடும் திறந்து கிடந்ததம்மா — உலை
வெந்திடு சோறும் குழைந்ததம்மா!

பெண்டுகள் வாசலில் கூடி நின்றார்-இந்தப்
பேருளாளனும் யாரோ என்றார்;
கண்டவர் உள்ளம் கனியுதென்றார்-இவன்
கண்ணின் அழகினைப் பாரும் என்றார்.

கன்னி ஒருமகள் மையெழுதி — இரு
கண்ணும் எழுதுமுன் ஓடிவந்தாள்
பின்னும் ஒரு மகள் கூந்தலிலே — சூடும்
பிச்சிமலர் கையில் சுற்றி வந்தாள்.

பாலுக் கழுத மதலையுமே — ஐயன்
பக்கம் வரக் களிப்புற்ற தென்றால்
சேலொக்கும் மாதர் விழிகள் - அவன்முகச்
செவ்வியில் ஆழ்வது அதிசயமோ!

[வேறு]

வையமிசை உயிர்கள் படும் துயரை
எண்ணி
மறுகும் உளத்(து) அயலொன்றும்
அறியானாகி
ஐயனும் அவ் வீதிவழி நடந்து மன்னன்
அரியமகம் செய்யுமிடம் அணுகினனே!



" யாகத் திறைவரே! என்னரும் தேவரே!
அம்புவி யாளும் அரசர் பெருமான்
பிம்பி சாரப் பெருந்தகை இந்நாள்
மறைகளில் விதிக்கும் வழிவகை யறிந்து
முறையிற் செய்து முடிக்கும்இம் மகத்தில்
பேணி உமக்கிடும் பெரும்பலி இதுவாம்!"

என்று சொல்லி யாக தீக்ஷிதரும்—வாளை
ஏந்திய கையினை ஓங்கையிலே
பொன்றும் உயிரினைக் காக்க வரும்—அந்தப்
புண்ணிய மூர்த்தியும் ஓடிவந்து :

" அண்ணலே இக்கொடும் பாவிஇவ் வேளையில்
ஆட்டினைக் கொல்லா தருள் புரிவீர்
திண்ணிய ஞான முடையவரும்—இந்தத்
தீவினை செய்வாரோ " என்றுரைத்தான்.

" வாழும் உயிரினை வாங்கி விடல்—இந்த
மண்ணில் எவர்க்கும் எளிதாகும்
வீழும் உடலை எழுப்புதலோ—ஒரு
வேந்தன் நினைக்கினும் ஆகாதையா!"

" செய்பிழை யாவும் பொறுத்தருள்வீர் "—எனச்
சேவித்து மன்னனும் தாழ்ந்து நின்றான்;
" ஐயனே, நாட்டில் கொலைதவிர்த்து—நானே
ஆணையும் கட்டுவேன் " என்றுரைத்தான்.





அந்தக் காலத்தில் இப்படி விளையாட்டாக ஆரம்பித்த கல்யாணம்....




வர. வர. அதன்...


# திருமணப் போக்கு



போக்கே மாறிக் கொண்டு வந்து...




இப்படிக் காட்சி அளிக்கின்றது!


அல்லிக்குளத்தின்...!
அருந் தென்றல்!
Phoenix
CHARI




MILK
OF
MAGNESIA

# வைராக்கியம்

கௌசிகன்

ஓடும் அந்த ரயிலின் வேகத்தைப் போலவே அவன் உள்ளத்திலும் உணர்ச்சிகள் வேகமாக ஓடின. ராணுவத்தில் உயர்ந்த உத்தியோகம் பார்க்கும் வாலிபன் அவன். அவன் தன்னைப் பற்றித் தெரிந்துகொள்ளும் அளவுக்கு அவனை வளர்த்து, அவனைப் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வந்த ஜீவனின் ஆசையைத் திருப்திப் படுத்துவதற்காகத் தன் ஊரை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறான் அவன்.

"ஒரு முறை வந்து உன் முகத்தையாவது எங்களுக்குக் காட்டி விட்டுப் போகக் கூடாதா!" என்று மூன்று வருஷமாக மன்றாடிக் கேட்டுக் கொண்டு கடிதமெழுதிய தாயாருக்குத் தரிசனம் தருவதற்காகத்தான் காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரியை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறான்.

அவன்......

அவன்தான் ராஜு.

இப்போது ஜமேதார் ராஜுவாக இருந்தாலும் அவன் இரண்டு பேருக்குத் தமையனாகவும் ஒருத்திக்குத் தம்பியாகவும்தான் இந்த உலகில் பிறந்தான். அவன் வாய் திறந்து 'அப்பா' என்று அழைத்துப் பேச ஆரம்பித்தபோது அவனை வாரி அணைத்துக் கொள்ள அந்த ஆத்மா இல்லை.

நான்கு குழந்தைகளைக் காப்பாற்றும் புருஷனின் பொறுப்பையும் தாங்கிக் கொண்டு அவர்களை வாழ்விக்க வகை தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தாள் அவன் தாயார். வேடிக்கையும் விளையாட்டுமாகத் துள்ளித் திரிய ஆசைப்பட்ட அந்தப் பிஞ்சு உள்ளத்திலே பலத்த அடியாக விழுந்தது அந்த நிலை. தன் தாயாரின் ஒட்டி உலர்ந்த உருவத்தையும் ஏக்கத்திலே மிதக்கும் பஞ்சடைந்த கண்களையும், சிரிப்பு வற்றி வெடிப்பு விழுந்த உதடுகளையும் பார்த்தான். சந்தோஷமும் குதூகலமும் பூத்துக் குலுங்கும் குடும்பங்களோடு தங்கள் நிலையை ஒப்பிட்டுப் பார்த்துக் குமைந்து குன்றிப் போனான் குழந்தை ராஜு.

குறும்பும், கும்மாளமுமாகத் தள தள வென்று வளர வேண்டிய கொழுந்து அவன். ஆனால் ராஜு அப்படி வளரவில்லை. வளரும் சூழ்நிலை அவனுக்கு வாய்க்கவில்லை. சிரிப்புக்கும், விளையாட்டுக்கும் தான் பிறக்கவில்லை என்ற எண்ணம் அவன் மனத்திலே வேரூன்றி விட்டது.

அவன் வளர்ச்சியில் தங்கள் வாழ்வைக் காணலாம் என்று அவனைப் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வருவதையே தன் லட்சியமாகக் கொண்டு உழைத்து ஓடாகி வந்தாள் சிவகாமி. அவன் தாயார்.

முடியாத அவள் துன்பத்துக்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும் என்ற ஒரே லட்சியத்துடன் வளர்ந்து வந்தான் ராஜு. வயது ஆக ஆகக் குடும்பத்தின் நிலை அவன் சிந்தனையிலே புழுவாகக் குடைய ஆரம்பித்தது. படிப்பிலே நினைவை நிறுத்த முடியாமல் தவித்தான். குடும்பத்தின் ஏழ்மை பிரம்மாண்டமாகி அவன் முன் நின்று சிரிக்க ஆரம்பித்தது. படித்தது போதுமென்று உத்தியோக வேட்டையில் இறங்கினான்.

அவனிடம் இரக்கம் காட்டவோ, அவனுக்கு உதவி செய்யவோ சிபாரிசு செய்து வேலை வாங்கித் தரவோ யாருமில்லை. அநாதரவான ராஜுவுக்கு—ஸ்கூல் பைனல் பாஸ் செய்த ராஜுவுக்கு—உள்ளூரிலே எந்த வேலையும் கிடைக்கவில்லை. மகனின் உயர்வைக் கண்ட பிறகு கண் மூட வேண்டுமென்ற ஆசையோடு போராடிக் கொண்டிருக்கும் தாயாரையும், பருவத்தின் ஸ்பரிசம் பட்டுப் பூரித்து நிற்கும் சகோதரிகளையும் தம்பியின் வருங்காலத்தையும் எண்ணிப் பார்த்தான். இத்தனைக்கும் பரிகாரம் தேடத் தான் உடனே ஏதாவது வேலைக்குப் போய்ச் சம்பாதித்தாக வேண்டும் என்ற வேகம் அதிகமாயிற்று. அவன் வேகத்தைப் புரிந்து கொண்டு வேலை தர அப்போது ராணுவம் ஒன்றுதான் காத்திருந்தது.

பாச பந்தங்களை உதறிவிட்டு, நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு தாயாரிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் ராணுவத்தில் சேர்ந்து வெளியூருக்குக் கிளம்பி விட்டான். வேலை தேடி வெளியே போன குழந்தை இரண்டு நாளாகியும் வீடு திரும்பாதது கண்டு சிவகாமி தவித்துப் போனாள்.

நல்ல வேளையாக மூன்றும் நாள் அவன் பேருக்கு வந்த ஒரு உறை அவள் பீதியைக் குறைத்துப் புதிய வேதனையை உண்டாக்கிற்று.

ராணுவத்தில் சேர்ந்த ராஜுதான் எழுதியிருந்தான். உபகாரம் செய்து உதவவோ ஆறுதலாகத் தைரியம் சொல்லவோ கூட இந்த உலகத்தில் தங்களுக்கு யாருமே கிடையாதபோது தங்கள் குடும்பத்தின் நிலை உயர, தான் ராணுவத்தில் சேருவதைத் தவிர வேறு எந்த மார்க்கமும் இல்லை என்பதை உணர்ச்சியோடு எழுதி இருந்தான். அதைப் படித்த சிவகாமி அவன் மனசு எத்தனை வைராக்கியம் அடைந்து விட்டது என்பதை எண்ணி விம்மினாள்.

அவர்கள் குடும்பத்தில் எத்தனையோ மாறுதல்களைச் செய்து வருஷங்கள் சிவகாமியின் வாழ்விலே கரைந்து கொண்டிருந்தன. எத்தனையோ மாறுதல்கள்தான். பெண்களைத் தகுந்த இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்து விட்டாள். இரண்டாம் பிள்ளை கூடச் சம்பாதிக்கத் தலைப்பட்டு விட்டான். எங்கோ கண்காணாத இடத்தில் காக்கிச் சட்டையை மாட்டிக் கொண்டு சம்பாதித்து மாதந்தோறும் பணம் அனுப்பி வந்தான் ராஜு.

இதனால் அந்தக் குடும்பத்தில் சுபிட்சம் நிலவ ஆரம்பித்து விட்டது என்பது அர்த்தமில்லை. அடுத்த நாளைக்கு என்ன செய்வது என்ற கவலை மறைந்து அடுத்த மாதத்திய கவலையோடு அவர்களை வாழ வைத்துக் கொண்டிருந்தது அவன் அனுப்பி வந்த பணம்.

அவனிடமும் காலம் எத்தனையோ மாறுதல்களை உண்டாக்கித்தான் இருந்தது. ராணுவத்தில் சேர்ந்தபோது வாழ்க்கையில் அவனுக்கிருந்த ஆர்வமும் துடிப்பும் இப்போது இல்லை. அவன் உள்ளத்திலே கவ்வி இருந்த பழைய குடும்பப் பற்றுதல் இப்போது இல்லை. அவனுக்கு உலகத்தின் மேலேயே வெறுப்பு வளர்ந்து விட்டது. ஆசாபாசங்களுக்கு இடமளிக்காமல் உள்ளத்தைக்

கல்லாக்கிக் கொண்டு வாழ்ந்து வந்தான். அவனுடைய இந்த விபரீத மனப்பான்மைக்குச் சாதகமாக அமைந்திருந்தது ராணுவ வாழ்க்கை.

இரண்டு மூன்று வருஷங்களுக்கு ஒரு முறை விடுமுறை பெற்று ஊருக்கு வருவான் ராஜு. அதுவும் தாயாரின் நச்சரிப்பினால்தான். இல்லாவிட்டால் அவன் யந்திரத்தைப் போல ராணுவ முகாமிலேயே தன் ஆயுள் முழுமையும் வேலை செய்து கொண்டிருக்கத் தயார்தான். விடுமுறையிலே வந்து மனிதர்களின் அன்றாட வாழ்வின் கலகலப்பின் நடுவே இருந்தாலும் அவன் தனி மனிதனாகத்தான் இருப்பான். ராஜுவின் விபரீத மாறுதல் சிவகாமிக்குக் கவலையை அளித்தது. ஊராரைப் போல தன் பிள்ளை கலகலப்பாக இல்லையே என்ற ஏக்கம் மட்டும் அவளைக் கிள்ளிக் கொண்டிருந்தது.

ஒரு கல்யாணத்தைச் செய்து விட்டால் அவன் குணம் மாறி விடும் என்று ஒரு சமயம் அதைப் பற்றி, அவன் லீவில் வந்திருந்த போது அவள் பிரஸ்தாபித்தாள். அப்போது அவனுக்கு இருபத்தெட்டு வயது. கல்யாணம், குடும்பம், குழந்தைகள் என்றதும் அவன் உடல் நடுங்கிற்று. ஒரே பிடிவாதமாக மறுத்து விட்டு மிகுதி லீவு நாட்களைக் கூட அங்கே கழிக்காமல் உடனே ஊருக்குக் கிளம்பி விட்டான்.

சிவகாமிக்குத் தன் வீட்டில் மஞ்சளும், குங்குமமும், பூவும் மணக்க வேண்டுமென்ற ஆசை பொழிந்து விட்டுக் கொண்டிருந்தது. இரண்டாம் பிள்ளை ராமு குமாஸ்தா உத்தியோகத்தில் எண்பது ரூபாய் சம்பாதித்து வந்தான். இரு பிள்ளைகளும் சம்பாதிப்பது அவளுக்குக் குபேர சம்பத்து வந்தது போல இருந்தது. இனி குழந்தைகள் குடியும் குடித்தனமுமாக இருப்பதைப் பார்க்க வேண்டியது ஒன்றுதான் தன் வாழ்வின் லட்சியம் என்று நினைக்குமளவுக்கு அவள் மனம் திருப்தியடைந்து விட்டது.



ராஜுவுக்கு எத்தனையோ விதங்களில் தன் ஆவலைத் தெரிவித்து எழுதினாள். அதனால் அவன் பதில் போடுவதையே நிறுத்திக் கொண்டான். இந்த ஏக்கமே சிவகாமியின் உடல் பலத்தையும் உள்ளத்தின் சந்துஷ்டியையும் அரித்துத் தின்று கொண்டே வந்தது.

தம்பி ராமு தாயாரின் தள்ளாமையையும், அவள் ஆவலையும் பற்றி எழுதினான். அவனது பல கடிதங்களின் குத்தலைத் தாங்க முடியாமல் முடிவாக "நான் தாயாரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய முடியாதவனாக இருக்கிறேன். நீ வேண்டுமானால் கல்யாணம் செய்து கொண்டு அவளை மகிழ்விக்கலாம்" என்று தம்பிக்கு எழுதி விட்டான். அப்போது அவனது ராணுவ முகாம் காஷ்மீரில் இருந்தது.

'அண்ணனுக்கு முன்னால் தம்பி கல்யாணம் செய்து கொள்ளுவதா?' என்று உள்ளமொடிந்து போனான் ராமு. ஆனால் தாயாரின் பிடிவாதமும் பரிதாபமும் ராமுவின் மனத்தை மாற்றிவிட்டன. குடும்பத்தின் சுகதுக்கங்களில் பட்டுக் கொள்ளாமல் பற்றுதல் இன்றி வாழ ராஜுவா அவன்!

தம்பியின் கல்யாணப் பத்திரிகையைக் கையில் வைத்துக் கொண்டு இலேசாகச் சிரித்தான் ஜமேதார் ராஜு. தன் தம்பியின் நிலைக்குப் பரிதாபப்பட்டுத்தான் அவன் அப்படிச் சிரித்துக் கொண்டான். எண்பது ரூபாய் வருமானத்தில் இவன் எப்படிக் குடும்பஸ்தனாகத் துணிவு கொண்டான் என்று அவனுக்கு வியப்பாக இருந்தது.

"சமுத்திரத்தின் அலை ஓய்ந்தால்தான் நான் ஸ்நானம் செய்வேன் என்று பிடிவாதம் பிடிக்கும் ஒரு மனிதனைப் போல இருக்கிறது—நீ உன் வாழ்க்கைத்தரம் உயர்ந்த பிறகுதான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பிடிவாதமாக இருப்பது. சமுத்திர அலை என்றைக்கும் ஓயாது. அலைகளின் அடியிலேதான் நாம் நமது ஸ்நானத்தை முடித்துக் கொள்ள வேண்டும். வாழ்க்கைத் தரம் உயரும் வரை மனிதன் வாழக் காத்துக் கொண்டிருக்க முடியாது. கஷ்டங்களின் நடுவிலே சுகத்தைத் தேடிக் கொண்டு போவதுதான் வாழ்க்கை" என்று ஒரு கடிதத்தில் அவன் தம்பி எழுதியிருந்தது நினைவுக்கு வந்தது ராஜுவுக்கு. ஆனால் அன்றைக்கு எப்படி ஏளனமாக மதித்துச் சிரித்தானோ அந்த மனோபாவத்தோடுதான் இன்றைக்கும் இருந்தான். ஏதோ ஒரு பெரிய அபத்திலிருந்து தான் புத்திசாலித்தனமாகத் தப்பித்துக் கொண்டு விட்ட எக்களிப்புத்தான் ராஜுவிடம் அப்போது தம்பியின் கல்யாணச் செய்தியில் ஏற்பட்டிருந்தது.

"அம்மாவின் அருகில் இருந்து அவள் விருப்பு வெறுப்புகளைச் சமாளிக்க மூத்தவனாக நீ பிறந்தாய். முதலில் கல்யாணம் செய்து கொண்டு குடும்பத்தை விளங்க வைக்கும் கடமையும் உன்னுடையதுதான். ஆனால் இரண்டாமவனாகப் பிறந்த நான்தான் நீ செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து கொண்டிருக்கிறேன். என் கல்யாணத்துக்கு வந்து நடத்தி வைத்து ஆசீர்வதிக்கவாவது லீவு எடுத்துக் கொண்டு வா!" என்று உருக்கமாக எழுதியிருந்தான் ராமு. ஆனால் அதைப் படித்த ராஜுவிடம் எந்த உணர்ச்சியும் ஏற்படவில்லை. தம்பிக்குத் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்து ஒரு தந்தி அனுப்பி விட்டு, எந்தவிதமான சலனமுமின்றித் தன் வேலையில் மூழ்கி விட்டான் ராஜு.

ரயில் வண்டி உடலைச் சிலிர்த்துக் கொண்டு ஒரு நிலையத்தில் நின்றது. ராஜுவும் உடலை வளைத்துச் சோம்பலைக் கழற்றி விட்டுக் கைகளை உதறி விட்டுக் கொண்டான்.

இவன் இருந்த வண்டியின் கதவைத் திறந்து கொண்டு நாலைந்து குழந்தைகளோடு ஒரு தம்பதிகள் ஏறி வந்தார்கள். ஜன்னலோரத்திலே படுக்கையை விரித்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்த ராஜு அவர்களைப் பார்த்தான்.

அந்த ஒட்டி உலர்ந்த தம்பதிகளின் குழந்தைகள்தான் அந்த ஐந்து பிறப்பும். அந்தப் பெண்ணைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. ரத்தம் செத்துப் போய் வெளுத்த தோற்றம். எங்கோ பாதாளத்தில் நகரும் குழி விழுந்த கண்கள்.

''இப்படிப்பட்டவர்கள் ஏன் கலியாணம் செய்து கொண்டு அவதிப்பட வேண்டும்! மனைவியைச் சந்தோஷமாக வைத்துக் கொள்ள வசதி வேண்டும். பிறக்கும் குழந்தைகளைப் பராமரிக்கத் தகுதி வேண்டும். அது இல்லாத போது......''

எதிரிலே உட்கார்ந்திருக்கும் பரிதாபமான உருவங்கள் அவன் நெஞ்சிலே மிகுந்த வெறுப்பை வடிய வைத்துக் கொண்டிருந்தன.

'...சீ!... என்ன உலகம்!... என்ன வாழ்க்கை!... நல்ல வேளையாகக் குடும்பம்-சம்சாரம் என்ற விலங்குகளிலிருந்து நான் தப்பித்துக் கொண்டேன்' என்று ஆறுதலடையப் பார்த்தது அவன் மனம். அதே சமயத்தில் தாயார் கடைசிக் கடிதத்தில் எழுதியிருந்தவை நினைவுக்கு வந்தன.

அவன் தம்பி ராமு அப்பாவாகி விட்டான் என்ற சந்தோஷச் செய்திதான் அது. சந்தோஷம் அவன் தாயாருக்கு. அவனுக்கு வேதனையாகத் தான் இருந்தது. போன வருஷம்தான் கலியாணம். இதுவரை அவனுக்குத் தம்பியாக இருந்தான். இன்றைக்கு ஒரு குழந்தை அவனை அப்பா என்றழைக்கப் பிறந்து விட்டது.

அடுத்த செய்திதான் தம்பியிடம் அவனுக்கு அநுதாபத்தை வளர்த்தது. அவன் பார்த்து வந்த குமாஸ்தா வேலை போய் விட்டது. வேலை இல்லாமல் ராமு ஆறு மாதங்களாக வீட்டில் உட்கார்ந்திருக்கிறான் என்று எழுதியிருந்தாள் சிவகாமி.

கல்யாணம்; உடனே குழந்தை— குடும்பஸ்தன். இந்த லட்சணத்தில்வேலையும் போய்விட்டது. வருவாய் இல்லாத ஒரு மனிதன் இந்த உலகத்தில் எத்தனை துன்பங்களையும் வேதனைகளையும் அனுபவித்தாக வேண்டும் என்று ராஜுவுக்குத் தெரியும். அந்த நினைவே அவன் நெஞ்சைத் திருகி மூளையைக் குழப்பிக் கொண்டிருந்தது.

'' அலை ஓய்ந்து சமுத்திரத்தில் ஸ்நானம் செய்வது முடியாது என்று எனக்கு உபதேசம் செய்தானே-இப்போது!'' என்று எண்ணினான் ராஜு.

'' அம்மா, பசிக்கிறதம்மா!'' என்ற ஈனமான குரல் காதைக் குடைந்து கொண்டு புகுந்து நெஞ்சைச் சிலிர்க்க வைத்தது. ராஜுவுக்கும் கழுத்தை வலித்தது. பார்வையைச் சுருட்டிக் கொண்டு உள்ளே திரும்பினான். அந்த கிரஹஸ்தர் தன் குழந்தைகளின் பசிக்குப் பொரி கொடுத்துக் கொண்டிருந்தார்.

தன் எதிரில் நாலைந்து குழந்தைகள் சூழ ஒட்டி உலர்ந்த மனைவி அருகே இருக்கத் தம்பி ராமு



உட்கார்ந்திருப்பதாக ஒரு பிரமை ஏற்பட்டது ராஜுவுக்கு. அவன் நெஞ்சை யாரோ அழுத்திப் பிடிப்பது போலிருந்தது. தலையைக் குலுக்கி நிதானப் படுத்திக் கொண்டு பார்த்தான். எதிரே இருந்தது பழைய, முன் பின் தெரியாத, சம்சாரி தான். அவன் நெஞ்சத் துடிப்பு நிதானப்பட்டது.

** ** **

ராஜு வீட்டுக்குவந்து மூன்று நாட்களாயின. அவன் பிறந்து வளர்ந்த வீடும் பழகிய மனிதர்களும் கூட அவனுக்கு ஏதோ அன்னிய இடம் போல இருந்தது. நேரம் நகராமல் அவனைப் பழி வாங்கிக் கொண்டு நிற்பதாக நினைத்தான். அவனுக்கு இருப்பே கொள்ளவில்லை. கட்டிப் போட்டது போலிருந்தது. புத்தகங்களில் எத்தனை நேரம்தான் சிந்தனையைப் புதைத்துக் கொண்டிருப்பது! வேளாவேளைக்குச் சாப்பாடும் டிபனும் உபசாரம் செய்து ஊட்டினாள் தாயார். அண்ணா வந்திருக்கிறான் என்று ஓடியாடிச் சுருசுருப்பாகக் கலகலப்புடன் இருந்தான் தம்பி ராமு.

அவன் விஷயம்தான் ராஜுவுக்கு ஆச்சரியமாக இருந்தது. புதிதாகக் கலியாணமாகி ஒரு குழந்தைக்கும் தகப்பனாகிக் குடும்ப பாரம் அழுத்த ஆரம்பித்தபோது வேலையும் போய் விட்டதனால் ராமு அட்படியே உள்ள மொடிந்து உற்சாகம் இழந்து வாழ்க்கையில் விரக்தி ஏற்பட்டுக் குன்றிப் போய் உட்கார்ந்திருப்பான் என்றுதான் ராஜு தன் தம்பியைப் பற்றிக் கற்பனை செய்துகொண்டு வந்திருந்தான். ஆனால் ராமு மிகுந்த உற்சாகத்தோடும் நிறைந்த உள்ளத்தோடும் காட்சி யளித்தது அவனுக்கு விளங்காத புதிராக இருந்தது.

"அண்ணா! என்னை முதலில் கலியாணம் செய்து கொள்ளச் சொன்னாய். உன் விருப்பப்படியே செய்து கொண்டேன். மணிப் பயலாக ஒரு குழந்தைக்கும் தகப்பனாகி விட்டேன். இனிமேலும் நீ இப்படித் துறவி போல இருப்பது நன்றாக இல்லை. இந்த வருஷமாவது நீ கலியாணம் செய்து கொண்டு தானாக வேண்டும்!" என்று ராமு அண்ணாவுக்குச் சொல்ல ஆரம்பித்து விட்டான்.

வருங்காலத்தைப் பற்றிக் கொஞ்சமும் நினைக்காமல் இப்படி அசடாக இருக்கிறானே என்று அவன் அறியாமைக்காக அங்கலாய்த்துக் கொண்டான் ராஜு மனசுக்குள். இப்போது நீ கலியாணம் செய்து கொண்டு என்ன சுகத்தைக் கண்டு விட்டாய் என்று கேட்க வேண்டும் போலிருந்தது அவனுக்கு.

** ** **

ஒரு நாள் பகல் தூங்காமல் தூங்கிக்கொண்டு படுத்திருந்தான் ராஜு. அவன் தாயார் சிவகாமி உள்ளே ஏதோ காரியமாக இருந்தாள். ராமுவின் மனைவி பிறந்த வீட்டில் இருந்தாள். பிரசவித்த பின் இன்னும் அழைத்து வரவில்லை. திண்ணையில் ராமு யாரோ ஒரு குழந்தையோடு கொஞ்சிக் கொண்டிருந்தான்.

"ஏண்டா பாபு! நீ இரண்டு நாளாக இங்கே வரவே இல்லை!" என்று கேட்டான் ராமு.

"காணு...வந்த...உங்காத்துக்கு ஒரு மாமா வந்திருக்காளே அது யாரு!" என்று மழலை மொழியில் கொஞ்சிக் கொஞ்சிப் பேசினான் ஒரு பையன்.

"அட போக்கிரி......புது மனுஷா வந்திருக்கான்னுதான் நீ இந்தப் பக்கமே வரல்லியா! அது ராஜு மாமாடா! ரொம்ப நல்ல மாமா தெரிஞ்சுதா...உனக்குச் சாக்லெட், பிஸ்கோத்து எல்லாம் கொடுப்பாரே" என்று குழந்தையை வாரி அணைத்து முத்தமிட்டுத் தூக்கிக் கொண்டு உள்ளே வந்தான் ராமு. கண்மூடிப் படுத்திருந்த ராஜு கண்ணைத் திறந்து பார்த்தான்.

"பாரு அண்ணா, நீ வந்திருக்கேன்னு இந்தப் பயல் இங்கே வரவே இல்லை. இங்கேயேதான் குடியா யிருப்பான்" என்று பெருமையோடு அணைத்துக்கொண்டு பேசினான் ராமு. குழந்தை ராஜுவையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

ராஜுவின் பார்வை, 'குழந்தை யார்?' என்ற கேள்வியாக இருந்ததோ என்னவோ ராமுவே தொடர்ந்து பேசினான்:

"அடுத்த வீட்டில் இருப்பவருடைய கடைக் குட்டி இந்தப் பயல். ஆனால் படு சுட்டி. இரவு தூங்கும் நேரம் தவிர மற்ற நேரமெல்லாம் நம் வீட்டில்தான் இருப்பான். ஏண்டா பாபு அப்படித் தானே!" என்று அவன் பட்டுக் கன்னத்தைச் செல்லமாகக் கிள்ளினான் ராமு.

ராஜு குழந்தையை நன்றாகக் கவனித்தான்.

கொழு கொழு வென்று வெண்ணெய்க் கட்டி போல வளர்ந்திருந்தான் பாபு. நல்ல சிவப்பு. கருகரு வென்று சுருள் சுருளாக வளர்ந்திருந்த மயிர் அந்த உருவத்துக்குத் தனி அழகைக் கொடுத்தது. அகன்ற கருவிழிகள் சதா துருதுரு வென்று சுழன்றுகொண்டே இருந்தன. சித்திரத்தில் எழுதியுள்ள உயர்ந்த ஓவியம் போல் இருந்தான் குழந்தை பாபு.

குழந்தையின் அழகு அந்த ஜமேதாரின் உள்ளத்திலே எந்தவித மாறுதலையும் உண்டாக்கிவிடவில்லை. ஆனால் குழந்தையோடு குழந்தையாக உள்ளே கொஞ்சி விளையாடிக் கொண்டிருக்கும் ராமுவைப்பற்றித்தான் அவன் நினைவு நீண்டது.

'ஒரு குழந்தைக்குத் தகப்பனான பிறகு கூட இப்படிக் கவலை இல்லாமல் இருக்கிறானே. தன் நிலையை நினைத்துப் பார்த்துக் கொண்டால் ஊரார் குழந்தைகளோடு விளையாடக் கூடத் தோன்றுமா! பிறந்திருக்கும் தன் குழந்தையைக் கஷ்டம் தெரியாமல் வளர்க்க வேண்டுமே, இப்படி வேலை இல்லாமல் உட்கார்ந்திருக்கிறோமே' என்ற தவிப்பே அவனிடம் இல்லையே!—இப்படித்தான் அவன் எண்ணம் சென்றது. அவனுக்குக் கஷ்டம், வேதனை, பொறுப்பு என்ற கவலைகளும் பயமும் தான் தெரியும். அதிலேயே வளர்ந்தவன் அவன்.

மறு நாள் பகலில் சிவகாமி மகனின் அருகில் உட்கார்ந்து கொண்டு அவன் மனத்தை அறிய ஆரம்பித்தாள். பேச்சின் முடிவு அவன் கல்யாண விஷயத்தில் வந்துதான் நின்றது.

"என்னம்மா கல்யாணம்! உன் ஆசைக்காக ராமு இப்போது கல்யாணம் செய்துகொண்டான். உடனே குழந்தையைக் காப்பாற்றும் பொறுப்பைச் சுமத்திக் கொண்டதுதான் பலன். அவனவன் வயிற்றைக் கழுவிக் கொள்ளவே வேலையும் வருவாயும் கிடைக்காதபோது பெண்டாட்டி, குழந்தை குட்டி என்று பெருகினால் எத்தனை அவஸ்தை தெரியுமா!" என்றான் ராஜு.

"நீ சொல்றதுதான் விநோதமாக இருக்குடாப்பா. எல்லோருமே சீமான்களாகப் பிறக்க முடியுமா! ஏழைகள் எல்லாம் கல்யாணம் செய்து கொள்ளாமலும் குடும்பம் நடத்தாமலும் இருக்கிறார்களா!" என்றாள் சிவகாமி. ராமு கல்யாணம் செய்து கொண்டதினாலும் அவனுக்குக் குழந்தை பிறந்ததினாலும் அவன் எதிலும் குறைந்து போய் விடவில்லை என்ற ரீதியில் அவள் பேச்சு போய்க் கொண்டிருந்தது.

அதற்கு மேல் ராஜு தன் தாயாரின் பேச்சுக்குப் பதில் சொல்ல வில்லை. சிவகாமியும் எழுந்து

# தத்ரூபமான போட்டோ

படங்களுக்கு




## கேவாபான் 33

பகல் வெளிச்சத்திலும், செயற்கை வெளிச்சத்திலும் இந்த மின்னல் வேக பாங்ரோமாடிக் பிலிம் அதிக நேர்த்தியான தெளிவையும், கலர் களைத் தத்ரூபமாகக் கிரகிக்கும் தன்மையும் கொண்டது.

சைஸ்: 620 & 120—ரூ. 2/4




## கேவாகுரோம் 30

பகல் வெளிச்சத்திற்கு உகந்த ஆர்தோ குரோமாடிக் பிலிம், நல்ல கிரகிக்கும் தன்மை, பிரகாசமான படிகள் பதிவு, விசாலமான தோற்றப் பிடிப்பு, மற்றும் நல்ல தெளிவு வாய்ந்தது.

சைஸ் 620 & 120 ரூ. 2/1






இலவச விவரங்களுக்கும் "கேவார்ட்" எக்ஸ்போஷர் கார்டு லெட்டருக்கும் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்:

**Allied Photographics Limited**

அல்லைட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்

(பெயிலிங் டிபார்ட்மெண்ட்) கஸ்தூரி பில்டிங்ஸ், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

கிளை ஆபீஸ்கள்: பம்பாய் ● கல்கத்தா ● மதராஸ் ● புது டில்லி

போய் விட்டான். ஏதேதோ சிந்தனையில் குழம்பிப் போய்ப் பிரமை பிடித்தவன் போல உட்கார்ந்திருந்தான் ராஜு.

அப்போது, ''ஏ......பாட்டி!'' என்று கூப்பிட்டுக் கொண்டே பொம்மையைப் போல வீசிக் கொண்டு நடந்து வந்த பாபு ராஜுவைக் கண்டதும் குடு குடுவென்று உள்ளே ஓடினன். அவன் பிஞ்சுக் கால்கள் தரையில் பாவாமல் ஓடும் அழகு ராஜுவின் மனத்திலே ஒரு குறு குறுப்பை உண்டாக்கிற்று. இது வரை அது போன்ற உணர்ச்சியை அவன் அநுபவித்ததே இல்லை. அவன் உள்ளத்திலே சுழன்று கொண்டிருந்த எண்ணங்களெல்லாம் ஓடியே போய் விட்டன. குழந்தை பாபுவையே பார்த்துக் கொண்டிருந்தான் ராஜு.

உள்ளே ஏதோ காரியமாக இருந்த ராமு ஓடோடி வந்து குழந்தையை வாரி எடுத்துக் கொண்டான். அவனைக் கண்டதும் பாபு மனம் விட்டு உல்லாசமாகக் கலகல வென்று சிரித்துக் கொண்டு ஓடி அவனைக் கட்டிக் கொண்டான்.

''நீ எங்கே போயிருந்தே!'' என்று ராமுவைப் பார்த்துக் கேட்டான்.

''நான் எங்கேயும் போகவில்லையே! இங்கே தானே இருக்கிறேன். பாபு...டேய்...நீ...இந்த மாமாவைக் கவனிக்கவே இல்லையே'' என்றான்.

''அந்த மாமா என்னோடு பேச மாட்டாரே!'' தன் குறு குறுத்த கருவிழிகளை ராஜுவின் மீது பதிய வைத்துக் கொண்டே பேசினன் பாபு. ஆவலும் அழகும் வழியும் அந்தக் குழந்தையின்பார்வை அவன் உடலைச் சிலிர்க்க வைத்து விட்டது.

''பேசுவாரே...நீ கிட்டப் போய் மாமா மடியிலே சாய்ந்துகொண்டு பேசினல் மாமாவும் உன்னோடு பேசுவா. அந்த மாமா உனக்குப் பொம்மை எல்லாம் வாங்கிக் கொடுப்பாளே! தெரியுமா!'' என்று தாஜாப்படுத்தினன் ராமு.

''ஊஹூம் அந்த மாமா பேசமாட்டா!'' என்று முகத்தைச் சுளுக்கிக் கொண்டு தலையை ஆட்டினன் பாபு. ஆனல் அவன் பார்வை மட்டும் ராஜுவிட மிருந்து நகரவில்லை.

''இதோ பாரு அந்த மாமா கூப்பிடறு...போ... போன்னுப் போகணும்'' என்று அவனை ராஜுவின் அருகில் கொண்டு போனன். ராஜுவின் கைகள் அவனை யறியாமல் நீண்டன. எத்தனையோ வருஷங்களாக மலராதிருந்த அவன் இதழ்கள் கூடச் சற்றே விரிந்தன. குழந்தை பாபு தயங்கித் தயங்கி ராமுவைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே அசட்டுச் சிரிப்புடன் ராஜுவின் விரிந்து வரவேற்ற கைகளுக்குள் போய் நின்றான்.

''நீங்க என்னோட பேசுவேளோ!'' என்று கேட்டான் பாபு கபட மில்லாமல்.

ராஜுவுக்கு அவனோடு எப்படிப் பேசுவது என்று தெரியவில்லை. அவன் குழந்தைகளோடு இதுவரை பேசியதே இல்லை. தவிரக் குழந்தையின் ஸ்பரிசம் அவன் உடலைச் சிலிர்க்க வைத்தது. அவன் நெஞ்சை என்னவோ செய்தது. அவனல் பேச முடியவில்லை. குழந்தையைத் தூக்கி மடிமீது உட்கார வைத்துக் கொண்டான்.

''அம்மா. அம்மா...இங்கே பாரு...இந்தக் சுட்டிப் பயல் உன் பிள்ளை மனசைக் கூட மாத்தி விட்டான். குழந்தைகளைத் தொட்டுக் கூடப் பார்க்காதவன் பாபுவைத் தூக்கி வைத்திருக்கிறான்'' என்று குதூகலப்பட்டான் ராமு.

ராஜுவுக்கு வெட்கமாக இருந்தது. தன்னிடம் எப்படி இந்தத் திடீர் மாறுதல் ஏற்பட்டது! இந்தக் குழந்தையிடம் தன்னை யறியாமல் தன் மனம் ஈடுபட்டு விட்டதே என்று திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தான் ராஜு.

ராணுவத்தின் தனிமையிலே நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டிருந்த ராஜுவுக்கு அன்று முழுதும் அந்தச் சம்பவத்தை நினைக்க நினைக்க அவன் உள்ளத்திலே ஏதோ ஒரு புதுமையான கிளுகிளுப்பு உண்டாகிக் கொண்டிருந்தது. மெத்தென்ற பட்டுப் போன்ற அந்தக் குஞ்சுக் கைகள். கருவண்டு போலப் பளபளக்கும் அந்த மருண்ட விழிகள். அந்தக் கபட மற்ற சிரிப்பு, வெல்வெட்டுக் கன்னக் கதுப்புகள்...பாபுவின் உருவம் அவன் கண் முன்னல் நின்று கொண்டே இருந்தது. இந்தப் புது அனுபவத்தினல் அன்றிரவு அவனுக்குத் தூக்கமே வரவில்லை.

நாலைந்து தினங்களில் பாபு ராஜுவிடம் சகஜமாகப் பழகி விளையாட ஆரம்பித்து விட்டான். அடிக்கடி 'ராஜு மாமா' என்று அவன் பெயரைச் சொல்லி அழைத்துக்கொண்டு குடுகுடு வென்று ஓடி வந்து அவன் மடியில் விழ ஆரம்பித்தான். ராஜுவும் வெளியில் போய் வரும்போதெல்லாம் அவனுக்காக ஏதாவது தின்பண்டங்கள் வாங்கி வந்தான். கொஞ்ச நேரம் அவனைக் காணவிட்டால் 'பாபு எங்கே காணும்' என்று விசாரிக்குமளவுக்கு ராஜுவின் மனத்திலே அவன் இடம் பெற்று விட்டான்.

ஒரு நாள் பாபு ஏதோ விஷமம் செய்தான் என்பதற்காக ராமு அவனை ரொம்பவும் கோபித்துக் கொண்டு விட்டான். குழந்தையின் கண்களிலே நீர் மல்க ஆரம்பித்து விட்டது. ராஜு குழந்தையின் அழுகையைக் கேட்டதும் துள்ளி எழுந்திருந்தான். ஓடிப் போய், விக்கி விக்கி அழும் அவனை வாரி அணைத்துக்கொண்டு தம்பியைக் கடிந்து கொண்டான். ராமுவுக்கு ஒரே வியப்பாக இருந்தது. பாபுவின் அழுகையை அவன் பிரமாதமாக நினைக்கவில்லை. ஆனல் தன் அண்ணுவின் செய்கையும், அவனிடம் கொஞ்ச நாளாக ஏற்பட்டிருந்த மாறுதலும் அவனுக்குத் திகைப்பாக இருந்தது.

** ** **

மருமகளை வீட்டுக்கழைத்துவர இன்னும் ஒரு மாதம் ஆகுமாதலால் தம்பியின் குழந்தையைப் போய்ப் பார்த்து விட்டு வரும்படி ராஜுவிடம் அவன் வந்தது முதல் சொல்லிக் கொண்டிருந்தாள் சிவகாமி. முதலில் சுவாரஸ்ய மில்லாமல் அதை அலட்சியமாக நினைத்த ராஜுவின் மனத்திலே 'ராமுவின் குழந்தையைப் பார்க்க வேண்டும்' என்று ஓர் எண்ணம் இப்போது வளர்ந்திருந்தது. ராமுவின் மாமனாரும் கூட வந்து சம்பந்தி என்ற முறையில் ராஜுவைத் தன் ஊருக்கு வரும்படி அழைத்து விட்டுப் போனார்.

ராமு மாமனார் வீடு பத்து மைலில் இருந்தது. ஒரு நாள் அண்ணுவை அழைத்துக்கொண்டு தன் மனைவியையும் குழந்தையையும் பார்க்கப் புறப்பட்டான் ராமு.

ராஜுவுக்கு ராமுவின் மாமனர் வீட்டில் பலமான உபசரிப்பும் விருந்தும் ஏற்பாடாகியிருந்தது. குழந்தையைக் கொண்டு வந்து ராஜுவின் மடியில் வைத்தார்கள். முதலில் சங்கோசப் பட்ட ராஜுவுக்குக் குழந்தை மடியில் வைக்கப்பட்டதும் நெஞ்சிலே ரத்தம் குபு குபு என்று பொங்கி நிறைந்தது.

செலுலாயிடு பொம்மையைப் போலக் குஞ்சுக் கையையும் காலையும் உதைத்துக் கொண்டு ஒரு ஜீவன் தன் மடியிலே விளையாடும் அனுபவத்தை அவன் அனுபவித்ததே இல்லை. அனுபவிப்போம் என்று நினைக்கவும் இல்லை. அவன் நெற்றியிலே

ப்பார்வை நீர்க்கோல மிட்டது. குழந்தை ரொம்ப அழகாக இருந்தது. தாமரை இதழ்களைப்போன்ற சிவந்த மேனி. சர்க்கரையை விரலால் எடுத்துச் சிமிழ் போன்ற வாயில் தடவினபோது அவன் விரலைக் குழந்தை பிடித்துக் கொண்டது. மிருதுவான அதன் ஸ்பரிசம் ராஜுவின் உடலைச் சிலிர்க்க வைத்து விட்டது. குழந்தையின் கண்களுக்கு என்ன தெரிந்ததோ, இதழ் மலரச் சிரித்தது.

"வாழ்க்கையிலே வெறுப்புக் கொண்டு கல்யாணமும் குழந்தைகளும் பந்தங்கள் என்று பயந்து நடுங்கினயே, இப்போது என்னைக் கண்டு உன் நெஞ்சு ஏன் இப்படி அடித்துக் கொள்ளுகிறது!" என்று கேட்டுக் குழந்தை ஏளனமாகச் சிரிப்பது போல இருந்தது ராஜுவுக்கு.

குழந்தை அந்தப் பாபுவைப் போலவே இருந்தது. ஒரு வேளை அது அவன் மனப் பிரமையாக இருக்கலாம். பார்க்கப் பார்க்க அழகாக, அவன் தவிப்பை அதிகமாக்குவதாக இருந்தன அதன் ஒவ்வொரு நெளிவும் அசைவும். அவன் மனத்திலே பெரிய பூகம்பத்தை உண்டாக்கி விட்டு அழ ஆரம்பித்தது குழந்தை. ராஜுவிடமிருந்து குழந்தையை வாங்கிக் கொண்டார்கள்.

இந்த அழகான குழந்தையைக் கொஞ்சிக் குலாவி விளையாடும் உரிமை படைத்தவன் ராமுதானே என்று ராஜுவுக்குப் பொறாமையாக இருந்தது. இன்னும் நாலைந்து வருஷத்தில் இந்தக் குழந்தையும் பாபுவைப் போலாகி விடுவான் என்று எண்ணிய போது பாபுவைப் போல ஒரு குழந்தை தன்னுடன் விளையாட எப்போதும் இருக்க வேண்டும் என்ற ஒரு ஆசை கொஞ்சநாளாக அவனுள் படர்ந்து தலையை நீட்டிற்று.

"இது என்ன பைத்தியக்கார ஆசை! என்னோடு விளையாடிக் கொண்டிருக்க யார் ஒரு குழந்தையைக் கொடுப்பார்கள்...சீச்சீ!"

ஆனால் கட்டுப்பாட்டுக்கு அடங்காமல் இஷ்டப்படி சிந்திக்கும் சுதந்திரம் பெற்று விட்டது மனம். "யார் கொடுப்பார்கள்! அப்படியே யாராவது கொடுத்தாலும்தான் அது உன் உரிமையாகி விடுமா!... நீ உரிமையோடு கொஞ்சி மகிழ உன் மனைவியால்தான் உனக்கு ஒரு குழந்தையைக் கொடுக்க முடியும்!" என்று உள்ளத்தின் அடித் தளத்திலே அழுத்தி வைத்து அலட்சியம் செய்யப்பட்ட விஷயத்தை மேலே கொண்டு வந்து உறுத்திற்று.

"ஐயோ, மனைவியா! கல்யாணமா!" என்று நடுங்கிற்று, அவனால் வளர்க்கப்பட்ட விரக்திக்கு அடிமையான மனசு.

'ஏன், இப்படி நடுங்குகிறாய்! உன்னைவிட மோசமான நிலையில் உள்ளவர்கள் இல்லையா! அவர்கள் கல்யாணம் செய்து கொண்டு ஆனந்தமாக இருக்கிறார்களே! இது போல ஆசைகளை நசுக்கிக் கொண்டு அதிக நாள் வாழ்ந்து விட முடியாது. பிறரிடமிருந்து ஒதுங்கி வாழ நினைக்கும் உன்னையும் உலகம் ஒதுக்கி விடும். உன் வாழ்வு தாழ்வுகளிலோ, உன் இன்ப துன்பங்களிலோ பங்கு கொண்டு உனக்காகக் கண்ணீர் வடிக்க ஒருத்தியை நீ உரிமையாக்கிக் கொள்ளத்தான் வேண்டும். அப்போதுதான் இந்த உலகத்திலே நீ சுகத்தைக் காண முடியும்' என்று சீர்திருத்தவாதியின் ஆவேசத்தோடு ஆர்ப்பரித்தது விடுதலை பெற்ற உணர்ச்சி.

ராஜுவின் வைராக்கியமும், விரக்தியும் வெல வெலத்துப் போய் இடிந்து விழுந்து கொண்டிருந்தன. அதன் வீழ்ச்சியைக் காண அவனுக்குச் சகிக்க வில்லை. நெற்றிப் பொட்டுத் தெறித்தது.

"கடைசியில், மனத்தில் ஆசாபாசங்கள் வேரூன்று முன் அங்கிருந்து கிளம்பி விட வேண்டும். வாழ்விலே நப்பாசை கொள்ள ஆரம்பிக்கும் முன் சிந்தனைக்குப் போக்குக் காட்டி அதன் திசையை மாற்றிவிட இந்தச் சூழ்நிலையிலிருந்து ஓடிவிட வேண்டும்" என்று முடிவு கட்டினான்.

** ** **

அவன் திடீரென்று பங்களூர் போக வேண்டுமென்று சொன்னபோது சிவகாமி திகைத்து விட்டாள். "என்னடா, மூன்று மாத லீவு என்று சொன்னாய்! வந்து இருபது நாள் கூட ஆகல்லே, அதுக்குள்ளே பங்களூர் போகணுங்கிறயே! இங்கே உனக்கு என்ன முள்ளுமேல் இருக்காப் போல இருக்கா!" என்றாள்.

ஆனால் ராஜு தான் கிளம்புவதற்கு விளக்கம் கொடுத்துக் கொண்டிருக்க வில்லை. தன் நண்பன் ஒருவன் அவசியம் வரும்படி எழுதி இருப்பதாயும், பத்து நாள் அவனுடன் இருந்துவிட்டு வேலையில் சேருவதற்கு முன் இங்கு வருவதாகச் சொல்லி விட்டுக் கிளம்பி விட்டான். எப்படியாவது கொஞ்ச நாள் அந்தச் சூழ்நிலையிலிருந்து ஒதுங்கி இருந்தால் தளர்ந்த மனம் தன் நிலைப்படும் என்று மனப்பால் குடித்தான் ராஜு.

அவன் ஊருக்குக் கிளம்பிக் கொண்டிருக்கும் போதுதானா அந்தப் பயல் ஓடி வரவேண்டும்!

"எங்கே ராஜு மாமா போகிறீர்கள்......? ஊருக்கா! நானும் வருவேன்!" என்று பெட்டி மீது ஏறி உட்கார்ந்து கொண்டான் பாபு.

ராஜுவுக்கு மனத்தை என்னவோ செய்தது.



"என்ன! போய்விட்டு வருகிறீர்களா? நான் சோதிடம் பார்த்துவிட்டு வரலாம் என்று இருக்கிறேன்!"

"இனிமேல் தான் போகப் போகிறீர்களா? முகத்தைப் பார்த்தால் சோதிடம் பார்த்து விட்டு வந்த மாதிரியல்லவா விருக்கிறது!"

"என்னோடே பேச மாட்டாயா மாமா!" என்று பரிதாபமாகப் பாபு கேட்டபோது ராஜூவின் நெஞ்சே வெடித்து விடும் போலிருந்தது. தொண்டையை அடைத்துக் கொண்டது. பொங்கி வரும் ஆசையை அழுத்திக் கொண்டு படுக்கையை எடுத்துக் கொண்டு போய் வண்டியில் வைக்க வெளியே போனான்.

"டேய்......பாபு......ராஜூ மாமா ஊருக்குப் போறு, நாம் ஸ்டேஷனுக்குப் போய் வண்டியேத்தி விட்டுட்டு வரலாம், வா" என்று சொன்னதும் குதித்தோடி வந்து ராமுவிடம் தொத்திக் கொண்டான் குழந்தை பாபு. குதிரை வண்டியில் ஸ்டேஷனுக்குச் சென்றனர். வழியில், "ராஜூ மாமா ஏன் ஊருக்குப் போறு!" என்றான் பாபு.

"நீ பேச மாட்டேங்கிறயே! அதனாலே உங்கிட்ட கோவிச்சுக் கொண்டு மாமா ஊருக்குப் போகிறார்" என்றான் ராமு.

"நான் மாமா கூடப் பேசினேனே......மாமா தான் என் கூடப் பேசல்லே" என்றான் குழந்தை தொங்கிய குரலில். ராஜூவுக்கு இதயமே வெடித்து விடும் போலிருந்தது.

பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தபோது பாபு ஓடிவந்து ராஜூவின் கால்களைக் கட்டிக் கொண்டான். அதற்கு மேல் அவனால் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு இருக்க முடியவில்லை. கண்களில் நீர் ததும்பக் குழந்தையை வாரி அணைத்துக் கொண்டான். யார் பெற்ற குழந்தையிடமோ என் உள்ளம் இப்படி அடிமையாகி விட்டதே! இது போல ஒரு குழந்தைக்கு நானே தகப்பனாக இருந்தால் அந்த நிலை எத்தனை இன்பமாக இருக்கும் என்று நினைத்தபோது அவன் நெஞ்சு தழதழத்தது.

"ராஜூ மாமா...நீ எப்போ வருவே!" என்று மழலை பேசி அவன் நெஞ்சை நெகிழ வைத்துக் கொண்டிருந்தான் பாபு. ராஜூவின் மனம் அடியோடு மாறி விட்டது. ஆனால் அந்தத் தோல்வியை ஒப்புக்கொள்ள முடியாமல் உறுதியோடு இருப்பதாகப் போலியாக நடித்தான். ஏதோ ஒரு வேகத்தில் கிளம்பி விட்டான். ஸ்டேஷனுக்கு வந்ததும், பாபுவைத் தூக்கிக் கொண்டதும் அவன் உறுதி எல்லாம் தெறித்து விழுந்து விட்டது. எதற்காக இப்பொழுது பெங்களூர் போக வேண்டும் என்று போராடத் தொடங்கி விட்டது உள்ளம். ஆனால் பிரயாணத்தை ரத்து செய்து திரும்பிவிடத் தைரியமில்லை.

அவன் உள்ளத்தின் குமுறலைப் போலக் குமுறிக் கொண்டு வந்து நின்றது ரயில் வண்டி. ராமு பெட்டியையும் படுக்கையையும் வண்டியில் ஏற்றினான். குழந்தையை ராமுவிடம் கொடுத்து விட்டு வண்டியில் ஏறிக் கொண்டான் ராஜூ.

"போயிட்டு வரட்டுமா பாபு!" என்றபோது அவன் குரல் கம்மி விட்டது. துக்கம் வந்து அடைத்துக்கொண்டிருந்தது.

ஆனால் அவன் அழவில்லை. "ஹோ" என்று பாபுதான் கதறினான்! "ராஜூ மாமா என்னை விட்டுட்டுப் போறாளே! நானும் மாமா கூடப் போவேன்" என்று ராமுவின் பிடிக்கு அடங்காமல் திமிறிக் கொண்டு நகரும் ரயிலோடு ஓடினான் பாபு.

"பாபு...டேய் பாபு..." என்று பதறிப் போய் அவனைப் பிடிக்க ஓடினான் ராமு.

அதே சமயத்தில் பெட்டியையும் படுக்கையையும் பிளாட்பாரத்தில் வீசி விட்டுக் கீழே குதித்த ராஜூ குழந்தை பாபுவை அள்ளி அணைத்துக் கொண்டு நின்றான். அவன் உடல் இலேசாக நடுங்கிக் கொண்டிருந்தது. கண்களிலிருந்து கண்ணீர் மாலை மாலையாக வழிந்து கொண்டிருந்தது. குழந்தை பாபு ராஜூவின் உடலோடு உடலாக ஒட்டிக் கொண்டு "நானும் வருவேன், உன் கூட வருவேன்" என்று விக்கினான்.

ராமு திகைத்துப் போய் நின்றான்.

வண்டி வெகு தூரம் சென்று புள்ளியாகக் கரைந்து விட்டது. ஸ்டேஷனின் கலகலப்பு மங்கி அமைதியாக இருந்தது, ராஜூவின் மனசைப் போல.

⁂ ⁂ ⁂

தன் மடியில் உட்கார்ந்திருந்த பாபுவின் தலையைக் கோதிக் கொண்டே ஒரு நாள் ராஜூ தன் தாயாரிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

"லீவு இன்னும் ஒரு மாசம் தான் இருக்கம்மா. இந்த இரண்டு மாசமா உன் கைச் சாப்பாட்டைச் சாப்பிட்டு விட்டு அங்கே போய் எப்படி இருக்கப் போகிறேன்னு எனக்கே புரியல்லே. நான் சொல்றதைக் கேளு...ராமுவுக்கோ இனிமேல் உன் பாதுகாப்பு வேண்டாம். அவன் மனைவி இருக்கா. நீ என் கூட வந்து விடு" என்றான்.

தனக்குக் கல்யாணம் செய்து கொள்ள விருப்பம் என்பதை இத்தனை சாதுர்யமாகச் சொல்லக் கற்றுக் கொண்டு விட்ட தன் பிள்ளையின் சாமர்த்தியத்தை நினைத்துப் பூரித்துப் போனாள் கிழவி.

"அவனுக்கு ஒருத்தி இருக்காப் போல நீயும் ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு வக்கணையாகச் சமைச்சுப் போட அவளை அழைத்துக் கொண்டு போ. நான் எத்தனை நாளைக்கு உனக்குச் சமைச்சுப் போட முடியும்! எனக்கு என்ன பதினாறு வயசா இப்போ!" என்றாள் சிவகாமி. அவளுக்குத் தன் பிள்ளையின் மனம் மாறிக் கல்யாணம் பண்ணிக் கொள்ளவும் சம்மதித்ததில் உள்ளூற ரொம்ப சந்தோஷம்!

ஜமேதார் ராஜூ பதிலே பேச வில்லை. அவன் மனமும் பூரித்துத்தான் இருந்தது. அவன் உள்ளத்தைத்தான் அவன் தாயார் புரிந்து கொண்டு விட்டாளே! பிறகு என்ன!

இனி அவனுக்காக, அவன் உரிமையோடு கொஞ்சி மகிழ ஒரு பாபு பிறக்காமலா போகிறான்!

# பஞ்சுவின் சிறைவாசம்!

எஸ். வைத்தியநாதன்

சென்ற மூன்று மாதங்களாகப் பஞ்சு 'நான் ஒரு முட்டாள், அடி முட்டாள், பரம முட்டாள்' என்று சோகத்துடன் ஜபித்துக் கொண்டிருந்தான். இந்த ஞானோதயம் அவனுக்கு அடுத்த வீட்டு அப்பாசாமியுடன் கடும் விரோதம் ஏற்பட்டதிலிருந்துதான் பிறந்தது. அப்பாசாமி வெறும் அப்பாசாமியாக இருந்தால் அவன் அவர் விரோதத்தைக் கடுகளவும் லட்சியம் செய்திருக்க மாட்டான். அவர் அழகி ஜயத்தின் அப்பாவாக வேறு அல்லவா இருந்தார்!

அன்று மாலை பஞ்சு எங்கேயோ போய் விட்டு வீட்டுக்கு வந்த போது அவன் வீட்டு வாசற் படிக்கு எதிரே அப்பாசாமியின் அருமைச் சுவானமாகிய 'ரோஸ்' நின்று கொண்டிருந்தது. பஞ்சு இருக்கிறானே, அவன் சிங்கத்தைக் கண்டுகூடப் பயப்பட மாட்டான். ஆனால் நாய்கள் என்றால் அவைகளின் அண்டையிலேயே வர மாட்டான். அற்ப சகவாசம் பிராண சங்கடம் என்பது அவன் கருத்து. அத்தகைய கொள்கை உடையவன் அவன் என்பதை அப்பாசாமியின் நாய் உணர்ந்து அவனுக்கு வழி விட்டு நகர்ந்து போயிருந்தால் ரொம்ப சிலாக்கியமாயிருந்திருக்கும். தன் அற்பத் தன்மையை உணர்ந்து கொள்ள அல்லது ஒப்புக் கொள்ள மறுத்து அந்த நாய் அங்கேயே வேரூன்றி விட்டது போல் நின்று கொண்டிருந்தது.

பதினைந்து கெஜ தூரத்துக்கு அப்பால் நின்றபடியே 'சூ' என்று நாயை நகரும்படி ஆக்ஞாபித்தான் பஞ்சு.

'உர்...' என்று காதுகளை நிமிர்த்திக் கொண்டு உடலை விறைத்துக் கொண்டு உறுமினார் பைரவர்.

'இந்த அப்பாசாமி நாயைக் கட்டிப் போடாமல் அவிழ்த்து விட்டு விட்டு நம் வயிற்றெரிச்சலைக் கட்டிக் கொள்கிறாரே' என்று ஆத்திரத்துடன் எண்ணமிட்டான் பஞ்சு. இன்னும் இரண்டடி பின்னால் தள்ளி நின்று கையை ஓங்கினான்.

"ஏ, அற்ப நரனே! என்னைப் பார்த்து நீ கையை ஓங்குவதா?" என்று ஆத்திரம் அடைந்த ரோஸ் பயங்கரமாய்க் குரல் கொடுத்துக் கொண்டு அவனை நோக்கி ஓடி முன்னால் வந்தது. 'இன்றோடு தொலைந்தோம்' என்று குலை நடுங்கிய பஞ்சு தப்பித்துக்கொள்ள வழி இருக்கிறதா என்று சுற்றுமுற்றும் பார்த்தான். கீழே கிடந்த கல் ஒன்று கண்ணில் படவும் குனிந்து கையில் எடுத்தான். அதைப் பிரயோகிக்க எண்ணவில்லை அவன். கல்லைக் காட்டிப் பயமுறுத்தினால் ரோஸ் புறமுதுகு காட்டி ஓடி விடும் என்றுதான் நினைத்தான்.

அவன் யூகம் தவறாயிற்று. ரோஸ் சீறிக் கொண்டு தன் பயங்கரமான கோரப் பற்களைக் காட்டியவாறு அவனை நோக்கிப் பாய்ந்தது. அதற்கு மேலும் பஞ்சு யோசிக்க முடியுமா? மின்னல் வேகத்தில் பாய்ந்தது அவன் கையிலிருந்த கப்பிக் கல். ரோஸின் கபாலத்திலிருந்து அடுத்த கணத்தில் உதிரம் பெருகிக் கொண்டிருந்தது. பயங்கரமான ஓலத்துடன் அப்படியே சாய்ந்தது ரோஸ்.

நாயின் உறுமலைக் கேட்டு என்ன விஷயம் என்று பார்ப்பதற்காக வீட்டிலிருந்து வெளியே வந்த அப்பாசாமி சீற்றத்துடன் பஞ்சுவை நோக்கி, 'கொலைகாரா! வாயில்லா ஜீவனைக் கொன்று விட்டாயே!' என்றார்.

அவருடைய நாயின் உறுமலுக்கும் அவருடைய உறுமலுக்கும் வித்தியாசம் ஒன்றுமில்லை என்று எண்ணினான் பஞ்சு.

ஒரு வாரம் மண்டைக் காயத்துடன் அவஸ்தைப்பட்ட ரோஸ் கடைசியில் 'கொட்டாவி' விட்டு விட்டது. 'சரிதான், இனிமேல் அப்பாசாமி நமக்கு ஜன்ம வைரிதான்' என்று தோன்றி விட்டது பஞ்சுவுக்கு. போனால் போகிறதென்று விட்டுவிட முடியுமா? அவர் பெண் ஜயம் ஒருத்தியிருக்கிறாளே! எனவே அவர் வீட்டுக்கு மறுபடியும் போய்த் தன்னை மன்னிக்கும்படி வேண்டிக் கொண்டு, வேறு ஒரு நாய் எங்காவது பார்த்து வாங்கிக் கொண்டு வந்து கொடுத்து விடுவதாகக் கூடச் சொல்லிப் பார்த்தான்.

* * *

"ஜயம்! பூங்கா வரை போய் விட்டு வரேன்" என்று சொல்லி விட்டுக் கிளம்பினார் அப்பாசாமி. வாசலில் நின்று கொண்டிருந்த பஞ்சுவின் காதில் இந்த வார்த்தைகள் விழுந்தன. கைத்தடியுடன் அப்பாசாமி கிளம்பிப் போவதையும் பார்த்தான். பிரமாத யோசனை ஒன்று 'பளிச்'சிட்டது அவனுக்கு. அப்பாசாமியின் மனைவி ஊருக்குப் போயிருக்கிறாள் என்பது அவனுக்குத் தெரியும். எனவே அவர்கள் வீட்டில் அப்போது ஜயத்தைத் தவிர ஈ காக்கையிருக்காது. அங்கே போய் அவளிடம் தன்மேல் குற்றமொன்றுமில்லை என்பதை நிரூபித்து அவள் அப்பாவிடமிருந்து தனக்கு மன்னிப்பு வாங்கித்தர வேண்டுமென்று வேண்டிக் கொண்டால் என்ன? அவனிடத்தில் அவளுக்குச் சிரத்தையிருந்தது என்பது அவனுக்குத் தெரியும். எனவே அவளைச் சரணமடைந்தால் நிச்சயம் வெற்றி கிடைக்கும். அது ஒன்றுதான் வழி. அடுத்த நிமிஷம் அப்பாசாமியின் வீட்டில் புகுந்து விட்டான் பஞ்சு.

பஞ்சுவை வெறித்து நோக்கியவாறே பிரமித்து நின்றாள் ஜயம். அப்பிரமிப்பின் ஊடே

மெல்லிய மகிழ்ச்சிச் சரம் ஒன்று ஓடியதை அவன் கவனிக்கத் தவறவில்லை. அவளைக் கண்குளிரப் பார்த்துக் கொண்டே கொஞ்ச நேரம் மௌனமாய் நின்றான்.

ஜயம்தான் முதலில் மௌனத்தைக் கலைத்தாள் :—"என்ன சமாசாரம்? எதற்காக இப்படி விழிக்கிறீர்கள்?"

"இல்லை...வந்து...தலைவலியா யிருக்கிறது ...தைலம் ஏதாவது இருக்குமா?" என்று கேட்டான் பஞ்சு.

"நல்ல அருமையான கூந்தல் தைலம் வைத்திருக்கிறேன்......"

"சேச்சே! நான் தலைவலித் தைலம் அல்லவா கேட்டேன்?"

"ஓஹோ! நாங்கள் தலைவலித் தைலம் வியாபாரம் பண்ணவில்லை. தெருக்கோடியில் மருந்துக் கடை இருக்கிறது பாருங்கள். அங்கே ஒசத்தியான நீலகிரித் தைலம் கிடைக்கும்!" என்றாள்.

"யோசனைக்கு மிக்க வந்தனம்......அது சரி, அம்மா ஊரில் இல்லைபோலிருக்கிறதே!"

"அம்மா ஊரில் இல்லை. மாமாவுக்கு உடம்பு சரியில்லை யென்று பார்க்கப் போயிருக்கிறாள். வர நாலு நாள் ஆகும். இன்னும்? அப்புறம்?"

"வீட்டுக் காரியங்களெல்லாம் நீ ஒண்டியாகத்தான் செய்கிறாயாக்கும்!"

"அத்தைப் பாட்டி மாதிரி கேள்விகள் கேட்பதை விட்டு, நீங்கள் சொல்ல வந்த விஷயத்தைச் சொல்லுங்கள்......"

"ரொம்ப அவசரப் படுகிறாயே?"

"அப்புறம் அப்பா வந்து விடுவார்!" என்று புன்னகை புரிந்தாள் அவள்.

அவள் விளையாட்டுக்குத்தான் சொன்னாள். ஆயினும் உண்மையாகவே வாசலில் அப்பா சாமியின் குரல் கேட்டது. தெருவில் யாரோ என்னவோ கேட்பதற்குப் பதில் சொல்லிக் கொண்டே உள்புறம் வந்துகொண்டிருந்தார்!

பஞ்சுவும் ஜயமும் திகிலுடன் ஒருவரை யொருவர் பார்த்து விழித்தனர்.

"ஜயம், என்னைக் கண்டால் அவருடைய கோபத்தில் என்ன செய்வாரோ? நான் இந்த அறையில் போய் ஒளிந்து கொள்கிறேன்" என்று நடுக்கத்துடன் கூறிக் கொண்டே எதிரே யிருந்த காமிரா அறையில் பாய்ந்தான் பஞ்சு. கோடியிலிருந்த பீரோவின் பின்னால் மறைந்து கொண்டான்.

உள்ளே வந்த அப்பாசாமி பெண்ணைப் பார்த்தார். சுற்று முற்றும் பார்த்தார்.

"ஏன் அப்பா, இதுக்குள்ளே வந்து விட்டீர்கள்?" என்றாள் அடித்துக் கொள்ளும் நெஞ்சுடன் ஜயம். அவர் காமிரா அறைக்குள் போகாதிருக்க வேண்டுமே என்ற திகில் அவளுக்கு!

"பொடி டப்பியை எடுத்துக் கொள்ள மறந்து போய் விட்டேன்... ஏன் குழந்தை! இங்கே ஏதோ பேச்சுக்குரல் கேட்டாப்போலிருந்ததே!" என்றார் அவர்.

அவள் இதயம் இடம் பெயர்ந்து விட்டது போலிருந்தது. "இங்கே யாரும் பேசவில்லையே, அப்பா! நான்தான் லலிதா சஹஸ்ரநாமம் சொல்லிக் கொண்டிருந்தேன்" என்றாள் சன்ன ஸ்வரத்தில்.

"ஓஹோ அப்படியா! வயசாயிடுத்தோல்லியோ? உன் குரல்கூடச் சரியாகத் தெரியவில்லை எனக்கு! யாரோ இரண்டு பேர் பேசற மாதிரியா யிருந்தது!......உம்" என்றபடி அங்கவஸ்திரத்தையும் கைத் தடியையும் கூடத்துக் 'கோட் ஸ்டாண்'டில் மாட்டிவிட்டுச் சாய்வு நாற்காலியை இழுத்துத் தாழ்வாரத்தில் போட்டார் அப்பாசாமி.



ஜயம் திகைத்தாள். "ஏன், அப்பா! நீங்கள் பூங்காவுக்குப் போகவில்லையா?" என்றாள்.

"நாழிகையாகி விட்டது. இனிமேல் எங்கே போவது?" என்று கூறிய அவள் தந்தை புஸ்தகத்தைப் பிரித்த வண்ணம் நாற்காலியில் சாய்ந்து விட்டார்.

உள்ளே அகப்பட்டுக் கொண்ட பஞ்சுவின் மனநிலையை வர்ணிக்கத் தரமன்று. திகிலுடன் நடுநடுங்கினான். அப்பாசாமியைச் சபித்தான். வந்தது வரட்டும் என்று விரைவாக வெளியேறி விட்டால் என்ன என்றுகூட ஒரு கணம் யோசித்தான். ஆனால் ஜயம் எட்டாக் கனியாகி விடுவாளே!

அப்பாசாமி சாப்பிட உள்ளே வரும் சமயம் பஞ்சு நழுவி விடலாம் என்ற தீர்மானத்துடன் இருந்தான். ஏழரை மணிக்கு அவரைச் சாப்பிட அழைத்தாள் ஜயம். "என்னமோ இன்று பசியே இல்லையம்மா! நீ வேண்டுமானால் சாப்பிடு. நான் பிற்பாடு சாப்பிட்டுக் கொள்கிறேன்!" என்றார் அவர்.

அவனுக்குச் சாப்பிடப் பிடிக்குமா?

அப்பாவை எட்டு மணிக்கு மீண்டும் ஒரு தரம் அழைத்தாள் ஜயம். "நீ சாப்பிடு அம்மா! பத்து மணிக்குத்தான் எனக்குப் பசி எடுக்கும்!" என்றார் தந்தை.

"அட படுபாவி மனுஷா!" என்று துயரத்திலும் ஆத்திரத்திலும் தன்னையும் மீறி முணுமுணுத்து விட்டான் பஞ்சு.

அப்பாசாமி சட்டென்று நிமிர்ந்தார். "ஜயம்! யாரோ உள்ளே முணு முணுத்த சத்தம் கேட்க வில்லை?" என்றார் கூடத்திலிருந்த புதல்வியிடம்.

அவள் கஷ்டத்துடன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு "ஏதோ பூனை முனகுகிறது அப்பா! வேறொன்றுமில்லை!" என்று சமாதானம் செய்ய முயன்றாள்.

"அந்தத் தடியை எடு, ஜயம்! இந்த மாதிரி மனுஷக் குரலில் முனகும் பூனை ரொம்பப் போக்கிரிப் பூனையாகத் தானிருக்கணும்! அதை அடிச்சு இந்தத் தெருவை விட்டே விரட்டி விட்டுத்தான் மறு காரியம்" என்று எழுந்தார் அப்பாசாமி.

"சரி! இன்றைக்கு நாம் உயிரோடு மீளப் போவதில்லை" என்று கருதி விட்டான் பஞ்சு. 'சட்'டென்று ஒரு யுக்தி தோன்றியது அவனுக்கு. அந்த அறையில் உயரே பாத்திரங்கள் வைக்கும் பரண் ஒன்று போடப் பட்டிருந்தது என்பதை அப்போதுதான் கவனித்தான் அவன். ஜன்னலில் கால் வைத்துப் பீரோமேல் ஏறிப் பரணுக்குள் புகுந்து ஒளிந்து கொள்ளத் தீர்மானித்துப் பீரோமேல் ஏறி விட்டான். பரணுக்குள் அவன் புகும்போது ஜயம் தந்தையிடம் கூறிக் கொண்டிருந்தாள்:—"நீங்கள் பேசாமல் படியுங்கள், அப்பா! அதோ அந்தப் பூனை ஜன்னல் வழியாகக் குதித்து வெளியே போய் விட்டது."

"அப்படியா! அந்தப் பூனை இன்று நல்ல முகத்தில் விழித்திருக்கிறது...அகப்பட்டிருந்தால் நொறுக்கியிருக்க மாட்டேனா?" என்று கூறிவிட்டு மறுபடியும் படிப்பதில் ஈடுபடலானார் தந்தை. பஞ்சு கீழே இறங்கி யதாஸ்தானத்தை அடைந்தான்.

ஜயம் நூறாவது தடவையாக அவரை வற்புறுத்தி அழைத்தாள் சாப்பிடுமாறு. அதற்குள் மணியும் பத்தாகி விட்டது. அப்பாசாமியும் சாப்பிட இணங்கி உள்ளே போனார். நாலு மணி நேரம் சிறைவாசம் அனுபவித்த பஞ்சு தன் குல தெய்வத்தை வாழ்த்திவிட்டு ஓரே ஓட்டமாகத் தெருக் கதவைத் திறந்து கொண்டு தன் வீட்டை நோக்கி ஓடினான்.

அன்றிரவு முழுதும், தான் சிறைப்பட்டிருப்பது போலவும், அப்பாசாமி தடியால் தன்னுடைய மண்டையைப் பிளப்பது போலவும், போலீஸில் தன்னைப் பிடித்துக் கொடுப்பது போலவும், வித விதமான பயங்கரக் கனவுகள் கண்டு உளறி யடித்துக் கொண்டிருந்தான் பஞ்சு.

* * *

மறுநாள் மாலை அதே நேரம். பஞ்சு தெருவில் நின்று கொண்டிருந்தான். அப்பாசாமி தடியைச் சுழற்றிய வண்ணம் வெளியே கிளம்பிப் போனார். பஞ்சு ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து விட்டு அவர் உலாவப் போகிறார் என்பதை நிர்ணயித்துக் கொண்டான். முதல் நாள் அனுபவமெல்லாம் மறந்து விட்டது அவனுக்கு! இதயம் மகிழ்ச்சியினால் துள்ளி விளையாடியது. ஜயத்தின் வீட்டுக்குப் போய் முதல் நாள் சம்பாஷணையை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து நடத்த வேண்டும் என்று துடித்தான். எனினும் அப்பாசாமி முதல் நாள் மாதிரி உடனே திரும்பி வந்து விட்டால் என்ன செய்கிறது என்ற அச்சத்தினால் கால் மணி நேரம் காத்திருந்து விட்டு அவர் வர

வில்லை யென்பதைக் கண்டு தைரியமடைந்து வீட்டுக்குள் ஆனந்தத்துடன் நுழைந்தான்.

கூடத்தில் சுவாமி படத்துக்கு முன்னால் விளக்கேற்றி வைத்துக் கொண்டிருந்த ஜயத்தின் கவனத்தைக் கவருவதற்காக ஒரு தரம் கனைத்தான் பஞ்சு. அவள் நிமிர்ந்து பார்த்தாள். ஏனோ அவள் முகம் வெளுத்துப் பீதியையும் பரபரப்பையும் காட்டியது.

அதே விநாடியில் கூடத்து அறையிலிருந்து ஸ்ரீமான் அப்பாசாமி வெளிப்பட்டுப் பஞ்சுவைப் பார்த்துப் புன்னகை செய்தார்! "நான் உன்னை எதிர்பார்த்தேன், அப்பா! அதனால் தான் பின் தெருவழியாய் வந்து கொல்லை வாசற்படியால் நுழைந்து இங்கே காத்திருக்கிறேன்" என்று கூறி இடி இடி யென்று நகைத்தார் அவர். கூரை பெயர்ந்து பஞ்சுவின் தலையில் விழுந்தது போலிருந்தது.

அந்தச் சிரிப்புக்குப் பின்னால் பிரளயாக்னி மறைந்திருக்கிறது. அது எந்தக் கணத்திலும் வெளிப்பட்டுத் தன்னைப் பஸ்மீகரமாக்கி விடலாம் — விடப்போகிறது என்ற பீதியுடன் தூணைப் பிடித்துக் கொண்டு கீழே சாய்ந்து விடாமல் தன்னைக் காப்பாற்றிக் கொண்ட பஞ்சு, கூடத்தில் நின்ற ஜயத்தையும், அவள் தந்தையையும் மாறி மாறிப் பார்த்து விழித்தான். 'தன்னை எப்படி அவர் எதிர்பார்த்திருக்கக்கூடும்?' இந்தக் கேள்வி திரும்பத் திரும்ப அவனுள் எழுந்து கொண்டிருந்தது.

"நேற்றைய அனுபவத்துக்குப் பிறகும் நீ இங்கு வரத் துணிகிறாயா என்பதைப் பார்த்து விட வேண்டும் என்பதற்காகவே போக்குக் காட்டி விட்டு இங்கே திரும்பி வந்து உள்ளே உட்கார்ந்தேன்" என்றார் அப்பாசாமி.

'நேற்று சமாசாரம் தெரியுமா அவருக்கு!' என்றதும், பஞ்சு—ஜயம் இருவருமே மூர்ச்சை போடும் நிலையை அடைந்து விட்டார்கள்!

அப்பாசாமி மேலும் கூறினார்: "நீங்கள் திடுக்கிட வேண்டாம்! சொல்லுகிறேன். பஞ்சு! நேற்று நீ என் வீட்டில் நுழைவதைப் பொடி டப்பிக்காகத் திரும்பி வரும்போது தூரத்திலிருந்தே பார்த்து விட்டேன். ஆத்திரத்துடன் விரைந்து இங்கே வந்து பார்த்தால் உன்னைக் காணோம்! என் வருகையை அறிந்து நீ இந்த அறையில்தான் ஒளிந்து கொண்டிருக்க வேணும் என்று தீர்மானித்துக்கொண்டேன். உன்னை வெளியேற முடியாமல் சிறை வைப்பதற்காகவே மீண்டும் வெளியே போகாமல் இங்கேயே நாற்காலியில் சாய்ந்து விட்டேன். நேற்று சம்பவத்துக்குப் பிறகு என் மனம் உன்னிடம் கொஞ்சம் இளகியது. என் மனத்திற்குள் ஒரு தீர்மானம் பண்ணிக் கொண்டேன். அதாவது, நீ இன்றைக்கும் என் வீட்டுக்கு வருகிறாயா என்பதைக் கண்டு பிடிப்பது. நேற்றைய அனுபவத்துக்குப் பிறகும் என் வீட்டுக்குத் துணிந்து வந்தாயானால் என் மகள் மீது நீ கொண்டிருக்கும் காதல் எத்தனை வலுவுள்ளதாயிருக்க வேண்டும்? அத்தகைய ஒருவனை நான் மாப்பிள்ளையாக அடைவதை விட வேறென்ன வேண்டும் எனக்கு?—அதை நிர்ணயம் செய்து கொள்வதற்காகவே இப்போது உன்னைக் கையுங் களவுமாகப் பிடித்தேன்...என் மகளை உனக்குக் கொடுப்பதில் எனக்கு ஆக்ஷேபமில்லை. அவளும் உன்னை விரும்புகிறாள்...சரி; ஒரு நல்ல நாய்க் குட்டியாக மாத்திரம் எங்கிருந்தாவது சம்பாதித்துக் கொண்டு வந்து கொடுத்து விடு! தெரிகிறதா?" என்றார்.

தன் காதுகளையே நம்ப முடியாத பஞ்சு "அப்படியே செய்கிறேன்" என்றான் அளவில்லாத மகிழ்ச்சியுடன். அவன் உள்ளத்தில் நிறைந்து பொங்கிய ஆனந்தத்தில் அவன் வேறு என்ன சொல்ல முடியும்?

## பலப் பரீட்சை!



# சர்வம் சங்கீதமயம் ஜகத்!

1. சில சர்வ கலாசாலைகளில் மாணவர்கள் தாவரங்களைச் சங்கீதம் எவ்விதம் பாதிக்கிறது என்பதை ஆராய்ந்து வருகிறார்கள் — சாகித்யமில்லாத நாதோபாசன்



2. அரசியல் வாதிகள் சங்கீதத்தைத் துணையாகக் கொள்ளலாம்.

“சென்னை அஸெம்ப்ளியில்
சென்று நான் செய்ததெல்லாம்
செப்புவேன், வோட்டர்களே!”

③ குமாஸ்தாக்கள் தங்கள் கோரிக்கைகளைப் பாடிச் சமர்ப்பிக்கலாம்!

"சம்பளம் உயரவேண்டும்
வேறென்ன வேண்டும்?"

④ மனைவி கோபமடைந்திருக்கும் போதும்...

"ஆவிசோருதே
நேரம் ஆகுதே ப்ளீஸ்!"

(5) தெருக்களில் போக்கு வரவுப் பிரசாரத்தைச் சங்கீத மூலமாகச் செய்யலாம்!
பாதசாரிகள் தாளத்திற்கேற்ப நடப்பார்கள்!
பாதசாரியே - நடை - பாதையில் நடந்திடுவீர்!
M.C.P.
(6) சங்கீதத்தின் உதவியால் வியாபாரம் அதிகமாகலாம்!
"சேலை வாங்குங்கள் - கைத்தறிச்
சேலை வாங்குங்கள்!
சோலை அழகு பொலியும் - நல்ல
சேலை வாங்குங்கள்!"

7 நீதிமன்றங்களில் வக்கீல்கள் பாட்டுப் பாடி வாதாடலாம்!

"சட்டமதைச் சொல்லிடுவேன்!–
கெட்டிக்கார வக்கீல் நான்!"



# பச்சைக்கல் வளையல்



ராமப்பிரியா

பொழுது விடிந்ததிலிருந்தே எங்கள் வீடு அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. பிற்பகல் எல்லாம் ஒரே கூச்சலும் இரைச்சலுமாக இருந்தது. வீட்டில் உள்ள அனைவருக்கும் வேலை சரியாக இருந்தது.

இன்பமும் துன்பமும் கலந்த இன்னதென்று தெரியாத ஒரு உணர்ச்சி வசத்தில் நாங்கள் அனைவரும் இருந்தோம். வீடு முழுவதும் சாமான்களாக இறைந்து கிடந்தன.

இத்தனை அமர்க்களத்துக்கும் காரணம் என்னுடைய இரண்டாவது பெண் ரேவதி முதன் முதலாக மறு நாள் காலையில் புக்ககம் போவதாக இருந்ததுதான். எனக்குக் காரியாலயத்தில் வேலை அதிகமாக இருந்ததால் ரேவதியை அவளுடைய அம்மாவுடனேயே துணை கூட்டி அனுப்ப ஏற்பாடு செய்திருந்தேன்.

ரேவதி ஒரே குதூகலத்தில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருந்தாள்.

வாசலில் வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. யாராக இருக்கலாமென்று எட்டிப் பார்த்தேன். என்னுடைய மைத்துனி லலிதாவும் அவள் கணவர் சுந்தரமும் வண்டியிலிருந்து இறங்கினர். அவர்களை வாசலில் போய் வரவேற்றேன்.

"என்ன அத்திம்பேரே! ரேவதி நாளைக்கு ஊருக்குப் போகிறாளென்று இன்றைக்கே இளைத்து விட்டீர்களே!" என்று பரிகாசம் செய்து கொண்டே உள்ளே வந்தாள் லலிதா.

லலிதா என்றைக்குமே எங்களுடன் ரொம்பப் பற்றுதலாக இருப்பாள். ரேவதியின் மேல் அவளுக்கு உயிர். தன் குழந்தைகளைக் கூட ஊரில் தனியாக விட்டுவிட்டு ரேவதியை வழி அனுப்ப வந்திருக்கிறாள் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

தோழி வீட்டுக்குப் போய்த் திரும்பிய ரேவதி சித்தியைப் பார்த்தாள். அவளுக்குச் சந்தோஷம் தலைகால் புரியவில்லை. "சித்தி! இன்னும் இரண்டு நாள் முன்னதாக வரக்கூடாதா? நான் ஊருக்குப் போகும் முதல் நாள் பார்த்து வந்திருக்கிறாயே!" என்று அன்புடன் கடிந்துகொண்டாள்.

"உன் மேலிருக்கும் ஆசையினால்தானே அங்கு குழந்தைகளைக் கூடத் தனியாக விட்டு விட்டு ஓடி வந்திருக்கிறேன். சமர்த்தாகப் புக்ககம் போய் விட்டு வயிறும் பிள்ளையுமாகத் திரும்பி வரணும்!" என்று சொல்லி ரேவதியின் கன்னத்தைச் சுட்டி திருஷ்டி முறித்தாள் லலிதா.

"போங்க, சித்தி! உங்களுக்கு வேறு வேலையில்லே!" என்றாள் ரேவதி.

ரேவதியின் தலை மயிரைக் கோதியபடியே, "ஏன் ரேவதி! நாளைக்குத்தான் ஊருக்குப் போகப் போகிறாயே! எல்லா நகைகளையும் லட்சணமாகப் போட்டுக் கொள்ளக் கூடாதோ!" என்று கேட்டாள் லலிதா.

"எல்லாவற்றையும்தான் போட்டுக் கொண்டிருக்கிறேனே, சித்தி!" என்றாள் ரேவதி.

"உன்னுடைய பச்சைக் கல் இழைத்த வளையலைக் காணுமே! அதையும் அழகாகக் கையில் போட்டுக் கொள்ளக் கூடாதோ!"

"சித்திக்கு எப்பொழுதும் தூண்டித் துருவிப் பார்க்கும் குணந்தான். அந்த வளையல் எனக்கு வேண்டாமென்று அம்மாவிடம் கொடுத்துவிட்டேன்!" என்றாள் ரேவதி.

"அதை ஏன் வேண்டாமென்று சொல்லி விட்டாய்! உன் அம்மாவின் 'ஆவி' வந்த வளையல் அல்லவா அது!" என்றாள் லலிதா.

"அடுத்த மாதம் கமலா அக்காவுக்கு வளைகாப்பு வருகிறதோ, இல்லையோ! அதற்குப் பணத்துக்கு என்ன செய்வதென்று அப்பாவும் அம்மாவும் கவலைப் பட்டுக் கொண்டிருந்தார்கள். அதனால் எனக்குக் கார்த்திகைக்கு என்று அம்மா பரிசு அளித்த வளையலை நான் அக்காவுக்குப் போடச் சொல்லி விட்டேன்!" என்றாள் ரேவதி.

என் காதுகளையே என்னால் நம்ப முடியவில்லை. பச்சைக் குழந்தை மாதிரி இருக்கும் ரேவதியா எங்கள் கஷ்டம் அறிந்து பேசுகிறாள்! ரேவதியின் அன்பு என் மனத்தை உருக்கி விட்டது.

லலிதா அதைக் கேட்டுச் சந்தோஷம் அடைவதற்குப் பதிலாக ரௌத்ராகாரமானாள். "ஏண்டி, ரேவதி! கலியாணம் ஆன பிறகு உன் நகையைப் புக்ககத்தினரின் அனுமதி இல்லாமல் எப்படி நீ கமலாவுக்குக் கொடுக்க நினைக்கலாம்! உன் அம்மாவும் எப்படி அதை வாங்கி வைத்துக் கொண்டாள்!" என்று கேட்டாள்.

சமையலறையில் ஏதோ வேலையாயிருந்த என் மனைவி, "என்ன அமர்க்களம், அங்கே!" என்று கேட்டுக் கொண்டே வந்தாள்.

"அமர்க்களம் செய்யாமல் என்ன செய்வது! பச்சைக் கல் வளையலை இந்தப் பெரிய மனுஷி கமலாவுக்குக் கொடுத்து விட்டாளாம்! நீயும் அதை வாங்கி வைத்துக் கொண்டாயாமே! இப் பச்சை வளையல் நம் வாழ்க்கையை எவ்வளவு தூரம் துன்புறுத்தியது என்பதை நீ மறந்து விட்டாயா, என்ன!" என்றாள் லலிதா.

பழைய நினைவுகள் உடனே என் கண் முன்னே திரைப்படம் போலத் தோன்றி மறைந்தன.

"அதை யெல்லாம் இப்பொழுது எதற்காகக் கிளப்பி விடுகிறாய், லலிதா!" என்று நானும் சுந்தரமும் ஏக காலத்தில் கேட்டோம்.

"என்ன, சித்தி! எல்லோரும் ஒரே பூடகமாகப் பேசுகிறீர்களே! விஷயத்தை நன்றாகப் புரியும்படி சொல்லக் கூடாதா!" என்று ஆவலுடன் கேட்டாள் ரேவதி.

"லலிதா! உனக்கு வேறு வேலை யில்லை என்றால் போனதை யெல்லாம் ஏன் கிளறி விடுகிறாய்! ரேவதி! நீ உட்கார்ந்து கதை கேட்காமல் சாமான்களை யெல்லாம் உன் பெட்டியில் எடுத்து வைத்துக் கொள்!" என்று பேச்சை மாற்றுவதற்கு முயன்றான் என் மனைவி.

லலிதாவா இதற்கெல்லாம் பயப்படுகிறவள்! "ஏன் நடந்த விஷயங்களைச் சொல்லக் கூடாது என்று என் வாயை அடக்குகிறீர்கள்! ரேவதிக்குத்தான் நடந்தவை அனைத்தும் தெரியட்டுமே!" என்று தொண்டையைக் கனைத்துக் கொண்டு சொல்ல ஆரம்பித்தாள்.

ரேவதி! நான் சொல்லப் போகும் சம்பவங்கள் நடந்து கிட்டத் தட்ட இருபது வருஷங்கள் ஆகி இருக்கும். நானும் உன் அம்மாவும்தான் என் பெற்றோர்களுக்கு அருமைப் பெண்கள். மற்ற நால்வரும் பிள்ளைகள். எந்த நகை செய்தாலும் எந்தப் புடவை வாங்கினாலும் எங்கள் இருவருக்கும் ஒரே மாதிரி ஜோடியாகத்தான் செய்வார்கள்.

உன் அம்மாவுக்குக் கலியாணம் ஆகி மாயவரத்துக்கு அருகில் உள்ள கஞ்சாகரம் என்ற கிராமத்தில் மாமியார், மாமனாருக்கு அடங்கிய நாட்டுப் பெண்ணாக இருந்து கொண்டிருந்தாள். எனக்கு ஒரு வருஷம் கழித்துக் கலியாணம் ஆயிற்று. அப்பொழுது எனக்கு வயது பன்னிரண்டு. என் மாமியாரிடமிருந்து என்னைக் கார்த்திகைக்கு அழைத்துக் கொண்டு வந்து விடும்படி கடிதம் வந்திருந்தது. உடனே அம்மா கார்த்திகைக்கு வேண்டிய சீர் வகையறாக்களைச் செய்ய ஆரம்பித்து விட்டாள். உன் அம்மாவுக்குக் கார்த்திகைக்குப் போட்ட மாதிரி பச்சைக் கல் வளையல் எனக்கும் ஒரு ஜோடி செய்து வைத்திருந்தது. அதை எடுத்து என் பெட்டியில் வைத்தாள். எங்கள் அப்பா அப்பொழுது செங்கல்பட்டில் இருந்தார். போகும்பொழுது முதலில் அக்கா இருக்கும் கஞ்சாநகரத்துக்குச் சென்று அவளைப் பார்த்து விட்டுப் பிறகு திருச்சி போவதாக ஏற்பாடு செய்திருந்தார்கள். எனக்கும் அக்காளைப் பார்க்கப் போகிறோம் என்று ஒரே சந்தோஷம்.

கஞ்சா நகரம் போய்ச் சேர்ந்தோம். நாங்கள் வந்து ஒரு பகல் ஆன பிறகும் கூட அக்கா எங்களுடன் கலகலப்பாகப் பேசவில்லை. தூணுக்குத் தூண் நின்றுகொண்டிருந்தாளே தவிர வாயைத் திறக்கப் பயப்பட்டாள். எனக்கோ அவளுடன் மனம் விட்டுப் பேச வேண்டுமென்று ஆசை அடித்துக் கொண்டது. இதற்கு என்ன வழியென்று யோசித்தேன். மெதுவாக அக்காவிடம், "கொல்லைப்புறம் போக வேண்டும். துணைக்கு வா!" என்று கூப்பிட்டேன். அவளும் நிஜமென்று நம்பி என்னுடன் வந்தாள். "அக்கா! ஏன் இப்படி முகத்தை உம்மென்று வைத்துக்கொண்டிருக்கிறாய்! என்மேல் கோபமா! ஏன் பேசவே மாட்டேனென்கிறாய்!' என்றேன்.

அக்காவுக்குத் துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது. நான் என்ன விஷயம் என்று பல முறை கேட்டதன் பேரில் அவள் உடனே ராமாயணம் மாதிரி சொல்ல ஆரம்பித்து விட்டாள். "ஒன்றுமில்லையடி, லலிதா! இரண்டு நாளைக்குமுன் ஒரு கலியாணத்துக்குப் போயிருந்தோம். அம்மா எனக்கு முதல் கார்த்திகைக்குச் செய்திருந்த பச்சைக் கல் வளையலைப் போட்டுக் கொண்டு போயிருந்தேன். திரும்பி வந்து வளையலைக் கழற்றிப் பெட்டிமேல் வைத்து விட்டுப் பெட்டியைத் திறக்கச் சாவியை எடுக்கப் போனேன். அதற்குள் என் மாமியார் என்னைக் கூப்பிடவே, அப்படியே வளையலைப் பெட்டி மேலேயே வைத்து விட்டு உள்ளே ஓடிப் போனேன். கேட்டு விட்டுத் திரும்பி வந்து வளையலைப் பெட்டிக்குள் வைக்கப் பார்த்தால் பெட்டி மீது வைத்து விட்டுப் போன ஜோடி வளையலை



யும் காணும். தொலைந்து போயிற்று என்று தெரிந்தால் மாமியார் கோபிப்பாள். அம்மாவுக்குத் தெரிந்தால் அம்மாவும் கோபிப்பாள் என்றே பேசாமல் இருந்து விட்டேன். இப்பொழுது வரும் கார்த்திகையன்று வளையலைப் போட்டுக்கொள் என்று மாமியார் சொன்னால் என்ன செய்வது என்று பயமாக இருக்கிறது. அப்பவே கெட்டுப் போயிற்று என்று ஏன் சொல்லவில்லை என்று வேறு திட்டுவார்களே!" என்று சொல்லி ஒரு குரல் அழுதாள்.

எனக்கு அக்காவைப் பார்க்க ரொம்பவும் கஷ்டமாக இருந்தது. உடனே பளிச்சென்று ஒரு யோசனை தோன்றியது. "அக்கா, உன்னுடைய பச்சைக் கல் வளையல் மாதிரியே எனக்கும் ஒன்று அம்மா செய்திருக்கிறாள். உன் வளையல் கெட்டுப் போனதைப் பற்றி நீ ஒருவரிடமும் சொல்ல வேண்டாம். என் வளையலை ஒருவருக்கும் தெரியாமல் உன்னிடம் கொடுத்து விடுகிறேன். நீ வைத்துக்கொள்" என்று அவளைப் பலவாறாகத் தேற்றினேன். என் பேச்சைக் கேட்ட அக்காவுக்கு ரொம்ப சந்தோஷம் உண்டாயிற்று.

இளங் கன்று பயமறியாது என்ற மூதுரையின்படி என் வளையலை நான் ரகசியமாக ஒருவருக்கும் தெரியாமல் அக்காவின் பெட்டிக்கு மாற்றி விட்டேன். அன்றிரவே திருச்சிக்குப் பயணமானோம்.

திருச்சியில் புதுமாட்டுப் பெண்ணாகிய எனக்குக் குதூகலமான வரவேற்புக் கிடைத்தது. தலைக் கார்த்திகைக்கு என் நாத்தனார் இருவரும் என்னுடைய ஓர்ப்படியும் திருச்சியில் ஒன்று சேர்ந்திருந்தார்கள்.

கார்த்திகைக்கு முதல் நாள். என் அப்பாவின் தூர பந்து ஒருவர் இறந்து விட்டதாக ஒரு அசந்தர்ப்பமான கடிதம் வந்தது. அம்மாவுக்கும் அப்பாவுக்கும் பத்து நாள் தீட்டு. ஆகையால் நல்ல நாளும் அதுவுமாகத் தீட்டோடு திருச்சியில் இருக்க இஷ்டப்படாமல் என்னை மட்டும் விட்டு விட்டு அவர்கள் உடனேயே செங்கல்பட்டுக்குப் போய் விடுவதாகத் தீர்மானித்தார்கள். அம்மா என் மாமியாரிடம், "கார்த்திகைச் சீருக்கு வேண்டியவை எல்லாம் உங்கள் நாட்டுப் பெண் லலிதாவிடமே இருக்கிறது. எடுத்துக்கொள்ளுங்கள். லலிதா சிறு குழந்தை. ஏதாவது தவறு செய்தாலும் கூட, நீங்கள்தான் பார்த்துக்கொள்ள வேண்டும்" என்று சொல்லி விட்டு, "லலிதா! கார்த்திகைக்கு என்று உனக்குச் செய்து போட்ட பச்சை வளையலை இவர்களிடம் கொண்டு வந்து காண்பி!" என்று எனக்கு உத்தரவு போட்டாள்.

அவ்வளவுதான்; எனக்கு உடம்பெல்லாம் குப்பென்று வியர்த்துப் போய் விட்டது. நடு நடுங்கிப் போய் விட்டேன். பச்சைக் கல் வளையலை அக்காவுக்குக் கொடுத்ததைப் பற்றி அம்மாவிடம் கூட நான் சொல்லவில்லை. நான் திரு திரு வென்று விழித்துக் கொண்டு நிற்பதைக் கண்ட அம்மா, "ஏன் லலிதா! இப்படி விழிக்கிறாய்! பெட்டிச் சாவியை எங்கேயாவது தொலைத்து விட்டாயா, என்ன!" என்று கேட்டாள்.

"இல்லை, அம்மா! கஞ்சா நகரத்தில் அக்கா தன் வளையல் தொலைந்து போய் விட்டது என்று என்னிடம் அழுதாள். அதனால் என்னுடைய வளையை அக்காவுக்குக் கொடுத்து விட்டேன்!" என்று கள்ளங் கபடில்லாமல் சொல்லி விட்டேன். "என்ன!" என்று ஏககாலத்தில் என் மாமியாரும் அம்மாவும் தூக்கி வாரிப் போட்டது போல் துள்ளினார்கள்!—லலிதா இவ்வாறு சொல்லி நிறுத்தினாள்.

லலிதா அவள் கணவர் எதிரிலேயே சற்றும் பயமில்லாமல் ஆதியோடு அந்தமாக இப்படிச் சொல்லுகிறாளே என்று நினைத்து நான் சுந்தரத்தின் முகத்தை உற்றுப் பார்த்தேன். அவரும் என்னைப் பார்த்து, "ஸார், இங்கே ஒரே புழுக்கமாயிருக்கிறது. சற்று வெளியில் போய் வரலாம், வருகிறீர்களா!" என்று கேட்டார்.



எங்கள் சம்பாஷணையைக் கேட்ட லலிதா கந்தரத்தைப் பார்த்து, "உங்கள் பாகம் வருகிற சமயமாயிற்றே என்று மெல்ல நழுவப் பார்க்கிறீர்களா! அதெல்லாம் உங்களைவிட முடியாது!" என்று தடை உத்தரவு போட்டாள்.

ரேவதியும் கூடச் சேர்ந்து, "ஆமாம், சித்தப்பா! நீங்களோ அப்பாவோ கதை முடியுமளவுக்கும் இந்த இடத்தை விட்டு நகரக்கூடாது!" என்று லலிதாவுடன் கூடச் சேர்ந்து ஒத்துப் பாடினாள்.

"கதையில்லையடி ரேவதி! பழைய நினைவுகள், நடந்த உண்மைச் சம்பவங்கள் என்று சொல்லு!" என்று அவளைத் திருத்தினாள் லலிதா.

பிறகு லலிதா தொடர்ந்தாள்:

பச்சை வளையலை அக்காவுக்குக் கொடுத்து விட்டதாக என் அம்மாவுக்கும், மாமியாருக்கும் சொல்வதற்குள் எனக்கு நாக்குத் தடுமாறிவிட்டது. "என்னைக் கேட்காமல் நீ ஏன் அவளுக்கு வளையலைக் கொடுத்தாய்! அவளும் தன் வளையல் கெட்டுப் போனதைப் பற்றி என்னிடம் சொல்லவில்லை. இது என்ன இரண்டு பேருமாகச் சேர்ந்து பெரியதனம் செய்திருக்கிறீர்கள்!" என்றெல்லாம் சரமாரியாக அம்மா வையத் தொடங்கினாள். என் மாமியார் இத்தனை நாழியாக வாயைத் திறக்காமலிருந்தவர், "உங்களைக் கேட்காமலா தன்னுடைய வளையலை, அதுவும் சிறுக்காகச் செய்த வளையலை அக்காவுக்குத் தானம் பண்ணினாள்! ஆச்சரியமாக இருக்கிறதே! இதைவிட அதிசயம் உங்கள் பெரிய பெண் தன் வளையல் கெட்டுப் போனதைக் கூட உங்களிடம் சொல்லாமலிருந்ததுதான்!" என்று சொல்லி என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார்.

அன்று சாயங்காலமே அம்மா மனத்தில் பாரமும், திகிலுமாய் என்னைத் திருச்சியில் விட்டு விட்டு அப்பாவுடன் ஊருக்குப் போய்விட்டாள்.

பிறகுதான் எனக்குப் பிடித்தது கஷ்டகாலம். என் மாமியார், ஓர்ப்படி, நாத்தனார்கள் எல்லாரும் என்னிடம் நடந்து கொள்ளும் விதமே வேறு மாதிரி ஆகிவிட்டது. எல்லாரும் வெறுமனே என் இளம் மனத்தை நோகச் செய்வதையே தொழிலாகக் கொண்டு விட்டார்கள். என் அம்மாவும் எனக்கு உடந்தையாயிருந்ததால்தான் அந்தப் பச்சைக் கல் வளையல் அக்காவின் கைக்கு மாறிற்று என்று சொன்னார்கள்.

"பச்சை வளையல் செய்ததுதான் நிச்சயமென்று எப்படிச் சொல்ல முடியும்! எல்லாம் செய்யாமலே, செய்து பெட்டியில் வைத்திருப்பது போல இவளுடைய அம்மா நடித்ததும் உடனே இவள் அதைத் தமக்கைக்குக் கொடுத்து விட்டதாகச் சொன்னதும், முன் கூட்டியே இருவரும் சேர்ந்து தயார் செய்த நாடகம்தானோ, என்னவோ!" என்று பெரிய வெடிகுண்டாகத் தூக்கிப் போட்டுத் தன் தாயாரிடம் தூபம் போட்டாள் என் பெரிய நாத்தனார்.

"அப்படியும் இருக்கலாம். இந்தப் பெண்ணுக்கு இப்பவே இவ்வளவு திரிசமன் இருக்கிறதே! இது ஆயுசு முழுவதும் எப்படி உருப்படப் போகிறது!" என்று ஆமோதித்தாள் சிறிய நாத்தனார்.

"அம்மா! நான் சொல்வதைக் கேளுங்கள்! லலிதாவை இனி அவள் பிறந்த வீட்டுப் பக்கமே அனுப்பக் கூடாது. அனுப்பினால் நம் குடும்ப கௌரவத்தையே குலைக்கும்படியான கெட்ட வழக்கமும், குணமும் படிந்து விடும்!" என்று தன்னுடைய மாமியாருக்கு மிக அனுகூலமாகச் சொன்னாள் என் ஓர்ப்படி.



டாக்டர்:—நீ தொழிலாளியா?
வந்தவர்:—இல்லை, நோயாளி!

எனக்கு அவர்கள் பேசுவதைக் கேட்டதும் தலையைச் சுற்றியது. மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது. உடம்பில் ரத்த ஓட்டமே திடீரென்று நின்று போய் விட்டது போன்ற ஒரு உணர்ச்சி உண்டாகியது.

"தாய்க்குத் தெரியாமல் ஒரு காரியம் செய்யும் குழந்தையை நான் இது வரை பார்த்ததில்லை. விலையுயர்ந்த பொருளைத் தாயாருக்குத் தெரியாமல் நிமிஷத்தில் கொடுத்து விட்டாளே! அம் மாதிரிதானே இங்கேயும் ஏதாவது செய்யத் தோன்றும்!" என்றார் என் மாமியார்.

"ஐயோ!" என்றேன். அப்படியே மயக்கமாகக் கீழே விழுந்து விட்டேன். அன்றையிலிருந்து எனக்கு நரம்புத் தளர்ச்சி வியாதி என்று பெயர் வைத்துக் கதை கட்டி விட்டார்கள்.

சென்னைக் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும் என் கணவர் விடுமுறைக்குத் திருச்சிக்கு வந்தார். என்னுடைய அதிகப் பிரசங்கித்தனமான செய்கையாகிய 'பச்சைக் கல் வளையல்' சம்பவத்திலிருந்து என்னுடைய நரம்புத் தளர்ச்சி வரை ஒன்று விடாது பிள்ளையிடம் ஒப்பித்தார் என் மாமியார்.

அவர் விடுமுறை முடிந்து சென்னைக்குத் திரும்பும்பொழுது என் மாமியார் ரகசியமாக, "நீ ஊருக்குப் போகும்போது லலிதாவையும் அழைத்துக் கொண்டு போய்ச் செங்கல்பட்டில் விட்டு

# தேய்ந்து போன டயர்களிலிருந்து புதிய மைலேஜ்!



தேர்ந்தெடுங்கள் **டயர்ஸோல்ஸை**



- அமைதியான ஓட்டம்
- அதிக மைலேஜ்
- நிச்சயமான "டிரட்" பரிசுத்தம்
- ரஸ்தாவில் அழுத்தமான பற்றுதல்
- சமனான டயர் பரப்பு

ஆகியவற்றிற்கு

## டயர்ஸோல்ஸ்

குறைந்த செலவில் மீண்டும் புது டயர் மைலேஜ் பெற

**ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (ஸவுத் இந்தியா) லிமிடெட்,**

"டயர்ஸோல்ஸ் டிபார்ட்மெண்ட்"

பாக்டரிகள்:
கோயமுத்தூர், மதராஸ், கோட்டயம், பெங்களூர், கல்கத்தா ஆகிய இடங்களில்.

EP

ஒவ்வொரு நகரிலும் ஒவ்வொரு "டயர்ஸோல்ஸ்" டீலர் உண்டு.

விடு. அதற்கு என்னமோ சிக்த வந்து விட்டது. நீ மாமனுர் வீட்டுக்குக் கூடப் போக வேண்டாம். அவனே அனுப்பி விட்டு நீ அந்த வண்டியிலேயே திரும்பி ஸ்டேஷனுக்கு வந்து சென்னே போய் விடு!'' என்று சொன்னர்.

என் கணவரோடு நான் என் சாமான்களே எடுத்துக் கொண்டு சென்னேக்குப் போகும் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் கிளம்பினேன். ரேவதி! நீ சொன்னல் நம்ப மாட்டாய்! எட்டு மணி நேரத்துக்கு மேல் நானும் உன் சித்தப்பாவும் மட்டும் சேர்ந்து தனியாக ரயிலில் பிரயாணம் செய்திருக்கிறேம். ஆனல் ஒரு வார்த்தை அவர் என்னேடு பேசவில்லே!'' என்று சொல்லி விட்டு லலிதா சிறிது நிறுத்திச் சுந்தரத்தைப் பார்த்தாள்.

உடனே ரேவதி தன் சுபாவமான குறும்புத் தனத்துடன், ''ஏன், சித்தப்பா! நீங்களா சித்தியோடு பேசாமலிருந்தீர்கள்! 'லலிதா, லலிதா!' என்று லலிதா சஹஸ்ரநாமம் செய்யும் நீங்களா அப்படிப் பேசாமலிருந்தீர்கள்!'' என்று சுந்தரத்தைப் பார்த்துக் கேட்டாள்.

சுந்தரமும் சற்றும் விட்டுக் கொடுக்காமல், ''ஆமாம், ரேவதி! அதுதான் உன் சித்தி இப்பொழுது என்னே வட்டியும் முதலுமாய்ப் படுத்தி எடுக்கிறளே!'' என்றுர்.

பழைய சம்பவங்களே லலிதா கோவையுடன் கதை போல வெகு அழகாகச் சொல்வது என் மனத்தையே வெகுவாகக் கவர்ந்து விட்டது. ''சரி, சரி, லலிதா! மேலே என்ன நடந்தது என்று சீக்கிரம் சொல்லி முடி!'' என்றேன்.

''இந்த அத்திம்பேர் தனக்கு நடந்தவை ஒன்றும் தெரியாத மாதிரி கதை கேட்பதைப் பார்! எல்லாம் உங்கள் மனேவிக்கு நான் இரக்கப்பட்டதால் வந்த வினேதானே அவ்வளவும்!'' என்று சொல்லி அர்த்த புஷ்டியுடன் என் மனேவியை அதாவது தன் தமக்கையை ஒரு பார்வை பார்த்து விட்டு மேலே தொடர்ந்தாள் லலிதா.

**ம**று நாள் விடியற்காலேயில் செங்கல்பட்டு ஸ்டேஷனில் இறங்கினேம். ஒரு வண்டியைப் பேசி என் சாமான்களே ஏற்றினர். நான் வண்டியில் ஏறி உட்கார்ந்தேன். அவரும் பின்னல் உட்கார்ந்தார். எங்கள் தெரு மூலே வந்ததுமே 'மாத்ரு வாக்ய பரிபாலனம்' செய்யத் தொப்பென்று வண்டியிலிருந்து குதித்து, அவனுக்கு வாடகையைக் கொடுத்துவிட்டு, ''பதினெட்டாம் நம்பர் வீட்டில் ஜாக்கிரதையாக இறக்கி விடு!'' என்று சொல்லிவிட்டு என்னேப் பார்த்து, ''நீ உன் வீட்டுக்குப் போ!'' என்றுர். ரேவதி! உன் சித்தப்பா முதன் முதலாக என்னிடம் பேசிய வார்த்தைகள் இவைதான்!

அவர் திரும்பி நடந்தே ஸ்டேஷனுக்குச் சென்று விட்டார். வீட்டுக்கு வாருங்கள் என்று அவரைக் கூப்பிடவும் எனக்குத் தெரியவில்லே.

எங்கள் வீடு வந்தது. பெற்றேரைப் பார்க்கப் போகிறேமென்ற சந்தோஷத்தில் குதி போட்டுக் கொண்டு உள்ளே நுழைந்து அம்மா வென்று இறுகக் கட்டிக் கொண்டேன். வண்டிக்காரன் சாமான்களே யெல்லாம் இறக்கினன்.

அப்பாவும் அம்மாவும் என்னேக் கண்டு அப்படியே திகைத்துப் போய் விட்டார்கள்.

''லலிதா! யாரோடு வந்தாய்?'' என்று ஆச்சரியத்தோடு என்னேக் கேட்டாள் அம்மா.

''உன் மாப்பிள்ளேதான் என்னே அழைத்துக் கொண்டு வந்தார்!'' என்றேன்.

உடனே அம்மா ஒரே பரபரப்படைந்தாள். அப்பாவைப் பார்த்து, ''மாப்பிள்ளே வாசலில் நிற்கிறர் போலிருக்கிறது. போய் அழைத்து வாருங்கள்!'' என்று அவசரப்படுத்தினள்.

''இல்லே, அம்மா! அவர் என்னேத் தெருக் கோடியிலேயே வண்டியுடன் அனுப்பி விட்டுத் திரும்பிப் போய் விட்டார்!'' என்று சர்வ சாதாரணமாகச் சொன்னேன்.

''அடி பாவிப் பெண்ணே! உள்ளே வாருங்கள் என்று அகமுடையானே அழைக்கக் கூட உனக்குத் தெரியாமல் புத்தி கெட்டுப் போயிருக்கிறயேடி! உன்னல் இன்னும் என்னென்ன நான் அனுபவிக்க வேண்டுமோ, தெரியவில்லேயே! உன்னே அவர்கள் இனி அழைத்துக் கொள்ளா விட்டால் நான் என்ன செய்வேனடி!'' என்று பெரிதாகப் புலம்ப ஆரம்பித்து விட்டாள் அம்மா.

அப்பா உடனே தன் அழகான மாப்பிள்ளேயை ரயிலடியில் எல்லாம் தேடிப் பார்த்து விட்டு ஏமாந்து ஏங்கிப்போய் வீடு வந்து சேர்ந்தார்.

அம்மாவுக்கும் அப்பாவுக்கும் ஒரே வருத்தம். நான் என்னவோ பிறந்தகத்தையும் பெற்றேரையும் இந்த மட்டும் பார்த்தோமே என்று ஒரே கொம்மாளம் போட்டுக்கொண் டிருந்தேன்.

காலா காலத்தில் நான் பருவம் அடைந்தேன். இந்த சுபச் செய்தியை மாமியார் வீட்டினருக்குத் தெரியப்படுத்தினர் என் பெற்றேர். அவர்களிடமிருந்து ஒரு பதிலும் வரவில்லே. என்னே அறவே மறந்துவிட்ட நிலேயில் இருந்தார்கள். ஆறு மாதமாகக் கடிதப் போக்குவரத்து கூட இல்லாமல் கிணற்றில் கல் போட்ட மாதிரி இருந்தது.

இந்தச் சமயத்தில்தான் கஞ்சா நகரத்திலிருந்து அக்கா வந்தாள். நடந்தவை அனேத்தையும் அம்மா அவளிடம் சொன்னுள். அக்காவுக்கு என்



















மேல் ரொம்ப இரக்கம் உண்டாயிற்று. என்னை அணைத்துக்கொண்டு அழுதேவிட்டாள். "ஐயோ, லலிதா! நாம் செய்த அசட்டுத் தனத்தினால் உன் வாழ்க்கையையே அல்லவா பாழாக்கி விட்டோம்! கடைசியில் கெட்டுப் போன என்னுடைய பச்சைக் கல் வளையலும் அகப்பட்டு விட்டது. எங்கள் வீடு அசல் கிராமாந்திர வீடானதால் எலியின் தொந்தரவு அதிகம் உண்டு. அன்று நான் பச்சைக் கல் வளையலைப் பெட்டியின் மேல் வைத்து விட்டுப் போனவுடனேயே எலி அதை இழுத்துக் கொண்டு போய் ஒரு பொந்தில் போட்டிருக்கிறது. பதினைந்து நாட்களுக்கு முன் வீடு ரிப்பேர் செய்யும்பொழுது பொந்திலிருந்து வளையல் உன் அத்திம்பேரிடம் கிடைத்தது. நல்ல வேளையாக அவர் என்னிடம் வந்து யாருடைய வளையல் என்று கேட்டார். நான் எல்லா விஷயங்களையும் சொன்னேன். அவருக்கு உடனே உன்னுடைய பெருந்தன்மையான நடத்தையின்மேல் ரொம்பச் சந்தோஷம் உண்டாயிற்று. கடிதத்தில் எழுதாமல் திடுதிப்பென்று நேரில் உன்னிடம் கொண்டு வந்து கொடுக்கத் திட்டம் போட்டிருந்தோம். அதற்குள் இங்கு இவ்வளவு தகராறு நடந்திருக்கிறதே!" என்று ரொம்ப வருத்தப்பட்டாள்.

அன்றிரவு யோசனை செய்து என் அப்பா, அம்மா, அக்கா, அத்திம்பேர் எல்லாருமாகப் பச்சைக் கல் வளையலோடு திருச்சிக்குப் புறப்பட்டார்கள். அங்கு இவர்கள் எல்லாருமாகச் சேர்ந்து என் மாமியாரிடம் பலவாறாகக் கெஞ்சிப் பணிவுடன்நடந்த விஷயங்களைச் சொன்னார்களாம்.

என் மாமியார் முதலில் ரொம்பப் பிகு பண்ணிக் கொண்ட போதிலும் பிறகு தானாகவே வழிக்கு வந்து விட்டார்.

கதையை ரொம்ப வளர்த்துவானேன்! காளடைவில் என் மாமியாரின் அந்தரங்கக் காரியதரிசி, மந்திரி, அருமை நாட்டுப் பெண் எல்லாம் நான் தான் என்றால் நான் அவருடைய உள்ளத்தை எவ்வளவு தூரம் கவர்ந்திருக்கிறேன் என்று ஊகித்துக் கொள்ளேன்.

உன் சித்தப்பாவைப் பற்றிக் கேட்க வேண்டாம். தாசானு தாசனாகப் போய் விட்டார். இத்தனையும் எதற்குச் சொல்ல வந்தேன் என்றால் நான் என் அக்காவுக்குப் பச்சைக் கல் வளையலைக் கொடுத்து விட்டுத் திண்டாடினது போதும். நீயும் அந்த மாதிரி அதே வளையை உன் அக்காவுக்குக் கொடுத்து அதனால் வீண் வம்பை விலைக்கு வாங்கிக் கொள்ளாதே என்பதற்காகத்தான்!" என்று ரேவதிக்கு உபதேசம் செய்து தன் சரிதையை ஒருவாறாக முடித்தாள் லலிதா.

"சித்தி! உன்னைப் போல முன் யோசனையின்றிச் செய்யாமல் என் கணவரின் உத்தரவைக் கடித மூலமாகப் பெற்றபின்தான் நான் அக்காவுக்கு இந்த வளையலைக் கொடுக்கிறேன். என் கணவர் சித்தப்பாவைப் போல் தெருக் கோடியில் என்னைக் கொண்டு வந்து விட்டு 'நீ உன் வீட்டுக்குப் போ!' என்று சொல்ல மாட்டார். நீ பயப்படாதே!" என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லி ரேவதி நமட்டுச் சிரிப்புடன் சித்தப்பா சுந்தரத்தை நோக்கினாள். சுந்தரம் உள்பட எல்லோரும் கை கொட்டி நகைத்தார்கள்.

"என் கண்ணே! நீ அப்படிச் சந்தோஷமாக இருக்க வேண்டுமென்பதுதான் என் பிரார்த்தனை!" என்று அன்புடன் ரேவதியைத் தழுவிக் கொண்டாள் லலிதா. ரேவதியின் முகம் சந்தோஷத்தினால் மலர்போல் மலர்ந்தது.

# சந்திரனின் காதலி

★ ★ ★

*ஆம்பல்களி கூரவரும் வெண்ணிலாவே!* —கவிமணி

சூரியனின் காதலி தாமரை. சந்திரனின் காதலி ஆம்பல்.

இந்தச் சம்பிரதாயம் பாரத நாட்டில் தொன்றுதொட்டு நிலவி வருகிறது. ஆம்பல் மலர்கள் இரவில்தான் மலரும். சந்திரனும் இரவில்தானே உதயமாகிறான்! எனவே பாரத நாட்டுக் கலைஞர்கள் ஆம்பலுக்கும் சந்திரனுக்கும் காதல் முடிச்சுப் போட்டு விட்டார்கள். அவர்கள் என்ன என்ன காதல் மொழிகள் பேசியிருப்பார்கள் என்று பலப்பல கற்பனைகள் செய்து பாடல்கள் இயற்றி மகிழ்ந்தார்கள். இந்தப் பாரதப் பண்பில் பெரிதும் திளைத்த சைத்ரிகர் கனுதேசாய், ஆம்பல் மங்கை நடனம் ஆடித் தன் காதலனாகிய சந்திரனை மகிழ்விப்பதாக வெகு அழகாகச் சித்திரம் தீட்டியிருக்கிறார்!

இந்தச் சித்திரத்தைப் பார்த்து விட்டு, உண்மையிலேயே ஒரு நாள் வெண்ணிலவு பொழியும் இரவில், தடாகத்தில் ஆம்பல் மெல்லிய தென்றலில் ஆடி அசைவதைப் பார்க்க நேர்ந்தால், அந்த மலர் மங்கை நடனமாடி வான வீதியில் வரும் காதலனை மகிழ்விப்பதாகவே தோன்றும்!

## புத்தாண்டுக் கனவு

பொன்னொளி விண்ணெங்கும் பூத்ததையா — சோலைப்
பூமணம் நெஞ்சையே ஈர்த்ததையா!
அன்ன நடைப் பெண்டிர் அன்னருமே — 'புது
ஆண்டே நீ வா!' எனச் சொன்னரையா!

மூடு பனித்திரள் ஓய்ந்ததையா — புல்மேல்
முத்துமுத் தாய்ப்பனி வீழ்ந்ததையா!
கூடுவிட் டேபுட்கள் தாவி வெளிவந்து
கூட்டமாய் வானில்ப் பறந்ததையா!

கிழக்கில் பரிதி விரிந்ததையா — வானக்
கிழியில்பல் லோவியம் வரைந்ததையா!
முழுக்கக் கடலும் முழங்கிற்றையா — தென்றல்
மோகனக் கவரி வீசிற்றையா!

மின்னல் ஒளிமழை கண்டோமையா — அதில்
மேன்மேலும் மூழ்கிக் குளித்தோமையா!
கன்னல் மழலைக் குழந்தைகளோடு, நாம்
காதைகள் சொல்லிக் களித்தோமையா!

புதுமைத்தேன் வெள்ளம் பெருகிற்றையா — நெஞ்சில்
புதிய கருணை ததும்பிற்றையா!
பதுமை எனத்துயில் பாமரரும் — ராம
பாணம்என வேகம் பெற்றரையா!

வேம்பு மலர்மணம் வீசிற்றையா — இள
வேனிற்கீதம் வண்டு பாடிற்றையா!
ஆம்பல் மலர்களும் அன்பர்கையும் — புது
ஆண்டுக்கே அஞ்சலி செய்ததையா!

புதிய கனவின் உதயமையா! — ஐயப்
புத்தாண்டை வாழ்த்தும் இதயமையா!
மதியொடு வாழ்வும் மலருமையா — நாட்டு
மக்களுக் கின்பம் புலருமையா!

—தமிழழகன்

# Firestone

## பயர்ஸ்டோன் ஒன்றுதான்

# சூபர் கம்-டிப்டு டயர்

பயர்ஸ்டோனின் சிறந்த பிரத்யேக சூப்பர் கம்-டிப் பிங் முறையால் ஏற்படும் அனுகூலங்கள்.



வெடிப்புக்குப் பாதுகாப்பு



அதிக மைலேஜ்



60 சத விகிதம் வலுவுடைய கார்டுபாடி






சிங்கப் பெருமாள் கோவில் ஸ்டேஷனில் காஞ்சீபுரம் பாஸஞ்சர் வந்து நின்றதும் வரதன் வழக்கம் போல் தலையை நீட்டினான். பிளாட் பாரத்தில் நின்று கொண்டிருந்த ராகவனின் கண்கள் வரதன் எந்தப் பெட்டியில் இருப்பான் என்பதைத் தேடிக் கொண்டிருந்தன. ஏறக்குறைய ஒரு மாத காலமாக ஏமாற்றமே அடைந்து கொண்டிருந்த வரதனுக்கு ராகவன் அவனைத் தேடிக்கொண்டு நிற்கவே, ஆனந்தம் தலைகால் புரியவில்லை. எனவே. "ராகவன்! இங்கே வா, அப்பா!" என்று உரத்த குரலில் கையைத் தட்டிக் கூப்பிட்டான் வரதன்.

அவன் கூப்பிட்டாலும் கூப்பிடா விட்டாலும் ராகவன் அவன் இருக்கும் வண்டியைத் தேடிப் பார்த்துத்தான் ஏறியிருப்பான். அதே போல் ராகவன் அந்த வண்டியில் ஏறாமல் 'டிமிக்கி' கொடுக்க முயன்றாலும் வரதன் விடமாட்டான். தான் அமர்ந்திருக்கும் பெட்டியில் அவனை ஏற்றிக் கொண்ட பின்தான் மறு காரியம் பார்த்திருப்பான்.

வரதனும் ராகவனும் ஆப்த நண்பர்கள். இருவருக்கும் ஒரே காரியாலயத்தில் வேலை. எனவே, இருவரும் ஒரே சமயத்தில், ஒரே வண்டியில், ஏன்! ஒரே பெட்டியிலேயேதான் பிரயாணம் செய்வார்கள்.

ராகவனின் அந்தரங்கம் வரதனுக்குத் தெரியும். வரதனின் அந்தரங்கம் ராகவனுக்குத் தெரியும். வரதனுக்கு நாடகம், சினிமா என்றால் வெகு பிரியம். அவனே ஒரு அமைச்சூர் நடிகன் என்றால் அதிகம் சொல்லுவானேன்! ஆபீஸ் நேரம் போக மற்ற நேரங்களில் அவனை ஏதாவது அமைச்சூர் நாடக சபையில்தான் பார்க்கலாம். காரியாலயத்தில் கூடச் சிற்சில சமயம் அவன், தான் ஏற்றுக் கொண்டிருக்கும் பாத்திரத்தின் சம்பாஷணைகளை நெட்டுருப் பண்ண உட்கார்ந்து விடுவான். காரியாலயத்து மானேஜருக்குக் கூட அது தெரிந்த விஷயம்தான். ஆனால் தெரிந்ததுபோல் காட்டிக் கொள்ள மாட்டார்.

என்ன இருந்தாலும் அவன் நடை நடையும் பேச்சும் அவனை நடிகன் என்று எடுத்துக் கூறிக் கொண்டிருந்தன. அதன் பலனாக அவனுக்கு காளடையில் 'நடிக மணி' என்ற பட்டமே கூடக் கிடைத்து விட்டது. மானேஜர் கூட வரதன் வந்து விட்டானா என்று கேட்காமல் 'நடிக மணி வந்து விட்டானா?' என்றே தான் கேட்பார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

தோலைக் கடித்துத் துருத்தியைக் கடித்து வேட்டை நாயாக ஆகும் கதையாக அமைச்சூர் நாடகத்திலிருந்து தொழில் நாடகம், தொழில் நாடகத்திலிருந்து சினிமா என்று அவனுடைய ஆசை வளர்ந்தது. அப்புறம் கேட்க வேண்டுமா! நேரம் கிடைத்த பொழுதெல்லாம் சினிமாக் கம்பெனிகளின் படியேறி இறங்கலானான். சினிமா கம்பெனிகளில் இலேசில் இடம் கிடைத்துவிடுகிறதா! முகவெட்டுப் போதாது. உயரம் குறைவு. பருமன் அதிகம். காம்பீர்யம் பற்றாது. இந்த மாதிரி ஏதாவது நொண்டிக் காரணங்கள் சொல்லிச் சிலர் அனுப்பி வந்தனர். சிலர் கதை வசனம் தயாரானதும் சொல்லியனுப்புகிறேன் என்று கூறினார்கள். கதை வசனம்தான் தயாராகவில்லையோ, அல்லது படம் எடுக்கத்தான் பணம் இல்லையோ, அப்படிச் சொன்னவர்கள் அவனுக்கு அப்புறம் சொல்லியனுப்பவே இல்லை. இருந்தாலும் அவன் தன் முயற்சியை விடவில்லை. முயற்சி திருவினையாக்கும் என்ற நம்பிக்கை அவன் உள்ளத்தில் அசைக்க முடியாதபடி வேரூன்றியிருந்தது.

நண்பர்கள் என்றால் வரதனையும் ராகவனையும் போல் இருக்க வேண்டும். தான் எடுத்துக் கொண்ட முயற்சி பலிதம் அடைந்ததோ இல்லையோ என்று அவன் அக்கறை கொள்வதில்லை. ஒன்றையும் ஒளித்து மறைக்காமல் ராகவனிடம் சொல்லி வந்தான். ஒரு மாத காலம் ராகவன் லீவு போட்டு விட்டது அவனுக்கு ஒரு கை ஒடிந்தது போலவே இருந்தது. தான் எடுத்துக் கொண்ட முயற்சிகளைப் பற்றி ராகவனிடம் சொல்லாமல் அவனுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. ராகவனைக் கண்டதும் தன் உள்ளத்தில் உள்ளதையெல்லாம் அப்படியே கொட்டிவிட வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது.

ராகவன் அவசரம் அவசரமாக ஓடி வந்து அவன் பெட்டியில் ஏறிக் கொண்டதும், அவனுக்காகவே காத்துக் கொண்டிருப்பது போல் நின்ற வண்டி ஊதி விட்டுப் புறப்படத் தயாராயிற்று.

"என்ன, அப்பா! மாதக் கணக்கில் மட்டம் போட்டு விட்டாயே! நீ பெரிய யோகக்காரன் தான் அப்பா! நினைத்தால் லீவு எடுத்துக்கொள்ள முடிகிறதே!" என்று ஆரம்பித்தான் வரதன்

'என்ன யோகம், போ! வீட்டில் ஏகப்பட்ட வேலை. அதனால்தான் காரியாலயத்துக்கு லீவு போட்டு விட்டேன். காரியாலயத்தில் ஏதாவது விசேஷம் உண்டா!" என்று கேட்டுக் கொண்டே அவன் அருகில் வந்து உட்கார்ந்தான் ராகவன்.

"காரியாலயத்தில் ஒன்றும் விசேஷம் இல்லை. ஆனால் வேறு விசேஷம் இருக்கிறது!" என்று ஆரம்பித்தான் வரதன்.

"என்ன!"

"புதிதாக ஆரம்பித்திருக்கும் குசேலா பிலிம் கம்பெனிக்கு நான் போயிருந்தேனே! நினைவிருக்கிறதல்லவா!" என்று கேட்டான் வரதன்.

"நினைவில்லாமல் என்ன! நீ எத்தனையோ கம்பெனிக்குப் போயிருக்கிறாய். குபேரா கம்பெனிக்குப் போனாய். கொட்டிக் கொடுத்து விட்டான்! அரோஹரா பிலிம்ஸுக்குப் போனாய். அள்ளிக் கொடுத்து விட்டான். உன் மூஞ்சிக் கட்டைக்கு எவனடா வேஷம் கொடுத்தான்!"

"அப்படிச் சொல்லாதே!"

"பின்னே எப்படிச் சொல்வதாம்!"

"குசேலா கம்பெனிக்காரன் நடிக்க என்னை எடுத்துக் கொண்டதோடு மட்டுமல்ல; பணத்தையும் பேசி விட்டான்!"

'அப்படியா! பேஷ்! தேவலையே! எத்தனை ரூபாய் பேசியிருக்கிறாய்!"

"எத்தனை ரூபாய் பேசியிருந்தால் என்ன!"

"அடாடா, பார்த்தாயா! என்னிடமே மூடி மறைக்க ஆரம்பித்து விட்டாயே!"



"உன்னிடம் மறைப்பேனா! ஆயிரத்தைந்நூறு ரூபாய் தருவதாகப் பேச்சு!"

"பாதகம் இல்லை. முதல் படம்தானே! பெயர் வந்தால் அப்புறம் நான் நீ என்று போட்டி போட்டுக் கொண்டு வருவான்கள். எப்பொழுது படமெடுக்கப் போகிறார்களாம்!"

"குறைந்தது இன்னும் இரண்டு மாதம் ஆகுமாம்!"

"பரவாயில்லை. ஏதாவது முன் பணம் கின் பணம் அவர்களிடம் வாங்கினாயா!"

"எங்கள் கம்பெனியில் ஐந்நூற்றொரு ரூபாய் தான் கொடுப்பது வழக்கம். அதை வாங்கிக் கொள்ளுங்கள் என்று சொல்லிக் கொடுத்தான்!"

"ஐந்நூற்றொரு ரூபாய் என்ன கணக்கு!"

"அதுதான் அவர்களுக்கு ஆவி வந்ததாம்!"

"இந்தப் படக்காரர்களுக்கு வேறு எதில் நம்பிக்கை இருந்தாலும் இல்லாவிட்டாலும் இது போன்ற விஷயங்களில் மட்டும் அபார நம்பிக்கை இருக்கிறது. அவர்கள் எக்கேடாவது கெட்டுப் போகட்டும். இந்த விஷயத்தில் நீ பெரிய அதிர்ஷ்டக்காரன் தாண்டா!"

"என்ன அதிர்ஷ்டக்காரனோ, போ! அந்த ஐந்நூற்றொரு ரூபாயையும், கொடுத்தவன் செக்காக அல்லவா கொடுத்தான்!"

"செக்காகக் கொடுத்தால் என்ன! பாங்கியில் போய் மாற்றிக் கொண்டால் போயிற்று!"

"அந்தக் கஷ்டத்தை என்ன சொல்வேன், போ!" என்று அலுத்துக் கொண்டான் வரதன்.

"செக் வந்தது கசக்கிறதோ! என்னிடமே உன் கதையை அளக்க ஆரம்பித்து விட்டாயே! ஐந்நூற்றொரு ரூபாய் வந்த ஜோர் உன்னை இப்படிப் பேசச் சொல்கிறது!"

"அதெல்லாம் ஒன்றும் இல்லையப்பா! வந்த செக் பணமாக மாறினால் அல்லவா தேவலை!"

"ஏன்! செக் மாறாமல் என்ன!"

"இதோ பாரேன்! பாங்குக்காரர்கள் என்ன என்னமோ காரணங்கள் காட்டிச் செக்கைத் திருப்பி அனுப்பிக் கொண்டே இருக்கிறார்கள்! இதுவரை பத்துத் தடவைகளுக்கு மேல் கட்டி விட்டேன். செக் தான் சுவரில் அடித்த பந்தாகத் திரும்பி வந்து கொண்டிருக்கிறது!"

ராகவன் அந்தச் செக்கையும் அதனுடன் இருந்த பாங்குக் காகிதங்களையும் புரட்டிப்புரட்டி பார்த்தான். "குசேலா படக் கம்பெனியார் பலே கைகாரர்களா யிருப்பார்கள் போலிருக்கிறது! இந்தச் செக்கை நேரில் அவர்களிடமேயே கொண்டு போய்க் கொடுத்துக் கேட்டுப் பார்ப்பதுதானே!" என்றான்.



"கேட்காமல் இருப்பேனா! கேட்டும் பார்த்து விட்டேன். 'நாளை பாங்கு நேரத்துக்கு வாருங்கள், ஸார்! நானே மாற்றித் தருகிறேன்' என்றார் அதன் முதலாளி. சரியென்று மறு நாள் போனால் ஆபீஸ் மூடியிருந்தது. அதற்கு மறு நாள் போனால் முதலாளியைக் காணோம். கல்லைக் கண்டால் காயைக் காணோம். நாயைக் கண்டால் கல்லைக் காணோம் என்ற கதையாகி விட்டது. எவ்வளவு நாட்கள் தான் ஆபீஸ் நேரத்தில் அவரைப் பார்க்கப் போய்க் கொண்டிருக்க முடியும்!" என்றான் வரதன்.

"அப்படியானால் அவர்கள் கொடுத்தது வெறும் புரட்டுச் செக்காக இருக்க வேண்டும் என்று எண்ணுகிறேன்."

"அது நீ சொல்லித்தான் எனக்குத் தெரிய வேண்டுமாக்கும்!" என்றான் வரதன்.

அதற்குள் வண்டி பக்கத்து ஸ்டேஷனில் வந்து நின்றது. இரண்டொருவர் ஏறி வரதனுக்கு அருகில் வந்து உட்கார்ந்து கொண்டார்கள்.

வண்டி புறப்பட்டதும், "இதற்கு என்ன செய்யலாம்!" என்று ராகவனை மறுபடியும் யோசனை கேட்டான் வரதன்.

"என்ன செய்வது! இன்று குசேலா படக் கம்பெனிக்குச் செக்கை எடுத்துக் கொண்டு போ! நேரே முதலாளியிடம் சென்று கேட்டுப் பார்! அவர் பணம் கொடுத்தால் சரி. இல்லாவிட்டால் 'நீயும் ஆச்சு உன் செக்கும் ஆச்சு!' என்று சொல்லி அவர் தலையிலேயே கிழித்துப் போட்டு விட்டு வா! அப்புறம் வீட்டுக்கு வந்து அந்தப் பணத்துக்கு ஒரு முழுக்கு வேண்டுமானாலும் போட்டு வை!" என்றான் ராகவன்.

"சபாஷ்! நீ சொல்வதையேதான் நானும் நினைத்தேன்!" என்றான் வரதன்.

பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர், "என்ன ஸார், விஷயம்!" என்று கேட்டார். முந்திரிக் கொட்டையாகப் பிறர் விஷயத்தில் முந்திக் கொண்டு தலையிடும் கோஷ்டியைச் சேர்ந்தவர் போலத் தோன்றியது அவர் கேட்ட கேள்வி.

வரதன் ஆதியோடு அந்தமாக ஆத்திரம் தீரக் கதை முழுவதையும் சொல்லி முடித்து விட்டு, "இவர் சொல்வது போல் இந்தச் செக்கைக் கொண்டு போய் அந்தப் பட முதலாளியின் தலையில்தான் கிழித்து போட்டு விட்டு வரப் போகிறேன்!" என்றான்.

அதைக் கேட்ட அந்த மனிதர் வெகு ஆவலுடன், "எங்கே! அந்தச் செக்கை இப்படிக் கொடுங்கள், பார்க்கலாம்!" என்றார்.

வரதன் அவர் கையில் அந்தச் செக்கைக் கொடுத்தான். அதை அவர் புரட்டிப் புரட்டிப் பார்த்து விட்டு, "அந்த வேலையை நானே செய்து விடுகிறேன்!" என்றார். அதைச் சொன்னவர் அவன் பதிலுக்குக் கூடக் காத்திராமல் செக்கை இரண்டாகக்கிழித்துவிட்டார்.

அதைக் கண்ட வரதனுக்கு இருதயமே நின்று விடும்போலாகி விட்டது. "ஸார், ஸார்! வேண்டாம், ஸார்!" என்று கூச்சலிட்டுக் கொண்டு பிடுங்கப் போனான். அதற்குள் அவர் அதைச் சுக்கு நூறாகக் கிழித்து விட்டார்.

வரதனுக்குக் கோபம் தாளவில்லை. "எனக்கு வந்த செக்கைக் கிழித்தெறிய நீர் யார்! சுத்த காலாடித் தனமான

காரியமாக அல்லவா இருக்கிறது!" என்று கூச்சலிட்டான்.

"உங்கள் காரியத்தைச் சுலபமாக்கிய எனக்கு இந்த வசவும் வேண்டும், இதற்கு மேலும் வேண்டும்!" என்றார் அந்த மனிதர் வெகு அடக்கமாக.

"என்ன, ஐயா! மூளையில்லாமல் பேசுகிறீர்! வந்த செக்கை ஒருவன் கிழித்தெறிவானா, ஐயா! என்ன செய்வீரோ, எனக்குத் தெரியாது. என் ஐந்நூற்றொரு ரூபாயை நீர்தான் கொடுத்தாக வேண்டும்!" என்றான் வரதன்.



"ஏன், ஸார்! இந்த நியாயம் எப்படியிருக்கிறது! மாறாத செக்குக்கு நான் பணம் கொடுக்க வேண்டுமாமே! நியாயம் நன்றாயிருக்கிறதல்லவா!" என்றார் அந்த மனிதர்.

"என் செக் மாறாது என்று எப்படி ஐயா உமக்குத் தெரியும்!"

"நீர்தானே ஐயா சொன்னீர்!"

"உம்மிடம் வந்து நான் சொன்னேன்! போ, ஐயா, போ! என் பணத்தைக் கீழே வைத்துவிட்டு மறு காரியம் பார்!"

இப்படியாக ஆரம்பித்த சண்டை கைகலப்பில் வந்து முடியும் போலாகி விட்டது. அது மட்டும் அல்ல; வண்டியில் உள்ள அனைவருடைய கவனத்தையும் வேறு கவர்ந்து விட்டது.

"எதற்கு ஐயா வீண் வம்பை விலைக்கு வாங்கிக் கொண்டீர்! அவர் செக்கை நீர் கிழிப்பானேன்!" என்றான் ராகவன் வரதனுக்குப் பரிந்து கொண்டு.

"மாறாத செக்கை வைத்துக் கொண்டு இவர் என்ன செய்வார்! கண்ணாடி போட்டு மாட்டிக் கொள்வாரோ!"

"கண்ணாடி போட்டு மாட்டுகிறார் அல்லது சட்டம்தான் போட்டு மாட்டுகிறார். அவர் செக்கைக் கிழிக்க உமக்கு என்ன உரிமை!"

"அப்பப்பா! என்ன நன்றி கெட்ட உலகம், ஐயா இது! ஒருவர் காரியத்தை ஒருவர் சுலபமாக்க எண்ணி நல்லது செய்யப் போனால் இப்படியா பழியாகப் பாய வேண்டும்!" என்று முணுமுணுத்தார் அந்த மனிதர்.

அந்த மனிதருக்கு ஏண்டா விருதுப்பட்டிச் சனியனை வீணில் விலைக்கு வாங்கிக் கொண்டோம் என்று தோன்றியிருக்கவேண்டாமோ! அதுதான் இல்லை! அலட்சியமாகவும் தடித்தனமாகவுமே அவர் பேசினார்.

ஜனங்களுக்கு அவர் பேச்சுப் பிடிக்கவில்லை. செக் என்றால் பணம் என்றுதானே அர்த்தம்! பணத்தை விட யாருக்காவது மனம் வருமா! எனவே, எல்லோரும் வரதன் கட்சியில் சேர்ந்துகொண்டு அந்த மனிதருடன் மொல்லு மொல்லு வென்று சண்டைக்கு வந்து விட்டனர். எல்லோரும் ஒரு முகமாக எதிர்க்கத் தொடங்கவே, அந்த மனிதர் கொஞ்சம் தாழ்ந்து கொடுத்து, "ஸார்! அதிகம் பேசாதீர்கள். உங்களுக்கு உங்கள் செக்தானே வேண்டும்! இதோ



தருகிறேன்! சற்றுப் பொறுமையாயிருங்கள்!" என்றார்.

"கொடுத்துக் கிழிப்பீர்! போம்! ஐயா, போம்!"

"கொடுத்துக் கிழிக்க மாட்டார். ஆனால் கொடுத்ததைக் கிழிப்பார்!" என்று ராகவன் விளக்கம் கூறினான். அக் கலவரத்திலும் அதைக் கேட்டு எல்லோரும் கலகல வென்று கைகொட்டிச் சிரித்தார்கள்.

அந்த மனிதர் கிழித்த காகிதத் துண்டுகளை வரதனின் உள்ளங் கையில் வைத்துக் கையை மடக்கி மூடினார்.

வரதனுக்கு ஆத்திரம் அளவு கடந்து விட்டது. அப்படியே அந்தக் காகிதத் துண்டுகளை அவர் முகத்தில் வீசி அடித்தான்.

அதைக் கண்ட ராகவன், "குசேலா கம்பெனி முதலாளிக்குச் செய்ய வேண்டியதை இங்கேயே இவருக்குச் செய்து விட்டாயேடா!" என்றான்.

ஆனால் என்ன ஆச்சரியம்! சுக்குச் சுக்காக இருந்த அந்தக் காகிதத் துண்டுகள் வாயுவேகமாக ஒன்று கூடிப் பழையபடியே செக்காக மாறிக் கீழே காட்சியளித்தன. அதைக் கண்ட வரதன் அப்படியே தாவி அதை எடுத்துக் கொள்ளப் போனான்.

'இதேதடா மாயமாக இருக்கிறது! கிழித்த செக் எப்படிப் பழையபடியே ஆயிற்று!' என்று அகல விரிந்த கண்களுடன் எல்லோரும் அதையே உற்றுப் பார்த்தனர்.

"ஸார்! நான் ஒரு மந்திரவாதி. வண்டியில் வெகு தொலைவிலிருந்து வரும் உங்களுக்குச் சிரமம் தெரியாமல் இருக்க வேண்டி இந்த வேடிக்கையைக் காண்பித்தேன். இதற்காக உங்களுக்குத் தோன்றியதைக் கொடுத்து என்னை ஆதரியுங்கள்!" என்றார் அந்த மனிதர்.

முதன் முதலில் வரதனின் கைதான் சட்டைப் பைக்குள் சென்று கால் ரூபாயை எடுத்து அவர் கையில் வைத்தது. கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் அம் மனிதரின் கையில் ஐந்து ரூபாய்க்கு மேற்பட்ட சில்லறை சேர்ந்துவிட்டது. அதற்குள் வண்டி தாம்பரம், மாம்பலம் எல்லா ஸ்டேஷன்களையும் தாண்டி எழும்பூரை அடைந்து விட்டது. இத்தனை சீக்கிரம் வண்டி எப்படி எழும்பூரை அடைந்தது என்பது எல்லோருக்குமே ஆச்சரியத்தை அளித்தது. இதுவும் மந்திரவாதியின் செய்கையாக இருக்குமோ என்று எண்ணி அவர்கள் மந்திர வாதியின் முகத்தைப் பார்த்தனர். அதற்குள்ளாக மந்திரவாதி இறங்கி அடுத்த பெட்டிக்குச் சென்று விட்டார்.

எழும்பூரில் இறங்க வேண்டியவர்களை இறக்கி விட்டு விட்டு வண்டி புறப்பட்டது.

"ஏன், ராகவன்! மந்திரத்தினால் மாங்காய் காய்க்காது என்று சொல்வார்களே! ஆனால் இந்த மந்திரவாதிக்கு நாறாகக் கிழித்தசெக்கை எப்படி அப்பா பழையபடியே ஒட்டச் செய்தார்! நினைக்க

நில்! நில்!!













நினைக்க இது ஆச்சரியமா யில்லை !" என்று கேட்டான் வரதன். அவன் குரலிலும் அந்த ஆச்சரியம் அழகாகத் தொனித்தது.

"இதில் என்ன ஆச்சரியம்! மந்திரம் பாதி, தந்திரம் பாதி என்பார்கள். அம்மாதிரி இந்த மந்திரவாதியும் ஏதாவது செய்திருக்கலாம் அல்லவா !" என்றான் ராகவன்.

"அதெப்படி யப்பா தந்திரமாக இருக்க முடியும்! கிழிந்த துண்டுகள் எல்லாம் நம் கண்ணுக்கு முன்பாகத்தானே ஒன்று கூடிச் செக்காகமாறின! மந்திரத்தால் ஆகாத காரியம் ஒன்றும் இல்லை என்றுதான் எனக்குத் தோன்றுகிறது! என்ன, நான் சொல்வது !" என்றான் வரதன்.

"நீ சொல்வதைப் பார்த்தால் உனக்கு ஒரு நப்பாசை இருப்பதாகத் தோன்றுகிறது. இந்த மந்திரவாதியின் உதவியைக் கொண்டு சினிமாவில் சேர்ந்து விடலாம் என்று எண்ணுகிறாய். அப்படித்தானே !"

"ஆமாம் !"

"ஆனால் நீ என்னதான் கஜகர்ணம் போட்டாலும் உனக்குச் சினிமாவில் சந்தர்ப்பம் கிடைக்காது. சந்தர்ப்பம் கிடைத்தாலும் பணம் கிடைக்காது. மந்திர வாதியைப் போல் இத்தனை சீக்கிரம் கலபமாக ரூபாய் சம்பாதிக்கவும் முடியாது. அப்படியே பணம் கிடைத்தாலும் மாறாத செக்காகவும் செல்லாத நாணயமாகவும் தான் இருக்கும். அதனால் நான் சொல்வதைக் கேள் !" என்றான் ராகவன்.

"என்ன !" என்று கேட்டான் வரதன்.

"இந்த மந்திரவாதிக்குச் சிஷ்யனாகி வேடிக்கை காட்டக் கற்றுக் கொள். பணம் உன்னைத் தானாகவே தேடி வரும் !" என்றான் ராகவன்.

"அது சரி, ஆனால் அதற்கு நாளாகுமே! அதற்கு முன்னால் இந்தச் செக் மாறிப் பணம் வருமா, வராதா என்று அந்த மந்திரவாதியையே கேட்டுப் பார்த்தால் என்ன !"

"இதற்கு மந்திரவாதியைப் போய்க் கேட்பானேன் ! குசேலா படக் கம்பெனியார் பாங்கியில் பணம் கட்டி, அந்தச் சமயத்தில் நீ பாங்குக்குப் போய்ச் செக்கைக் கொடுத்தால் பணம் வரும் !" என்றான் ராகவன், அறைந்தாற்போல.

அதே சமயம் வண்டி கோட்டை ஸ்டேஷனில் போய் நின்றது. மந்திரவாதி இறங்கி அவர்கள் அருகில் வந்து, "ஸார் சொன்னது நூற்றுக்கு நூறு உண்மையான வார்த்தை! குசேலா கம்பெனியார் பணம் கட்டினால் தான் செக் மாறும். ஆனால் குசேலரின் அவதாரமாக இருக்கும் அவர்கள் பணத்துக்கு எங்கே போவார்கள்! பணம் இருந்தால் அதன் முதலாளி எதற்காக இப்படி மந்திரவாதியாகத் திரியப் போகிறார்! பணம் காய்க்கிற மரத்தைக் கண்டு பிடித்துத் தன் வயிற்றை வளர்ப்பதற்காகத்தானே அவர் மந்திரவாதியாகி யிருக்கிறார் !" என்றார்.

அப்புறம் அவர் அங்கே ஒரு நிமிஷம் கூட நிற்கவில்லை. அவர் தான் குசேலா கம்பெனியின் முதலாளி என்பதைப் புரிந்துகொள்ள வரதனுக்கோ ராகவனுக்கோ நேரமும் பிடிக்கவில்லை.

'நாம் தான் பெரிய நடிகன் என்று இறுமாந்திருந்தோமே! இவர் எல்லா நடிகர்களையும் வாயில் போட்டுக் கொண்டுவிடுவார் போலிருக்கிறதே!' என்று எண்ணிய வரதன், "அவர் அல்லவா நடிகர் !" என்றான் தன்னையும் மீறி.

"நடிகர் என்றால் சாமான்யப்பட்ட நடிகரா! பிறவிநடிகர், அப்பா!" என்று திருத்தினான் ராகவன்.



உங்கள் பேனாவை
செலவதிகமான ரிப்பேர்
களிலிருந்து காப்
பாற்றுங்கள் !

# பார்க்கர்·க்வின்க்

உபயோகியுங்கள்

பாதுகாப்பளிக்கும்

## ஸால்வ்-X

அடங்கிய மை இது ஒன்றே

**திராவகம் மிகுந்த மைகளால் பேனா ஒழுகுதல் மற்றும் இதர கோளாறுகள் ஏற்படுகின்றன**




பார்க்கர் க்வின்க் உபயோகித்து இவ்விதக் கோளாறுகளைத் தவிருங்கள். ஸால்வ்-X அடங்கிய மை இது ஒன்றே. இந்தப் பொருள் கசண்டுகளைக் கரைத்து விடுகிறது. அரிப்பையும் அடைப்பையும் தடுக்கிறது. க்வின்க் அழியா வர்ணங்களிலோ, கழுவி அழித்துவிடக் கூடிய நிறங்களிலோ விரும்பியபடி வாங்கலாம்.

விநியோகஸ்தர்கள் : டாட்ஜ் & ஸேமர் (இந்தியா) லிட்.
த. பெ. 51, மதராஸ்

PKQ. 7764




வருஷப் பிறப்பு தினம். வாசலில் நீர் தெளித்துப் பெரிய கோலமாகப் போட்டுக் கொண்டிருந்தாள் கமலா.

அடுத்த வீட்டிலிருந்து அதைக் கவனித்துக் கொண்டே வந்த பார்வதம்மாள், "ஆமாம்! மாசம் பிறந்தாலும் வீட்டு வாடகை கொடுக்க வகையில்லா விட்டாலும் வீட்டு வாசலில் பெருங் கோலம் போடுவதில் குறைச்ச லில்லை" என்று முணுமுணுத்தாள்.

கமலாவின் காதில் அது விழுந்ததும் அவள் திடுக்கிட்டுத் திரும்பினாள். "மாமி! வருஷப் பிறப்பும் அதுவுமாக ஏன் வீண் மனக் கசப்பு தரும் வார்த்தையைச் சொல்கிறீர்கள்? உங்கள் வாடகைப் பணத்தை இன்றே கொடுத்து விடுகிறேன்" என்றாள்.

"இங்கிலீஷ் மாசம் பிறந்து பதின்மூன்று தேதிகளாகி விட்டன. இன்னும் வாடகைப் பணம் தந்தாகவில்லை. இனிமேல்தான் ரோசம் பிறந்து கொடுத்து விடப் போகிறாயாக்கும்!" என்று ஏகத்தாளமாகக் கூறினாள் பார்வதம்.

வருஷப் பிறப்பன்று வீண் மனஸ்தாபத்துக்கு இடங் கொடுக்கக் கூடாது என்ற எண்ணத்தோடு 'வெடுக்'கென்று வீட்டினுள் நுழைந்தாள் கமலம். வியாதியஸ்தராகப் படுத்துக் கொண்டிருந்த அவள் கணவர், "என்ன கமலா! ஏது உன் முகம் கண்டி யிருக்கிறது?" என்று கேட்டான்.

"ஒன்றுமில்லை" என்று முகத்தில் வேண்டு மென்றே புன்னகையை வரவழைத்தபடி கூறினாள் கமலா.

மணி பத்தடித்ததும் கமலா வருஷப் பிறப்புச் செலவுக்காக வைத்திருந்த பத்து ரூபாய் பணத்தையும் எடுத்துக் கொண்டு அடுத்த வீட்டுக்குச் சென்றாள். வாடகைப் பணத்தைக் கொடுத்தால்தான் அவள் உள்ளம் நிம்மதியடையும் போலிருந்தது.

அடுத்த வீட்டின் பின் பக்கம் சென்று, "மாமி!" என்று கூவினாள் கமலா.

"மாமிக்கு என்ன? பணம் இல்லை, நாளைக்குத் தருகிறேன் என்று சொல்வதற்குத் தானே? அதைச் சொல்ல வரவேண்டாமே?" என்று உள்ளிருந்தபடியே குத்தலாகக் கூறினாள் பார்வதம்மாள்.

"இல்லை, மாமி! உங்கள் வாடகைப் பணத்தைக் கொடுக்கத்தான் வந்திருக்கிறேன்."

"அப்படியா? என்ன அதிசயமடி! வருஷப் பிறப்புக் கொண்டாட்டம் இந்த வீட்டிலே நடக்கா விட்டாலும், வாடகைப் பணம் வந்ததே, அதுமட்டும் திருப்திதான்" என்று அலுத்துக் கொண்டே வெளியே வந்தாள் பார்வதம்மாள்.

"ஏன், மாமி! வருஷப் பிறப்பு உங்கள் வீட்டில் கொண்டாடுவதற்கு ஏதாவது......"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. காலையில் எழுந்ததும் சமையலாகவில்லை என்று கோபித்துக் கொண்டு அவர் அவசரம் அவசரமாக ஆபீசுக்குப் போய் விட்டார். பிள்ளையாண்டான் புது சினிமா வந்திருக்கிறது என்று சாப்பிடக்கூட இல்லாமல் போய் விட்டான். மாட்டுப் பெண் 'உம்' என்று முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு மூலையில் உட்கார்ந்திருக்கிறாள். இந்த லட்சணத்தில் வருஷப் பிறப்புக் கொண்டாட்டம் என்ன வேண்டியிருக்கிறது?" என்று கூறித் தலையி லடித்துக் கொண்டாள் பார்வதம்மாள்.

'பணமில்லாத நான்தான் வருஷப் பிறப்புக் கொண்டாட முடியாமல் திண்டாடுகிறேன். ஆனால் பணவசதி படைத்த இவர்கள் வீட்டிலும் வருஷப் பிறப்பு இந்த லட்சணத்தில் தானா இருக்கிறது?' என்று மனத்துக்குள் எண்ணினாள் கமலா. அவள் மனத்திலிருந்த வேதனை ஒருசிறிது குறைந்ததுபோலிருந்தது.

"மாமி! இந்தாருங்கள், பணம்!" என்று கூறிப் பத்து ரூபாயை அவள் கையில் கொடுத்து விட்டு வீட்டை நோக்கி நடந்தாள் கமலா.

இச்சமயம் அவள் பெண் இந்திரா ஓடி வந்து, "அம்மா! எங்கே போயிட்டுவரே? வருஷப் பிறப்புக்கு எனக்கு வடை, பாயசம், பூந்தி எல்லாம் பண்ணித் தருகிறேன் என்றாயே?......" என்றாள்.

கமலா பலவிதச் சிந்தனைகளில் ஈடுபட்டிருந்ததால் ஒன்றும் பதிலே பேசவில்லை.



" எப்பொழுதும் உஷ்ணமாக வைத்திருக்கும் 'தர்மாஸ் பிளாஸ்க்' வேணுமா, ஸார்!"
" இப்பொழுது என் சம்சாரம் உஷ்ணமாக இருக்கிறள். அப்புறம் வாருங்கள்."
" வேண்டாங்க. சூட்டோடு சூடாக இப்பொழுதே வாங்கிக்குங்க, ஸார்!"

---

" அம்மா! ஏன் பதிலே பேச மாட்டேன் என்கிறாய்? அடுத்த வீட்டு ராமுவுக்கு அவன் அம்மா மைசூர்ப்பாகு, லட்டு, பாதம்ஹல்வா இன்னும் என்ன வெல்லாமோ செய்து தரப் போகிறாளாம். எனக்கு......"

" இந்திரா! சமர்த்தோல்லியோ? உனக்கு அடுத்த வருஷம் நிறையத் தித்திப்புப் பட்சணங்களெல்லாம் செய்து தருகிறேன்......"

" போ, அம்மா! இந்த வருஷம் ஏன் செய்து தரமுடியாது? அவர்கள் வீட்டில் மட்டும் செய்து தருகிறார்களே!" என்று வருத்தத்துடன் கேட்டாள் இந்திரா.

" கண்ணு! உன் அப்பாவுக்கு உடம்பு சரியில்லாததால் பணம் முழுதும் செலவாகி விட்டது. வருஷப் பிறப்புக்காக வைத்திருந்த பணத்தையும் வீட்டு வாடகைக்குக் கொடுத்து விட்டேன்!"

" அப்படியானல் எனக்கு இன்றைக்கு ஒன்றுமே செய்து தரமாட்டாயா?"

" உனக்குப் பிடித்தமானதில் ஏதாவது ஒன்றைச் சொல்லு. அதைச் செய்து தருகிறேன். அடுத்த வருஷம் உனக்கு எல்லாம் செய்து தருகிறேன்."

" அம்மா! எனக்குப் பாயசம் தான் ரொம்பப் பிடிக்கும்!" என்றாள் இந்திரா.

" அவ்வளவுதானே? நிறையப் பாயசம் பண்ணித் தருகிறேன்" என்று கூறி அவளை வீட்டினுள் அழைத்துச் சென்றாள் கமலா.

பதினொரு மணி இருக்கும். கமலா இந்திராவின் பிஞ்சு உள்ளத்தைத் திருப்திப் படுத்துவதற்காக வெல்லப் பாயசம் செய்து கொண்டிருந்தாள். இந்திரா வாசலில் எங்கேயோ விளையாடப் போயிருந்தாள்.

திடீரென்று இந்திரா, " அம்மா!" என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே வந்தாள்.

" இந்திரா! பாயசம் தயாராகி விட்டது. சாப்பிடுகிறாயா?" என்று அன்புடன் கேட்டாள் கமலா.

" அம்மா! அடுத்த வீட்டு ராமுவை அவன் அம்மா கோபித்துக் கொண்டு அடித்து விட்டாளாம். அவனுக்கும் பாயசம் கொடுக்கிறாயா, அம்மா!" என்று தன் நண்பனுக்குப் பரிந்து பேசினாள் இந்திரா.

வாசலில் தயங்கியபடி நின்று கொண்டிருந்தான் பர்வதம்மாளின் குமாரன் ராமு. காலையிலிருந்து பர்வதம்மாளின் கோபம் கமலாவுக்குத் தெரிந்துதானிருந்தது. ராமுவும் பர்வதம்மாளின் கோபத்துக்கு இலக்கானதில் அவளுக்கு ஆச்சரியம் ஏதும் ஏற்படவில்லை. ஆனல் பெரியவர்கள் செய்த தவறுக்குச் சிறு குழந்தையைக் கோபித்துக் கொண்டதுதான் வியப்பாக இருந்தது. பாவம்! ராமு என்ன செய்வான்?—கமலா அவன் நிலையைக் கண்டு பரிதாபப்பட்டாள்.

பர்வதம்மாளின் மேல் கமலாவுக்கு அன்று வெறுப்பு ஏற்பட்டபோதிலும், அவளுடைய இனித்த இருதயம் குழந்தை ராமுவின்மீது வெறுப்பு ஏற்பட இடந்தரவில்லை; அன்பையே சொரியச் செய்தது. ராமுவைக் கமலா அன்புடன் விளித்து, " உள்ளே, வா! உனக்கும் இந்திராவுக்கும் நிறையப் பாயசம் தருகிறேன்" என்றாள்.

ராமு தயங்கிக் கொண்டே உள்ளே வந்தான். கமலா இரு பாத்திரங்களில் வெல்லப் பாயசத்தை ஊற்றி இருவருக்கும் கொடுத்தாள். ராமுவுக்கு வெல்லப் பாயசம் தன் வீட்டில் சாப்பிடும் சேமியா பாயசத்தை விட ருசியாயிருப்பது போல் தோன்றியது.

இந்திராவும் ராமுவும் வெல்லப் பாயசத்தைத் தேவாமிர்தமாகக் கருதி மகிழ்ச்சியுடன் பருகினர்.

" மாமி! பாயசம் ரொம்ப நன்றாயிருக்கு... எங்க அம்மா எப்பொப் பார்த்தாலும் என்னைக் கோவிச்சுண்டே யிருக்கா, மாமி! ஆனல் நீங்க இந்திராவைக் கோவிச்சுண்டதை நான் பார்த்ததே யில்லே. எனக்கு இந்திராவோடே இந்த வீட்டிலேயே இருந்து விடணும்னு ஆசையா யிருக்கு, மாமி!" என்றான் ராமு.

"பேஷாக நீ எங்கள்வீட்டில் இருக்கலாம்!" என்று மகிழ்ச்சியுடன் கூறினாள் கமலா.

இந்தக் காட்சிகளை யெல்லாம் பக்கத்து வீட்டிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த பர்வதம்மாளுக்கு, 'அடாடா! கமலாவின் நிறைந்த உள்ளம் எனக்கு இல்லையே?' என்று தான் தோன்றியது.

ஆனல் கமலாவின் வீட்டிலோ? — குழந்தைகளின் ஆனந்தத்தில் வருஷப் பிறப்பைப் பிரமாதமாகக் கொண்டாடி விட்டதாகப் பெருமை அடைந்தாள் கமலா.

உங்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் ஏற்றது




நீம் டூத் பேஸ்ட்

இயற்கையான க்ளோரபிலுடன் கெடுதலை எதிர்க்கும் சக்தி, பூச்சியை அழிக்கும் வன்மை மற்றும் அழிவுச் சக்திகளை ஒழிக்கும் தன்மையைப் பெற்றிருப்பதுடன் பல் வைத்தியம் சம்பந்தப்பட்ட நூதன முறை ஆரோக்கிய விதிகளையும்கொண்டது.

பெரிய சைஸ்களிலும் கிடைக்கும்.




Margofrice
Neem Dental Powder

மார்கோப்ரைஸ் பற்பொடியை விரும்புகிறவர்களுக்கு இது ஏற்றது. நீம் பற்பசையில் இருப்பவை இதிலும் உள்ளன.

CALCHEMICO PRODUCTS

தென் இந்தியா ஆபீஸ்:
5/149. பிராட்வே. மதராஸ்-1

அழகுக்கு அழகு செய்யும்



ஆபரணங்களின் உறைவிடம்



T. கோவிந்தராஜுலு நாயுடு

வைரம், பொன் நகைகள்
வெள்ளி சாமான்கள் வியாபாரம்

28, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு
சென்னை - 1

★

மொத்த விற்பனை & ஓர்க்ஷாப் :
128, நைனியப்ப நாயக்கன் தெரு
சென்னை - 3

தந்தி : "ALANKAR" - போன் : 4818




வேங்கடலக்ஷ்மி

பக்கத்து அறையில் தூங்கி விழித்துக் கொண்ட குழந்தை நெடுநேரமாக வீறிட்டு அழுது கொண்டிருந்தது. பெட்டியை ஒழித்து வைத்துக் கொண்டிருந்த சாவித்திரியின் காதில் இந்த ரோதனம் கேட்காமலில்லை. அவள் என்ன செய்வாள் பாவம்! அவளுக்குத்தான் வீட்டில் ஒரு அதிகாரமுமில்லையே, அழுகிற குழந்தையைக் கூட அவள் எடுத்துச் சமாதானப் படுத்தக் கூடாதென்பது அவளுடைய தம்பியின் மாமியார் அலமேலுவின் உத்தரவாயிற்றே' வீட்டில் சாவித்திரிக்கும் அவள் கணவருக்குமாக அந்த அறை சர்வ மானியம் விடப்பட்டிருந்தது. அதை விட்டு ஏதாவது முக்கியமான விஷயமாக வெளியில் வந்தால் கூட அலமேலு முகத்தைச் சுளித்துக் கொண்டு 'வெடுக்'கென்று ஏதாவது குரோதத்துடன் சொல்லுவாள். ஒரு மாதமாகத் தனக்குண்டான இந்த அநுபவத்தின் பேரில், போய்க் குழந்தையைக் கையிலெடுப்பதா, வேண்டாமா என்ற பிரச்னையைத் தீர்க்கும் வகையறியாமல், செய்து கொண்டிருந்த வேலையும் ஓடாமல் குழப்பத்துடன் அறை வாயிற்படியில் வந்து எட்டிப் பார்த்தாள் சாவித்திரி.

அங்கே ஒருவரையும் காணவில்லை. ராஜி குளித்துக் கொண்டிருக்கிறாள் போலிருக்கிறது என்றெண்ணியவளாய் மெல்ல வெளியே வந்தாள் சாவித்திரி. ராஜி அவளுடைய தம்பியின் மனைவி.

சமையலறை வாயிற்படியண்டை வந்து பார்த்தாள். உள்ளே கரியடுப்பின் மீது சாம்பார் கொதித்து வற்றிப் போய்க் கொண்டிருந்தது. வலைக் கதவை இழுத்துப் பூட்டிக் கொண்டு அலமேலு, முதல் நாள் பிழிந்த வடகத்தை உலர்த்துவதற்காக மேல் மாடிக்குப் போயிருந்தாள். பூட்டைக் கண்ட சாவித்திரிக்குக் கோபத்துடன் சிரிப்பும் வந்தது. மெல்லத் திரும்பி வந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்த தன் கணவரைச் சைகை காட்டி யழைத்தாள்.

அவர் எழுந்து வெளியே வந்தவர் பூட்டியிருந்த கதவைப் பார்த்தார். அவருக்குச் சிரிப்பு வரவில்லை. அதற்குப் பதில் ஆத்திரம்தான் பொங்கி வந்தது. சாவித்திரியைக் கோபத்துடன் உற்றுப் பார்த்தபடியே, "எத்தனை தடவை முட்டிக் கொண்டேன்! கேட்டாயா! வீடு கிடைக்கா விட்டால் என்ன! என் தம்பியினுடைய பங்களா கோட்டை போலிருக்கு! அவனுடனேயே நாம் இருந்து விடலாம்; நமக்கும் நல்லது, அவனுக்கும் நல்லது, என்றெல்லாம் பிதற்றினாயே! நன்றாகப் படு! உனக்கு இதுவும் வேண்டும் இன்னமும் வேண்டும்!" என்று கடுகடுப்புடன் கூறிவிட்டு மீண்டும் அறைக்குள் நுழைந்து பத்திரிகையைக் கையிலெடுத்து அதில் முகத்தைப் புதைத்துக் கொண்டார் அவர்.

சாவித்திரி ஒன்றுமே பதில் சொல்லவில்லை. என்னத்தைச் சொல்வாள்! அவர் சொல்லுவதெல்லாம் உண்மைதானே! ஆரம்பத்திலேயே அவளை டில்லிக்கு அழைத்து வருவதில் அவருக்கு இஷ்டமில்லை. 'நமக்கென்று வீடு கிடைக்கட்டும், அப்புறம் அழைத்து வரலாம்' என்று ஆனவரையில் சொல்லிப் பார்த்தார். ஆனால் சாவித்திரி தான் தன் தம்பியின் வீட்டிலேயிருந்துவிடலாம். வேறு வீடு பார்க்க வேண்டிய அவசியமேயில்லை என்றெல்லாம் அவருடைய மனதைக் கலைத்து அவருடனேயே டில்லிக்குக் கிளம்பி விட்டாள். வந்த இடத்தில் தம்பியின் மாமியார் இருப்பாளென்றும் அவளுடைய ஆதிக்கத்தின் கீழ், தான் அடங்கி யிருக்கும்படியாக நேரிடுமென்றும் அவள் எதிர்பார்க்கவில்லை. ஆகவே சாவித்திரிக்கு மிகவும் கவலையாக இருந்தது. உடனேயே வேறு வீட்டுக்குப் போகலாமென்றால் அந்தப் பாழாய்ப்போன டில்லியில் வேறு தங்குவதற்கு ஒரு எலி வளை கூடக் கிடைக்கவில்லையே. என்ன செய்வது! என்றெல்லாம் எண்ணிக் குமுறிக் கொண்டிருந்தாள்.




"பென்சில் வேணுமா? நன்றாக எழுதுகிற பென்சிலாக வேணுமா? இல்லாவிட்டால் சர்க்கார் காரியாலயங்களுக்கு விநியோகம் பண்ணுகிற பென்சில் மாதிரி இருந்தால் போதுமா?"

"என்ன யோசிக்கிறாய்! அடுப்பில் சாம்பாரெல்லாம் வற்றி வீணாய்ப் போய் விடுகிறதே யென்றா? அட பாவமே! நீ ஒரு வேளை அதையெல்லாம் குடித்துத் தொலைத்துவிடப் போகிறாயென்றுதானே உன் தம்பியின் மாமியார் முன் ஜாக்கிரதையாகக் கதவைப் பூட்டிக் கொண்டு மாடிக்குப் போயிருக்கிறாள்! சொல்லச் சொல்லக் கேளாமல் இந்த அருமையான தம்பியின் வீட்டுக்கு உறவு கொண்டாட வந்திருக்கிறாய்! எக்கேடும் கெட்டுப் போ!" என்று தம்முடைய கோபத்தை யெல்லாம் அவள்மீது கொட்டி விட்டு எழுந்து ஆணியில் மாட்டியிருந்த சட்டையை யெடுத்துப் போட்டுக் கொண்டு வெளியே கிளம்பத் தயாரானார்.

சாவித்திரி, "எங்கே போகிறீர்கள்!" என்று அவரிடம் கேட்டாள்.

"எங்கே போவது! ஹோட்டலில் போய்க் காப்பி குடிக்கப் போகிறேன். காலையில் உன் தம்பி மாமியார் காப்பி யென்ற பெயருடன் ஒரு கரிக் கஷாயம் கொடுத்தாள். தெரியாமல் ஒரு வாய் குடித்து விட்டேன். அது இன்னும் வயிற்றைக் குமட்டுகிறது" என்று கோபத்தோடு சொல்லியபடியே வாசற்படி வரையில் போய்விட்டார். கதவோரத்தில் கிடந்த செருப்பை அவசர அவசரமாகக் காலில் மாட்டிக் கொண்ட சாவித்திரி, "கொஞ்சம், இருங்கள்! இதோ நானும் வந்து விடுகிறேன். தலைவலி பிளக்கிறது. கொஞ்சம் நல்ல காப்பியாகக் குடித்தால் தான் விடும்போலிருக்கிறது" என்று அவருக்கு முன்னாலேயே வாசலில் போய் நின்றாள்.

கோபத்துடன் சிரிப்பும் சேர்ந்து வந்தது அவள் கணவருக்கு.

'சரி; சரி; வந்து தொலை!" என்று கூறியபடியே விடுவிடென்று நடக்கலானார். இவர்கள் போவதைப் பார்த்துக் கொண்டே இறங்கி வந்த அலமேலு அம்மாள் தன் பெண்ணைக் கூப்பிட்டு, "அடியே ராஜி! உன் நாத்தனாரும் அவள் அகமுடையானும் எங்கேயோ போகிறார்கள் போலிருக்கு! ஊரெல்லாம் சுற்றி ஓட்டலில் எதையாவது தின்றுவிட்டுத்தான் வருவார்கள். ராத்திரிச் சாப்பாட்டுக்குக் குறைவாக அரிசி போடு, போதும்! வடித்து விட்டுத் தூக்கி வேலைக்காரனுக்குக் கொடுப்பதற்கு இங்கொன்றும் கொட்டிக்கிடக்கலை" என்று உரத்துச் சொல்லியபடியே வாசற் கதவைப் படீரென்று சாத்தித் தாளிட்டாள்.

"உஸ்! எதுக்கம்மா இவ்வளவு கத்துகிறாய்! பக்கத்திலெல்லாம் மதராஸ்காரர்களிருக்கிறார்கள். கொஞ்சம் மெதுவாகத்தான் பேசேன்" என்று கொஞ்சம் பயத்துடன் எச்சரித்து விட்டுக் குழந்தையைக் கையிலெடுத்துக் கொண்டு பால் புகட்ட உட்கார்ந்தாள் ராஜி.

சமையலறைக்குள் நுழைந்து குழம்பைக் கீழே இறக்கி வைத்து விட்டு அடுப்பில் உலையை வைத்தாள் அலமேலு. பிறகு கையில் எண்ணெய்க் கிண்ணத்தையும் சீப்பையு மெடுத்துக் கொண்டு அறை வாசற்படியண்டை வந்து உட்கார்ந்தாள்.

புதுக் குளிராலோ, அல்லது ஊர் மாற்றத்தினாலோ, குழந்தை பத்து நாளாக இளைத்துவிட்டிருந்தது. அத்துடன் ஜீரணமும் சரியாக இல்லாமையினால் குடித்த பாலை யெல்லாம் அப்படியே வாந்தி யெடுத்து விட்டது.

அதைப் பார்த்த அலமேலு மீண்டும் ஆரம்பித்தாள்: "எனக்கு அப்பொழுதே தெரியும்; உன் நாத்தனார் ஊரிலிருந்து வந்ததிலிருந்து குழந்தை பாலும் சரியாகக் குடிப்பதில்லை, விளையாடுகிறதுமில்லை. எல்லாம் கண்ணாலே வருகிற தோஷம் தான்" என்று சொல்லியபடியே வேகமாக உள்ளே போய் ஒரு பிடி உப்பையும் கைநிறைய மிளகாய் வற்றலையும் வாரி வந்து குழந்தையைச் சுற்றி எரியும் அடுப்பில் போட்டாள். வீடு முழுவதும் புகையும் கமறலுமாகக் குழந்தை வாய் ஓயாமல் இரும வாரம்பித்தது. ராஜி மூடியிருந்த ஜன்னலண்டை போய் அதைத் திறந்து விட்டு அங்கே குழந்தையுடன் நின்று கொண்டாள். இச்சமயம் பார்த்து வெளியில் போயிருந்த பட்டாபிராமன் வந்து கதவை யிடித்தான். அலமேலு சட்டென் றெழுந்து தலைப்பை யிழுத்துப் போர்த்திக் கொண்டு போய்க் கதவைத் திறந்து விட்டு ஓரமாக ஒதுங்கிக் கொண்டாள்.

"ராஜி! இதென்ன, ஒரே புகையா யிருக்கு!" என்று கேட்டபடியே உள்ளே நுழைந்த பட்டாபி சைக்கிளை உள்ளே கொண்டு வந்து வைத்து விட்டுச் சாளரத்தண்டை போய்க் குழந்தையைக் கையில் வாங்கி முத்தமிட்டான்.

"கண் திருஷ்டி பட்டுப் பட்டுக் குழந்தை இளைத்துப் போய் விட்டது. ஒரு வாய் கூடப் பால் குடிப்பதேயில்லை. கொஞ்சம் சுத்திப் போட்டேன். அதுதான் அடுப்பில் புகையறது" என்று கூறியபடியே உள்ளே போனாள் அலமேலு.

பட்டாபி அதைக் காதில் வாங்கிக் கொண்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை. கையிலிருந்த குழந்தையை அணைத்தபடியே அங்கு கிடந்த கட்டிலில் உட்கார்ந்து கொண்டான்.

ராஜி, உள்ளே போய்க் காப்பியை யெடுத்துக் கொண்டு வந்தாள்.

அதைக் கையில் வாங்கியபடியே, "அக்காவும் அத்திம்பேரும் எங்கே!" என்று கேட்டான் பட்டாபிராமன்.

"சற்று முன்னால்தான் எங்கேயோ போனார்கள்" என்று ஜன்னலுக்கு வெளியே பார்த்தபடியே பதில் சொன்னாள் ராஜி.

வாயண்டை கொண்டு போன காப்பி லோட்டாவைச் 'சட்'டென்று கீழே வைத்துவிட்டு அவளை அதிசயத்துடன் நோக்கினான் பட்டாபி.

"இப்பொழுது எங்கே போனார்கள், இரண்டு பேரும்! மணி பத்தடிக்கப் போகிறதே! அத்திம்பேருக்கு ஆபீஸுக்குப் போக வேண்டாமா! உன்னிடம் ஒன்றும் சொல்ல வில்லையா!" என்று கேட்டான் மனைவியிடம்.

ராஜிக்கு என்னவோ போலிருந்தது. தன் தாயாரை நிமிர்ந்து பார்த்தாள். சும்மா யிருக்கும்படி தன் மகளுக்கு ஜாடை காட்டி விட்டு, "அவர்கள் வெளியில் போகும்போது வீட்டிலிருக்கிறவளிடம் ஏதாவது சொல்லி விட்டுப் போனால் அல்லவோ! திடுதிப்பென்று அவாள் பாட்டில் நினைச்சுக் கொண்டு கிளம்பிவிட்டால் நமக்கு என்ன தெரியும்!" என்று பட்டாபியை அரைகுறையாக நோக்கியபடியே கூறினாள் அலமேலு.

தன் மாமியாரின் குணம் நன்றாய்த் தெரிந்தவன் அவன். தமக்கை சாவித்திரி ஒரு வம்புக்கும் போகாதவளென்பதும் அவனுக்குத் தெரியும். சும்மாயிருந்தவளைத் தன்னுடன் வந்து இருந்து கொள்ளும்படியும், வீடு கிடைக்கவில்லையே யென்பதற்காகக் கவலைப்பட வேண்டாமென்றும் எழுதி அவளை டில்லிக்குத் தருவித்தது அவன் தான். ஆனால் அப்பொழுது, தன்னுடைய மாமியார் தன்னுடன் வந்து இப்படி மாசக் கணக்கில் முகாம் போட்டு விடுவாளென்பதாக அவன் எதிர்பார்க்கவில்லை. ஆகவே இப்பொழுது இன்னது செய்வதென்பது தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தான். குழம்பிய மனத்துடன் ஒன்றும் தோன்றாமல் எழுந்து குளித்துச் சாப்பிடச் சென்றான் பட்டாபிராமன்.

சாப்பாடு செல்லவே யில்லை. சீக்கிரமாகவே எழுந்து மீண்டும் ஆபீசுக்குச் செல்லத் தயாரானான். அவன் கண்கள் அடிக்கடி சுவரில் இருந்த கடிகாரத்தை நோக்கின. பத்தரை மணி வரையில் வெளியில் சென்ற இருவரும் திரும்பவில்லை. அதற்குமேல் தனக்குக் காத்திருக்க முடியாதென்ற எண்ணத்துடன் அத்திம்பேர் எப்படியும் ஆபீசுக்கு வருவார். அவருக்கு டெலிபோன் செய்து என்ன நடந்தது என்பதை அறிந்து கொள்ளலாமென்று யோசித்தவனாய் ராஜியிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் கிளம்பிவிட்டான்.

★

சாயந்திரம் வரையில் சாவித்திரியும் அவள் கணவனும் வரவே யில்லை. அலமேலுவுக்கு மிகவும் திருப்தியா யிருந்தது. ஆனால் ராஜிக்கு மட்டும் குற்றமுள்ள நெஞ்சம் குறுகுறுக்குமென்றபடி மனசு வேதனை செய்து கொண்டே யிருந்தது. வந்த அன்றைய தினத்திலிருந்தே சாவித்திரியைத் தன் தாயார் உபத்திரவித்துக் கொண்டிருந்தது அவளுக்குத் தெரியும். ஒவ்வொரு சமயம் தன் தாயுடன் தானும் சேர்ந்து கொண்டு குரோதமாகப் பேசியதை யெல்லாம் எண்ணிப் பார்த்துக் கொண்டாள். சாவித்திரி பட்டாபியிடம் ஒன்றையும் சொல்லமாட்டா ளென்பது அவளுக்குத் தெரியும். ஆனால் கொஞ்ச நாளாகவே பட்டாபிராமன் வீட்டில் நடக்கும் விஷயங்களை யெல்லாம் நன்றாகக் கவனித்துக் கொண்டு வருகிறானென்பதும் அவளுக்குத் தெரிந்திருந்தது. ஆகவே, பயமும் குழப்பமு மடைந்தவளாய்ச் சாயந்திரம் ஆக ஆகக் கவலைப்பட்டவளாகவே உட்கார்ந்திருந்தாள். இந்தச் சமயத்தில் தன் தாயாரிடம்கூட அவளுக்குக் கோபம் வந்தது.

ராஜி சுபாவத்தில் கொஞ்சம் சாது. அவளுடைய தந்தை சிவதாணு ஐயர் மகா அப்பாவி. அடித்தால்கூட அழத் தெரியாதென யாவரும் சொல்லுவார்கள். மனைவி அலமேலுவிடம் தாசானு தாசனாக என்றும் நடப்பார். இல்லாவிட்டால் வீட்டில் குருக்ஷேத்திர யுத்தம் ஆரம்பமாய் விடுமென்பது அவருக்குத் தெரியும். ராஜி, தன் தந்தையைப் போலவே, அலமேலுவிடம் அசாத்திய பயமுடையவளாகையால் எந்த விஷயத்திலும் தாயார் சொன்னதைத்தான் கேட்பாள். அவள் புருஷன் பட்டாபி, டில்லிக்கு மாற்றலாகி வந்ததிலிருந்து ராஜியின் தாயார் எதையாவது சாக்கிட்டு அடிக்கடி டில்லிக்கு வந்து மாசக் கணக்கில் முகாம் போட்டு விடுவாள். பெண்ணுக்கு உடம்பு சரியில்லை யென்று தை மாசத்தில் டில்லிக்கு வந்தவள், சித்திரை பிறந்தும்கூட, ஊர் போக மனமின்றி டில்லியிலேயே இருந்தாள். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் சாவித்திரியும் அவள் புருஷனும் எக்கச்சக்கமாக அங்கே வந்து அகப்பட்டுக் கொண்டார்கள்.

★

இரவு எட்டரை மணிக்குமேல் வீட்டுக்குத் தனியாக வந்து சேர்ந்தான் பட்டாபி. அலமேலு வீட்டிலில்லை. பக்கத்து வீட்டில் இருந்தவர்களிடம் வம்பளக்கப் போயிருந்தாள். குழந்தையைத் தூங்க வைத்து விட்டுக் கவலையுடன் கணவனுக்காகக் காத்திருந்தாள் ராஜி. ஜிவு ஜிவென்

திருந்த பட்டாபியின் முகத்தைக் கண்டதும் வாஸ்தவமாகவே நடுநடுங்கிப் பயந்து போய் விட்டாள் அவள்.

சட்டை முதலியவைகளை யெல்லாம் கழற்றி ஆணியில் மாட்டிவிட்டு அங்கே கிடந்த கட்டி லின்மீது உட்கார்ந்து கொண்டான்.

"ராஜி! இங்கே வா;—வீட்டில் என்ன நடந்தது!—சாவித்திரியும் அத்திம்பேரும் ஓட்டலில் வாடகைக்கு அறை எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள்; — இவ்வளவு திடுதிப்பென்று அவர்கள் புறப்பட்டுப் போக என்ன காரணம்?" என்று அவளை நோக்கியபடியே ஒரு நிதுசாகக் கேட்டான் பட்டாபி.

"எனக்கு......எனக் கொன்றுமே தெரியாது" என்று தடுமாற்றத்துடன் பதிலளித்தாள் ராஜி. அடுத்த க்ஷணமே அவள் கண்ணில் நீர் ததும்பி யது. இதைக் கவனித்த பட்டாபியின் முகம் இன்னும் கடினமாய் விட்டது.

இரும்பு போன்ற குரலில்,—"ஓகோ! அழுகை வருகிறதா? இரு; இப்படி வா! உன்னை ஒன்றே யொன்று கேட்கிறேன்;—உன் தம்பி கோபு இருக்கிறானில்லையா! — நாளைக்கு அவனுக்குக் கல்யாணமாகிப் பெண்டாட்டி வந்தாளென்று வைத்துக் கொள். அப்பொழுது நீயும் நானு மாக அங்கே போய் அவர்கள் வீட்டில் தங்கும் படியாக நேரிட்டு நீ என் தமக்கையிடம் நடந்து கொண்டதுபோல், கோபுவின் மனைவி உன்னிடம் நடந்து கொண்டால் உனக்கு எப்படியிருக்கும்! இதை யோசித்துப் பார்த்து விட்டு அப்புறம் அழு!—" என்று ஆத்திரத்துடன் கூறிவிட்டு எழுந்து மொட்டை மாடிக்குப் போய் விட்டான்.

ராஜிக்கு அவனிடம் ஒன்றுமே கேட்கத் தைரியமில்லை.

தாயார் வந்தவுடன் அவனிடம் விஷயத்தை மெதுவாகச் சொன்னான்.

"எனக்கு அப்பவே தெரியுமே! உன் நாத்த னார் வந்தால் உடனேயே சண்டையைக் கிளப்பி விடுவாளென்று!—கடைசியில் எல்லாம் என்னால் தான் வந்ததென்று உன் அகமுடையானும் சொல்லுவார்; நான் நாளைக்கே ஊருக்குக் கிளம்பு றேண்டியம்மா! என்னாலேயாகாது, ஊருக்கெல் லாம் உழைச்சுப்போட; உன் நாத்தனாரையும் அவள் புருஷனையும் அழைச்சுண்டு வந்து வச்சுக் குங்கோ; என்னவோ, உனக்கு உடம்பு சரியில்லே என்று கேட்டப்போ மனசு கேட்கல்லே. அதற்கா கப் புறப்பட்டு வந்தேன். ஊரிலே வீடும் வாசலும் என்னமாகிக் கிடக்கோ! அருமை தெரிகிறவனுக் கல்லவா உழைக்கணும்! பொல்லாதவர்களுக்கு எதற்காக உழைக்க வேண்டும்!" என்று மாடியி லிருக்கும் பட்டாபிக்குக் கேட்கும்படியாக உரத் துக் கூறியபடியே தன்னுடைய துணிமணிகளை யெல்லாம் வாரி மூட்டை கட்டலானாள்.

ராஜி அவளிடமும் ஒன்றும் பதில் பேசவில்லை. பட்டினியாகவே போய்ப் படுத்துக் கொண்டாள். நெடு நேரம் கழித்து மாடியி லிருந்து இறங்கி வந்த பட்டாபியும் மௌனமாக உறங்கப் போய் விட்டான். ராஜி மெதுவாக அவனிடம் போய்ச் சாப்பிட வரவில்லையா என்று கேட்டதற்கு அவளை விழித்துப் பார்த்து விட்டு மறுபக்கம் திரும்பிக் கொண்டான்.

அன்றைய தினம் வாஸ்தவமாகவே ராஜி பயந்து போய் விட்டாள். அவளுக்குத் தன் தாயார் பேரில் கோபம் கோபமாக வந்தது. கொஞ்சங்கூட முன் யோசனை யில்லாமல் சாவித் திரியைத் தன் தாயார் வாயில் வந்தபடியெல்லாம் பேசிய காரணம்தான் அவர்களிருவரும் கோபித் துக் கொண்டு வீட்டிலிருந்து கிளம்பி விட்டார்க ளென்பது அவளுக்கு நன்றாகத் தெரிந்துவிட்டது. இது பற்றிப் பட்டாபிராமன் என்ன செய்வானோ வென்று அவளுக்கு உள்ளூறப் பெரும் திகில் உண்டாகி விட்டது.

மறுதினம் ரயிலுக்குக் கிளம்பி விட்டாள் அல மேலு. பட்டாபியிடம் போகும் பொழுதுகூட அவன் ஒரு வார்த்தை சொல்லிக் கொள்ளவில்லை.

• • •

டெலிபோனில் விஷயத்தைத் தெரிவித்தான் அவன் சாவித்திரியிடம். "யாருக்கு! ராஜிக்கா! மயக்கம் போட்டா விழுந்தாள்! என்ன ஆகி விட்டது! இதோ அத்திம்பேரிடம் தெரிவித்து விட்டு வந்துவிடுகிறேன்" என்று படபடப்புடன் பதில் கூறிவிட்டுப் 'போனை'க் கீழே வைத்தாள் சாவித்திரி.

அரை மணி நேரத்துக்கெல்லாம் ஆஸ்பத்திரி யில் ராஜியின் படுக்கையண்டை இருந்தாள் சாவித்திரி. மிகவும் அன்புடனும் வாஞ்சையுட னும் அவளுக்கு வேண்டிய பணிவிடைகளை யெல்லாம் செய்தாள். வீட்டிலும் குழந்தையை மிகவும் அக்கறையுடன் பார்த்துக் கொண்டாள். நடந்து போன விஷயங்களை யெல்லாம் அவள் சிறிதும் நினைவில் வைத்துக் கொண்டதாகவே தெரியவில்லை. அவள் புருஷனும் அவளைப் போலவே மிகவும் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டார். ஐந்தாறு நாட்களில் உடம்பு தேறி வீட்டுக்கு வந்து சேர்ந்தாள் ராஜி.

சாவித்திரியின் பெருந் தன்மையைப் பற்றி மனதிற்குள்ளாகவே வியப்படைந்தாள் ராஜி. அதே சமயத்தில் தன்னுடைய அற்பத்தனமான நடத்தை அவளுக்கு மிகவும் அவமானத்தை உண்டாக்கி விட்டது.

மீண்டும் ஒருவாரம் சென்றது. ராஜி நன்றாக நடமாட ஆரம்பித்து விட்டாள். அதுவரையில் வீட்டு வேலை முழுவதையும் சாவித்திரியே கவனித் துக் கொண்டாள்.

"பட்டாபி! சாயந்திரம் நான் சாவித்திரியை அழைத்துக் கொண்டு போகிறேன்" என்று தெரிவித்தார் அவள் அத்திம்பேர்.

"எங்கே!" என்று வியப்புடன் கேட்டான் பட்டாபிராமன்.

"ஹோட்டல் அறைக்குத்தான்; இங்கே வந்து பதினைந்து நாளாகி விட்டதே!" என்றார் அவர்.

"இன்னமும் உங்கள் கோபம் தணியவில்லையா!" என்று மனத்தாங்கலுடன் கேட்டான் பட்டாபி.

கதவண்டை நின்ற சாவித்திரி, திரும்பி ராஜியைப் பார்த்தாள். அவள் கண்களில் நீர் ததும்பியது.

சட்டென்று தன் கணவனை நோக்கி,—"நமக்கு இடம் கிடைக்கு மட்டும் இங்கேயே யிருந்து விட்டால் போச்சு. ராஜிக்கும் ஒத்தாசையா யிருக்கும்" என்றாள்.

"சரி, உன்னிஷ்டம்" என்றார் அவர்.

அன்றிரவு தனியா யிருக்கையில், "என்னவானு லும் சாவித்திரியின் பெருந்தன்மை ஒருவருக்கும் வராது" என்று தன் மனைவியிடம் கூறினான் பட்டாபிராமன்.

"அத்திம்பேர் மட்டுமென்ன! அவருக்கும் தங்க மான குணம்" என்றாள் ராஜி. அவள் குரலில் விசுவாசம் நிரம்பி யிருந்தது.

# பிரஷால் தேய்ப்பதால் கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஈறுகளைப் பலப்படுத்துகிறது




## இதோ! குளோரோபில்* டூத் பேஸ்டின் பூரண நன்மைகள் அடங்கிய புதிய, விசேஷ கால்கேட் சூத்திரம்!

குளோரோபிலின் நன்மைகளை பத்திரமான, ரஞ்சிதமான உருவில் தருகிறது கால்கேட் சூத்திரம்....கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் துரிதமாக, திருத்தமாகச் செயலாற்றுகிறது...அது தரும் சுத்தம் மணிக்கணக்காக நீடிக்கும்!

...பலமான ஈறுகள் புதிய, இனிய சுவாசம் பெற...சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை உபயோகிக்கவும். சிறந்த பற்பசைகளைத் தயாரிக்கும் உலகிலேயே மிகப் பெரிய ஸ்தாபனத்தின் உன்னத குளோரோபில் டூத் பேஸ்ட்.

**பாக்டீரியாவை ஒழிக்கிறது!**

எனுமலை அறிக்கும் தீய அமிலங்களையும் ... அவற்றைத் தோற்றுவிக்கும் பாக்டீரியாவையும் குறைக்கிறது.

**ஈறுகளைப் பலப்படுத்துகிறது!**

குளோரோபிலின் நன்மைகளைப் பயன்படுத்தி, ஈறுகளைப் பலப்படுத்த கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் உதவுகிறது.




* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது

**புதிய பச்சை டூத்பேஸ்ட் பரீட்சித்து உத்தரவாதம் அளிப்பது கால்கேட்**

# தெய்வப் பிறவி

ரா. பாலகிருஷ்ணன்

அன்றையத் தபால்களைப் பரிசீலனை செய்து கொண்டே வந்த ராஜகோபாலன் தன் தாயாரிடமிருந்து வந்திருந்த கடிதத்தைக் கண்டதும் துணுக்குற்றான். துலர் ஸ்நானத்தை முன்னிட்டு ஒரு வாரத்துக்கு முன்புதான் அவள் கிராமத்துக்குச் சென்றிருந்தாள். 'சௌக்கியமாக வந்து சேர்ந்தேன்' என்று கடிதம் வந்து இன்னும் இரண்டு நாட்கள் ஆகவில்லை; அதற்குள் இன்னொரு கடிதம் என்றதும் அவனுக்கு விளங்கவேயில்லை. பரபரப்புடன் உறையைக் கிழித்து படிக்கலானான் :

“அன்புள்ள ராஜூவுக்கு

இன்று உன் தகப்பனாரிடமிருந்து ஒரு கடிதம் வந்திருக்கிறது. தகப்பனாரிடமிருந்து கடிதம் என்றதும் உனக்கு ஆச்சரியமாகத் தானிருக்கும். அதில் அடங்கியுள்ள செய்தியை அறிந்து கொண்டால் உன்னால் நம்பக்கூட முடியாது. எந்த முகத்துடன் இப்படி எழுதத் துணிந்தார் என்றுதான் நீ நினைப்பாய். அவருடைய இரண்டாவது மனைவி இறந்து போய் இரண்டு வருடங்கள் ஆகிறதாம். இளையாள் மூலம் அவருக்கு இரண்டு பெண் குழந்தைகள் இருக்கின்றனவாம். மூத்த பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாகவிருப்பதால் தாயின் ஸ்தானத்தை நான் இருந்து கல்யாணத்தை நிறைவேற்றி வைக்க வேண்டுமாம்.

அவருடைய வேண்டுகோளுக்கு இணங்கி நான் போகத் தீர்மானித்து விட்டேன், ராஜூ! இந்த என்னுடைய முடிவு உனக்குத் திருப்தியளிக்காது என்பது எனக்குத் தெரியும். என்னிடம் எல்லையற்ற கோபம்கூட வரும், உனக்கு. நான் போகாவிட்டால் அந்தப் பெண்ணுக்குக் கல்யாணம் நடப்பதே சந்தேகந்தான். அதை உத்தேசித்துத்தான் நான் அவர் இஷ்டப்படி நடக்கத் தீர்மானித்து விட்டேன். நடந்து போன விஷயங்களைப் பாராட்டாமல் நீ பெருந்தன்மையுடன் என் முடிவை அங்கீகரிப்பாய் என்று நம்புகிறேன்.

அன்புள்ள அம்மா”

இதைப் படித்து முடித்ததும் ராஜகோபாலனுக்கு உடலெல்லாம் நெருப்பாய்த் தகிப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. இருபது வருடங்களுக்கு மேல் 'வாழாதவள்' என்ற பட்டத்துடன் நரக வேதனையை அநுபவித்து வந்தது போதாதென்று இப்போது தன் தாயாருக்கு மீண்டும் வாழ்வையளிக்க முன் வந்திருக்கும் தகப்பனாரின் 'தாராள' மனப்பான்மையை எண்ணிய போது, அவர் தன் தாய்க்கும் தனக்கும் இழைத்த கொடுமையும் அநீதியும் அவன் முன்பு விசுவரூபம் எடுத்தன.

அம்மா இதற்கு இணங்கி விட்டாளே! எப்படித்தான் மனம் இடங் கொடுத்ததோ! எவ்வளவுதான் நீர யோசித்தும் அம்மாவின் முடிவை ஏற்றுக் கொள்ள முடியவில்லை, அவனால். எப்படியும் தன் தாயாரின் மனத்தை மாற்றி விடுவது என்ற உறுதியுடன் அன்றிரவே கிராமத்துக்குக் கிளம்புவதாக முடிவு செய்தான் ராஜகோபாலன்.

பாசஞ்சர் வண்டியின் நிதானமான வேகம் அவன் சிந்தனைக்குத் தூபம் போட்டது. நெற்றியில் அரும்பிய வியர்வையைத் துடைத்துக் கொண்ட போது புருவத்துக்கு மேலுள்ள ஒரு தழும்பைச் சுட்டு விரல் ஸ்பரிசித்தது. நினைத்தால் நெஞ்சு வெடிக்கும்படியான ஒரு சம்பவம் அவன் மனத்திரையில் விரிந்தது.

அப்போது அவனுக்கு ஏழு வயதிருக்கும். ஆரம்பப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தான். அந்த வயதுக்கேற்ற வளர்ச்சியும் குறு குறுப்பான முகக் களையுமிருந்தன அவனிடம். தன் தாயின் சுபாவத்தையொட்டி அடக்க வொடுக்கமாகவும் இதர பிள்ளைகளுடன் வீண் வம்போ சண்டையோ எதிலும் இறங்காமல் ஒதுங்கியே இருப்பான். அந்தச் சிறிய வயதில் அவனுக்கு இயற்கையாக அமைந்த பண்புக்கு ஒரு சோதனை போல் நிகழ்ந்தது அந்தச் சம்பவம்.

பள்ளிக்கூடம் விட்டதும் நேரே தன் வீட்டை நோக்கிக் கிளம்பினான் ராஜூ. அவன் பின்னால் கும்மாள மிட்டுக் கொண்டு வரும் கோஷ்டியில் அவன் கலந்து கொள்ளவில்லை. தன்னையும் தன் சகாக்களையும் அவன் வெகுவாக அலட்சியம் செய்கிறான் என்று சோனிக்கு ராஜூவிடம் வெகு நாட்களாகவே ஆத்திரம்.

“ஏண்டா, ராஜூ! விளையாடலாம் வாயேன். இப்பவே வீட்டுக்குப் போகணுமா!” என்றான் சோனி. வற்றலாக இருந்த அவனுக்குச் சீனு என்பதுதான் நிஜப் பெயர். சோனி என்று அவனுடைய தோழர்கள் காரணப் பெயர் சூட்டியே தான் அழைப்பது வழக்கம்.

“நாழி கழித்துப் போனால் அவன் அப்பா அடிப்பாரோ என்னவோ! அதனால்தான் அவன் நம்மோடு விளையாடவே வருகிறதில்லை” என்றான் இன்னொரு பையன்.

ராஜூ பதிலே பேசாமல் நடந்து கொண்டிருந்தான். 'அப்பா' என்ற சொல் அவன் மனத்தில் எத்தனை ஆசைகளைத் தோற்றுவித்தனவோ!

“அப்பாவா! அவனுக்கு அப்பா எங்கேடா இருக்கிறார்!” என்றான் சோனி. பிள்ளைகள் எல்லோரும் 'கொல்'லென்று சிரித்தனர்.

“என்னடா சிரிப்பு! ராஜூவையேதான் கேள், அவனுக்கு அப்பா இருக்கிறாரா வென்று!” என்றான் சோனி. ராஜூவுக்கு ஆத்திரம் பற்றியது.

“டேய், சோனி! உன் குறும்புத்தனத்தை என்னிடமா காட்டுகிறாய்! எனக்கு அப்பா இல்லேன்னு யார் சொன்னா!” என்றான் ராஜூ ரோசத்துடன்.

“கிட்டுதான் சொன்னான். அப்பா இருந்தால், அவர் பேர் என்னவாம்!” என்றான் சோனி.

“என் அப்பா தாசில்தார்!” என்று பளிச்சென்று பதில் கூறிய ராஜூவைப் பார்த்துப் பையன்கள் கல, கல வென்று சிரித்தார்கள். அவர்கள் சிரித்ததன் காரணம் விளங்காமல் விழித்தான் ராஜூ.

“டேய்! உன் அப்பா பேர் என்னடான்னா, தாசில்தார் கலெக்டர்னு அளக்கிறாயே! உன் அப்பா பேர் தாசில்தாரா!” என்றான் சோனிப் பயல் கேலியாக.

ராஜூவுக்கு இது பொறுக்கவில்லை. பிஞ்சு உள்ளமாயிருந்தாலும் உணர்ச்சி எங்கே போயிற்று! இள ரத்தம்தானே எளிதில் சூடேறுகிறது!

“ஏய்! யாரடா கதை விடுகிறவன்! என் அப்பா தாசில்தாரா, இல்லையான்னு எங்க அம்மாவையே வேணுமானால் கேட்டுப்பார்!” என்று ஆக்ரோஷத்துடன் கையை ஆட்டிப் பேசினான்

ராஜு. அவன் உடலின் உறுதி உள்ளத்திலும் இருந்தது. அது பேச்சின் அழுத்தத்திலே கலந்து வெளிப்பட்டது.

"ஓஹோ! இவன் அப்பா பேர் இவனுக்கே தெரியலே! அம்மாவைக் கேளு, பாட்டியைக் கேளுன்னு சொல்லி மழுப்பறான்! அவனுக்கு அப்பாவே இல்லேன்னு கிட்டு சொன்னது சரி தான் போலே இருக்கு!" என்று சோனி தன் சகாக்களிடம் கூறி நகைத்த போது, அந்தக் கேலியைச் சகித்துக் கொண்டு வாளாவிருக்க முடியவில்லை அந்தச் சிறுவனால்.

"என்ன சொன்னே! எனக்கா அப்பா இல்லே!" என்று கேட்டுக் கொண்டே சோனியின் இடது தோள்பட்டைக் கருகில் தன் முஷ்டியின் முழு பலத்தையும் கொண்டு தாக்கினான். சோனி ஏதோ திட்டிக் கொண்டே சுருண்டு விழுந்தான். ஆனால் அருகிலிருந்த கிட்டு சோனிக்காகப் பரிந்து கொண்டு தன் சகாக்களுடன் அவன்மீது பாய்ந்தான். என்னதான் பலசாலி என்றாலும் பத்துப் பன்னிரண்டு பேர் ஒரே சமயத்தில் தாக்கவே, அந்தச் சிறுவனால் நிலைமையைச் சமாளிக்க முடியவில்லை. அடிமேல் அடி விழுந்தது. தகப்பன் பெயரைச் சொல்லத் தெரியாத அந்தச் சிறுவனை நையப் புடைத்துக் கீழே தள்ளி விட்டு, 'இது போதும்' என்ற மனோபாவத்துடன் சிறுவர்கள் வீடு திரும்பினர்.

அவன் அவமானத்தால் குன்றி விட்டான். அடிபட்டதால் ஏற்பட்ட வலிகூட அவனுக்கு ஒரு பொருட்டாக இல்லை. உள்ளத்தில் விழுந்த அடி தான் அவனைப் பெரிதும் வருத்தியது. உண்மையில் அம்மா தன்னை ஏமாற்றி வந்திருக்கிறாளா, அதுவரையில்! நிஜமாகவே தனக்கு அப்பா ஒருவர் உயிரோடிருந்தால் அவரை ஏன் காண முடியவில்லை! அம்மா தானே தனக்குச் சட்டை, புத்தகம் தின்பண்டங்கள் எல்லாம் வாங்கித் தருகிறாள்! கிட்டு தன் அப்பாவின் கையைப் பிடித்துக்கொண்டு கடைக்குப் போகிறானே! என் அப்பா என்னை ஒரு நாளாவது அழைத்துக் கொண்டு ஏன் போனதில்லை! அப்பா எப்படித்தானிருப்பார்! எங்கே இருக்கிறார்! — என்றெல்லாம் ஆயிரமாயிரம் கேள்விகள் அந்த இளம் உள்ளத்திலே குமுறி யெழுந்தன. அவன் ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவன் போல் எழுந்திருக்க முயன்றான். தரையில் முழங்கையை ஊன்றியதும் சுரீரென்று வலித்தது. உற்றுப் பார்த்தவுடன் முழங்கையிலிருந்து இரத்தம் கசிந்து கொண்டிருந்ததைக் கண்டான். உடலெல்லாம் வலி யெடுத்தது. சட்டை ஒரு புறம் கிழிந்து விட்டது. சுருள் சுருளான அவன் தலைமயிர் புழுதி படிந்திருந்தது. அவனுக்கு எதுவும் லட்சியமாயில்லை. மெதுவாக எழுந்து, மூலைக் கொன்றாகச் சிதறிக் கிடந்த தன் புத்தகங்களை எடுத்துக் கொண்டு வீட்டை நோக்கி நடந்தான், கால்கள் தள்ளாட.



தன் பிள்ளை வீடு திரும்பிய கோலத்தைக் கண்டு தாய் பதறி விட்டாள். "என்னடா, கண்ணே! என்ன நடந்தது!" என்று நாத் தழுதழுக்கக் கேட்டாள். அவன் நெற்றிப் பொட்டிலிருந்து கசிந்த ரத்தம் அவள் உள்ளத்தைக் கலக்கியது. பையனோ வாய் பேசாமல் நின்றான்.

"ராஜா! சொல்லேன்! என்னதான் நடந்தது! எங்கேயாவது விழுந்து விட்டாயா! யாராவது அடித்து விட்டார்களா! அப்படி வலுச் சண்டைக்குக் கூடப் போக மாட்டாயே, நீ!" என்று கேட்டு, நெற்றியில் வடிந்த ரத்தத்தைத் துடைக்கப் போனாள், அவள். பையன் கோபத்துடன் தாயின் கையை உதறிவிட்டு, "அம்மா! என் அப்பா எங்கே! அவர் பெயர் என்ன! அவரை நான் இப்போதே பார்க்க வேண்டும்" என்றான்.

அவள் ஏனோ பதிலே சொல்லவில்லை. அவள் இதயமாகிற எரிமலையில் பொருக்கெடுத்த அக்கினிக் குழம்பு கண்ணீராக வெளிப்பட்டது.

"அம்மா! சொல்ல மாட்டாயா! அப்படியானா அந்தப் போக்கிரி சொன்னது நிஜந்தானா!" என்று முனகினான் பையன்.

"எந்தப் போக்கிரி! என்ன சொன்னான்!" என்றாள் அவள் பதட்டத்துடன்.

"எனக்கு அப்பாவே இல்லையாமே!" என்று கேட்டவன், மேலே எதுவும் பேச முடியாமல் விக்கி விக்கி அழுதான்.

அவளுக்கு விஷயம் ஒருவாறு விளங்கியது. ஆனால், அவனுக்குப் பதில் சொல்ல வேண்டுமே! என்ன சொல்லுவது! என்ன சொன்னால் அவனுக்குப் புரியும்! அப்பாவின் பெயரை வேண்டுமானால் சொல்லலாம். மற்ற விஷயங்களை அவனுக்குப் புரியும்படியாகச் சொல்லுவது எப்படி! தெருக் கோடியில் தமுக்கு அடிக்கும் சத்தம் கேட்டது. புறம்போக்கு நிலத்திலிருந்து பூவரச மரத்தைப் புரையோடிவிட்ட காரணத்தால்வெட்டி ஏலம் போடப் போவதாக



அறிவித்தது, தமக்கு. புரையோடிவிட்ட பூவரச மரத்துடன் தன்னையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டாள், அவள். சிலை போல் நின்றாள் ஒரு கணம். தனிமரம்; புரையோடி விட்டது; வெட்டிச் சாய்த்து விட்டார்கள். புரையோடிக் கிடந்த சமூகத்தைச் சீர்ப்படுத்த யார், என்ன செய்தார்கள்! இதெல்லாம் அந்தச் சிறுவனுக்கு எப்படி விளங்கும்!

கண்ணெதிரில், அடிபட்டு உள்ளம் ஒடிந்து நிற்கும் தன் மகனின் ஒரு கேள்விக்கு விடை சொல்லி அவன் உடைந்த உள்ளத்தை ஒட்ட வைக்கத் தெரியாமல் செயலற்றுக் கண்ணீர் வடித்தாள் அவள்.

* * *

கிராமத்துக் கணக்குப் பிள்ளை கணபதி அய்யரின் ஒரே பெண் ஜானகி. அவர் கிராமத்தினரின் பூரணமான அன்புக்குப் பாத்திரமாயிருந்ததால், வேலிக்கு ஒரு கலம் நெல் வீதம் கிடைத்த மாமூல் தவிர, நாட்கிழமைகளில் இலை, காய் கறி முதலிய சாமான்களுக்கும் குறைவில்லை. சம்பளம் – மிகவும் சொல்பமான தொகைதான். அப்படியே மிச்சமாகும். ஜானகியின் கல்யாணத்துக்காக அவளுக்கு எட்டு வயது நிரம்பும் முன்னரே குருவி போல் சிறுகச் சிறுக இரண்டாயிரம் ரூபாய் வரை சேர்த்திருந்தார். பெண்ணை நல்ல இடத்தில் கொடுத்து விட வேண்டும் என்ற ஒரே குறிதான், அவருக்கு. பெண்ணைப் பெற்ற எந்தத் தந்தைக்கும் இயல்பாக உள்ள ஆசைதான்! மூன்று வருடங்கள் எங்கெல்லாமோ சல்லடை போட்டுக் கடைசியில் ஒருநல்ல வரனைத் தேர்ந்தெடுத்தார். பையனுக்கு 'ரெவின்யூ' இலாகாவில் குமாஸ்தா உத்தியோகம். கண்ணுக்கு லட்சணமாயிருந்தான். வயதும் இருபத்தைந்துதா னிருக்கும். இத்தகைய வரன் கிடைத்ததில் கணபதி அய்யரைப்போலவே அவர் மனைவிக்கும் மகளுக்கும்கூடத் திருப்தி!




ஆயிரம் ரூபாய் பண்ணையாரிடம் கடன் வாங்கிக் கல்யாணத்தைச் சிறப்பாகச் சம்பந்திகளுக்குத் திருப்தியளிக்கும் வகையில் செய்து முடித்தார் கணபதி அய்யர். தன் வாழ்வின் ஒரே லட்சியம் நிறைவேறி விட்டது என்ற ஆத்ம திருப்தி யேற்பட்டது அவருக்கு. பண்ணையாரிடம் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுத்து விட வேண்டியதுதான் பாக்கி. அதன் பிறகு அவருக்குக் கவலை ஏது!

மனிதனுக்கு நிம்மதி யென்பது நிரந்தரமாக ஏற்படுமா! அப்படி ஏற்பட்டால் அது எப்போது! வாழ்வு முடியும் போதுதான் போலும்! 'நல்ல இடம்' என்று எதைக் குறித்துப் பெருமைப் பட்டாரோ, அதே இடம்-ஜானகியின் புக்ககம் எவ்வளவு பொல்லாத இடம் என்பது காலப் போக்கில்தான் விளங்கியது. ரெவின்யூ இலாக்காவில் ஒரு குமாஸ்தா உத்தியோகம் வகித்த மாப்பிள்ளைப் பையன் தன்னை ஒரு 'ரெவின்யூ போர்ட் மெம்பர்' என்று நினைத்திருந்தான் போலும்! அவ்வளவு கர்வம், அவனுக்கு. கல்யாணமான பிறகு ஒரு வருடம் வரையில் ஜானகியை வீட்டுக்கு அழைக்கவே இல்லை, அவன் புக்ககத்தினர். ஜானகி கறுப்பு என்று அறவே வெறுத்தான், அவன்.

நாளடைவில் சம்பந்திகளின் ராட்சத குணமும் வெளிப்பட்டது. முடிந்த வரையில் கணபதி அய்யரிடமிருந்து பணம் பறிப்பதிலேயே கண்ணும் கருத்துமா யிருந்தனர். இடையில் அவன் ஒரு பரீட்சையில் தேறி ரிவின்யூ இன்ஸ்பெக்டராக நியமனம் பெற்றான். 'ஆயிரம் ரூபாயுடன் பெண்ணைக் கொண்டு வந்து விடவும்' என்று கடிதம் வந்ததும் கணபதி அய்யர் பாயும் படுக்கையுமாக ஆனார். அந்த இடிக்குத் தப்பவேயில்லை, அவர்.

கிராமத்தில் அவருக்கிருந்த சொத்து மூன்று நன்செய் நிலமும் ஒரு சிறு வீடும்தான். கலம் ஒன்றரை ரூபாய்க்குக் கேட்பாரற்றுக் கிடந்த காலம் அது. நிலத்தின் விலையைப் பற்றிக் கேட்க வேண்டுமா! இருபோகம் சாகுபடி செய்யக் கூடிய நிலம் உயர்ந்தால் குழி மூன்று ரூபாய்க்குப் போகும்! எப்படியாவது தன் பெண் கண்ணைக் கசக்காமல் வாழ்ந்தால் போதும் என்றெண்ணிய அவள் தாய் நிலத்தைப் பண்ணையாரிடம் விற்று, அந்தப் பணத்தில் பாதியை ஏற்கெனவேயே அவரிடம் வாங்கியிருந்த கடனுக்கு ஈடு செய்து விட்டு, எஞ்சிய தொகையுடன் ஜானகியைப் புக்ககத்தில் கொண்டு போய்ச் சேர்த்தாள்.

கணவனின் அன்பை ஒரு சிறிதும் உணர முடியாமல் ஒரு வருடம் வாழாமல் வாழ்ந்தாள் ஜானகி. அவள் கறுப்பு என்று அவன் எவ்வளவு உதாசீனம் செய்தான் ஜானகியை! கணவனே அவ்வளவு கொடூரமாக நடந்தபோது, மற்றவர்களைப் பற்றிக் கேட்பானேன்! சொல்லொணாத் துயரத்தை அநுபவித்தாள் ஜானகி. இரண்டு வருடங்கள் நரகத்தில் உழன்று விட்டு, ஆறுமாதக் கர்ப்பிணியாகப் பிறந்த வீடு திரும்பினாள், ஜானகி. பிறந்த வீட்டில் 'பசை' இருந்திருந்தால், நல்ல நிலைமையிலுள்ள ஒரு தம்பி அல்லது அண்ணனின் ஆதரவு மட்டும் இருந்திருந்தால், ஜானகியை அவர்களிடம் அந்த ஒரு வருடம் கூட விட்டு வைத்திருக்க மாட்டார்கள். ஆனால் ஜானகிக்குத் தான் ஏழைத் தாயாரைத் தவிர வேறு யாருமே இல்லையே! அவளுடைய அநாதரவான நிலைமையை உணர்ந்துதானே அவள் மாமனாரும் மாமியாரும் அவ்வளவு சித்திரவதைக்குள்ளாக்கினர், அவளை! வளைகாப்பு நடந்தது.

சீமந்தம் செய்வதற்கு இன்னின்ன சீர் வகைகள் தேவை என்று ஒரு பெரிய பட்டியலே அனுப்பியிருந்தார், அவன் மாமனார். இந்தக் கடிதம் ஜானகியின் தாயாரை விழுங்கி விட்டது. சீமந்தம் நடைபெறவில்லை. ஜானகியும் அதற்குப் பின் புக்ககம் செல்லவேயில்லை. லட்சணமான ஆண் குழந்தை பிறந்தது, அவளுக்கு. அந்தக் குழந்தையின் முகத்திற்காவது தன் கணவன் இரக்கம் காட்ட மாட்டானா என்று ஏங்கிக் கிடந்தாள் ஜானகி. அவளுக்கு விடிந்தால்தானே!

அவள் பிரசவத்துக்காகப் பிறந்தகம் சென்றிருந்த போது, அவள் கணவன் மறு விவாகம் செய்து கொண்டு விட்டான்! தனக்கு ஏற்கெனவேயே விவாகமாகி யிருந்த உண்மையை மறைத்து, திருப்பதிக்குச் சென்று காதும் காதும் வைத்தாற்போல ரகசியமாய் முடித்து விட்டான், காரியத்தை. ஆண்டவன் சன்னிதியில் எந்த அக்கிரமத்துக்கும் மன்னிப்பு உண்டு என்று அவன் நினைத்தானோ, என்னவோ!

பத்து, இருபது வருடங்களுக்கு முன்பு இருந்த நிலைமை அது. இது போன்ற கொடுமைகள் சர்வ சாதாரணம்! அதிலும், பெண்ணைக் கொடுத்தவனுக்குக் கை சளைத்து விட்டால் கேட்கவே வேண்டியதில்லை! பராபரியாக இந்தச் செய்தி காதில் விழுந்தபோது ஜானகி புழுவாய்த் துடித்தாள்; புலம்பினாள். குழந்தையின் முகத்தைப் பார்த்து, மலைபோல் வந்த வினையைச் சகித்துக் கொண்டு குழந்தைக்காகவே உயிர் வாழ்ந்தாள்.

பண்ணையாரின் மனைவிக்கு ஜானகியிடத்தில் விசேஷ பிரியம். அந்த அன்பின் அறிகுறியாகவே ஜானகியின் ஜீவனாம்ச வழக்கில் தன் குடும்ப வக்கீலை இனமாக ஆஜராக ஏற்பாடு செய்தாள். ஏன், ஜீவனாம்சத்துக்கு வழக்குப் போடும்படி தூண்டியதே அவள்தான்.

"கோர்ட்டில் போய் நிற்க வேண்டுமா, மாமி! மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுகிறான். ஏதோ உங்களைப் போல் தாராள மனசு உள்ள சிலருக்குச் சில்லறை வேலைகள் செய்து கொடுத்து என் வயிற்றைக் கழுவிக் கொள்ளுகிறேன். கொஞ்சம் எழுதப் படிக்கத் தெரிந்தால் பிறகு தாத்தாவின் உத்தியோகத்தை இவன் பார்க்கட்டுமே! இந்த நிலைமையில் நான் வேறு என்ன செய்வது!" என்றாள் விரக்தியுடன் ஜானகி.

ஆனால், பண்ணையாரின் மனைவி உலகம் தெரிந்தவள். அவளுக்கு ஜானகியின் வேதாந்தம் கவைக்கு உதவாதது என்பது தெரிந்திருந்தது. "ஜானகி! உன் குழந்தையின் படிப்பை உத்தேசித்தாவது நீ இதைச் செய்யத்தான் வேண்டும். தகப்பன் கையாலாகாதவனா, என்ன! பெற்ற பிள்ளைக்கு இல்லாத பாத்தியம் உண்டா! உன்னைத்தான் நடுத்தெருவில் நிறுத்தி விட்டான், பாவி! குழந்தையின் எதிர் காலத்தையும் ஏன் பாழடிக்க வேண்டும்!" என்று வற்புறுத்தவே ஜானகிக்கு அதைத் தட்டிப் பேச முடியாமற் போய் விட்டது. வழக்கு சுருக்கமாக முடிந்து விட்டது. மாதம் முப்பது ரூபாய் ஜானகிக்கு ஜீவனாம்சம் தீர்ப்பாகியது.

ஜானகியின் புண்பட்ட உள்ளத்துக்கு ஆறுதலளிக்கும் வகையில் அவள் பிள்ளை ராஜகோபாலன் படிப்பில் மிகவும் சூடிகையா யிருந்தான். ஸ்கூல் பைனல் வகுப்பில் மிகவும் போற்றத் தக்கவாறு தேர்ச்சி பெற்றான். அவனுக்கு ஒரு உத்தியோகம் கிடைத்து விட்டால் தன் வாழ்வின் லட்சியமே நிறைவேறியதாக எண்ணினாள், ஜானகி.

பண்ணையாரின் அபிப்பிராயம் இதற்கு மாறாயிருந்தது. ராஜகோபாலனின் மேதையை நன்குணர்ந்திருந்த அவர், அவனை மேலே படிக்க வைப்பதாகத் திட்டமிட்டார். ஜானகிக்கு இதில் அவ்வளவாக இஷ்டமில்லை. தன் குடும்பத்துக்காகப் பண்ணையார் எவ்வளவோ ஒத்தாசைகள் செய்து வந்திருக்கிறார். அவரை மேலும் அனாவசியமாகத் தொந்தரவு செய்வானேன் என்பது அவள் கருத்து. அதைப் பண்ணையாரின் மனைவியிடமும் வெளியிட்டாள். அதற்கு அவள், "எங்களுக்குத் தான் ஈசுவரன் ஒரு பிள்ளையைக் கொடுக்கவில்லை. நான்கும் பெண்களாகப் பிறந்தன. நன்றாகப் படிக்கிற ஒரு ஏழைப் பையனை முன்னுக்குக் கொண்டு வந்தால் எவ்வளவோ புண்ணியம். எப்படியும் அவனுக்கு உபகாரச் சம்பளம் கிடைத்து விடும். உனக்கு வருகிற பணம் அவன் ஹாஸ்டல் செலவுக்குப் போதும், துணி மணி முதலிய சில்லறைத் தொகையைத்தானே நாங்கள் கொடுக்கப் போகிறோம்! நாளைக்கே அவன் படித்துத் தேறிப் பெரிய உத்தியோகத்துக்குப் போனால், அவன் அந்தப் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடட்டுமே! தர்மம் என்று நினைக்க வேண்டாம். இது விஷயத்தில் 'அவர்' சொல்லுகிறதைத் தட்டாதே ஜானகி!" என்று அன்பு ததும்பக் கூறிய வார்த்தைகளைத் தட்டிப் பேச முடியவில்லை ஜானகியால்.

பண்ணையார் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. ராஜு பி. ஏ. வகுப்பில் ராஜதானிக்கே முதலாவதாகத் தேறினான். அதுகாறும் ஜானகி அநுபவித்த துன்பங்களுக்கெல்லாம் முடிவு கட்டுவது போலச் சென்னையில் ஒரு பண்டகசாலையில் ஒரு குமாஸ்தா உத்தியோகம் கிடைத்தது, அவனுக்கு. பண்ணையாருக்குத் தன் உள்ளமார்ந்த நன்றியைத் தெரிவித்து அவர் ஆசியைப் பெற்றுக் கொண்டு, தாயாருடன் சென்னைக்குக் கிளம்பினான். உத்தியோகத்திலிருக்கும் போதே ஐ. ஏ. எஸ். பரீட்சையையும் எழுதினான். தன்னைப் போன்ற துரதிர்ஷ்டசாலியின் வயிற்றில் பிறந்த ராஜு அவ்வளவு பெரிய யோக ஜாதகனாயிருந்தது, ஜானகிக்கே ஆச்சரியமாய்த்தானிருந்தது. அந்தப் பரீட்சையிலும் தேறி அவன் டெபுடி கலெக்டராக நியமனம் பெற்ற போது ஜானகியின் உள்ளம் பூரித்தது.

பண்ணையாரிடம் தன் குடும்பம் பட்டிருந்த கடனை மாதம் நூறு ரூபாய் விதம் கொடுத்துத் தீர்த்தான் ராஜு. அவனுக்குக் குமாஸ்தா உத்தியோகம் கிடைத்தவுடனேயே 'இனிமேல் ஜீவனாம்சம் அனுப்ப வேண்டியதில்லை' என்று கணவனுக்குக் கடிதம் எழுதி விட்டாள் ஜானகி. துன்பத்தைத் தவிர வேறு எதையுமே கண்டிராத ஜானகியின் வாழ்க்கை அன்று முதல் அமைதியாகச் செல்லத் தொடங்கியது.

• • •

வீட்டுக்குள் அடியெடுத்து வைத்ததுமே, "அம்மா!" என்று பரபரப்புடன் கூவிக் கொண்டே உள்ளே நுழைந்தான் ராஜகோபாலன்.

ஜானகி நிதானமாக, "நீ இப்படித் திடுதிப்பென்று வந்து நிற்பாய் என்று நான் எதிர் பார்த்தது வீண்போகவில்லை. உனக்கு என் முடிவு சிறிதும் திருப்தி யளிக்காது என்பதும் நான் எதிர் பார்த்ததே. ஆனால், அதற்காக நான் என் கடமையைச் செய்யப் பின்வாங்கப் போகிறதில்லை. உலகத்தில் தவறே செய்யாத மனிதர்கள் யார்! சந்தர்ப்பம் நேரும்போது பழி தீர்த்துக் கொள்ள விரும்புவதுதான் மனித சுபாவம். ஆனால் அது மனித தர்மம் அல்ல. பிறர் தனக்கிழைத்த தீங்கைப் பாராட்டாமல் தன் கடமையைச் செய்வது தான் விவேகம் என்று எனக்குப்படுகிறது ராஜு!



## ஆரோக்யத்திற்கு: சைகிளில் செல்லுங்கள்:

சைகிள் சவாரி, உங்கள் ஆரோக்யத்தைச் சீராய் வைத்திருக்க உதவும் ஒரு சிறந்த தேகாப்யாசமாகும். அதுவும், உறுதிக்குப் பெயர் போனதும், கச்சிதமாகச் செய்யப்பட்டதுமான ஒரு ஹெர்க்குலீஸ்-இந்தியா சைகிளில் செல்லும்போது அச்சவாரி மேலும் மனசந்துஷ்டி யளிக்கிறது.



சொந்தமாகவே உங்களுக்கு ஒரு சவாரிவண்டி வைத்துக்கொள்ளுங்கள்.

ஒரு

# ஹெர்க்குலிஸ்-இந்தியா

வாங்குங்கள்.



இந்தியாவில் தயாரிப்பாளர்கள் :

டி. ஐ. சைகிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்., மதராஸ்.

எல்லா வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

# இது சகஜம்!



ஐந்து நண்பர்கள் பேசிக் களிக்கிறார்கள்...



..அதில் ஒருவர் சென்றவுடன் அவரைப் பற்றி இழிவாக மற்றவர்கள் பேசுகிறார்கள்...



..மற்றும் ஒருவர் விடை பெற்ற பின் அவரையும் பற்றி அவதூறாகப் பேசுகிறார்கள்...



அம் மூவரில் ஒருவரும் வெளியேறிய பின் அவர் நிலையும் அதுவாகிறது...



மிஞ்சியவரைப் பார்த்து மற்றவர், "நீர் கிளம்பவில்லையா?" என்றார்... அதற்கு "ஐயையோ!



நான் போக மாட்டேன், போனால் என்னைப் பற்றித் திட்ட ஆரம்பித்து விடுவீர்கள்" என்றார்.

நீ படித்தவன்; புத்திசாலி; பொறுப்புள்ள உத்தியோகம் வகிப்பவன். உனக்கு நான் வேறு என்ன சொல்ல விருக்கிறது!'' என்றாள்.

''அம்மா! உனக்குச் சித்தப்பிரமை ஏற்பட்டு விட்டதா! இருபது வருடங்களுக்குப் பிறகு, சுயநலம் காரணமாக அவர் உன்னை அழைத்திருக்கிறார். நீயோ கொஞ்சமும் தயக்கமில்லாமல் கிளம்பத் தயாரா யிருக்கிறாய்! உன் நிலைமையிலுள்ள வேறு யாராவது இப்படிச் செய்ய முன் வருவார்களா!'' என்றான் அவன்.

''சுயநலம் காரணமாகவே அவர் என்னை அழைத்ததாக இருக்கட்டும். என் கணவர் என்ற முறையில், என் உயிருள்ள வரைக்கும் அவர் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டியவள் தானே நான்! எனக்கு மீண்டும் வாழ்வளித்து, அமைதிக்காக ஏங்கி நிற்கும் என் உள்ளத்துக்குச் சாந்தி யளிக்கக்கூடிய சக்தி அந்த ஒருவருக்குத் தானே உண்டு! ராஜு, யோசித்துப் பார்! உன் தங்கையை, சித்தியின் பெண்ணை, தாரை வார்த்துக் கொடுக்க இன்று என் உதவி தேவையா யிருக்கிறது, அவருக்கு. நானிக்கே உனக்குக் கல்யாணம் நிச்சயமாகிறதென்று வைத்துக் கொள். தகப்பனார் ஸ்தானத்திலிருந்து எல்லாவற்றையும் நிறைவேற்றி வைக்க வேண்டியவர் அவர் தானே! அத்தகைய ஒரு சந்தர்ப்பம் நேரும்போது அவர் காலில் விழுந்து கெஞ்சியாவது உன் திருமணத்தை நடத்தி வைக்கும்படி நானே அவரிடம் கேட்கத் தயாரா யிருந்தேன். இப்போது அவரே என்னை வலிய அழைத்திருக்கும்போது, போகாமலிருக்க முடியுமா!'' என்றாள் ஜானகி.

''அம்மா! என் பொருட்டா நீ இதற்குச் சம்மதித்தாய்! இதுவரை நீ அனுபவித்ததெல்லாம் போதாதென்று உனக்கு இந்த ஒரு தண்டனையும் என்னால் ஏற்பட வேண்டுமா!'' என்றான் ராஜு.

''ராஜு! நீ எதைத் தண்டனை யென்று கருதுகிறாயோ, அதையே நான் சுகமாகப் பாவித்தால்...! நிரந்தரமில்லாத சண்டை பூசல்களுக்குப் புருஷன் பெண்சாதிச் சண்டையை உதாரணமாகக் கூறுகிறார்களே, அது எதனால் தெரியுமா! கணவன்-மனைவி என்ற பந்தத்துக்கு என்றுமே அழிவில்லை. அது சாசுவதமானது. எனக்குரிய ஸ்தானத்தைத்தான் நான் மீண்டும் ஏற்றுக் கொள்ளப் போகிறேன். இதில் என்ன தவறு!'' என்று ஜானகி கேட்ட போது அநுபவ பூர்வமான அந்த வார்த்தைகள் அவன் உள்ளத்தைத் தொட்டன.

''அம்மா! இத்தகைய மேலான பண்பு குடிகொண்டிருக்கும் உன் உள்ளம் இன்று தான் எனக்கு விளங்கியது. நீ சாதாரணப் பிறவியல்ல. என் பொருட்டு நீ செய்யப்போகிற தியாகத்தை எண்ணிப் பார்த்தால் உன்னைத் தெய்வப் பிறப்பாகவே கருத வேண்டும்'' என்று கூறி அவள் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தான் ராஜு. அவள் கண்களிலிருந்து பெருகிய ஒரு சிறு கண்ணீர்த் துளி ராஜுவின் நெற்றியிலிருந்த தழும்பில் பட்டுத் தெறித்தது.



# கருணை நிறைந்தவள்

**யசோதரன்**

அன்னம் குடிசையில் சோர்ந்து விழுந்து கிடந்தாள். அவள் உடலில் திராணியில்லை. வைத்தியம் செய்து கொள்ள வசதியு மில்லை. சர்க்கார் நடத்தும் தர்ம வைத்திய சாலையை நாடிப் போகலாம். அதற்கும் நாலைந்து கல் நடந்து போயாக வேண்டும். அங்கேயே அவளை நிறுத்தி வைத்துக் கொண்டு விடுவார்கள். ஒரு மூலையில் படுக்கை யில் கிடத்தி விடுவார்கள்.

எல்லாவற்றையும் விட்டு அங்குபோய் அடைந்து கிடக்க அவள் மனம் இடம் கொடுக்கவில்லை. காரணம் சொத்து, சுதந் திரம் அல்ல; அருமை மகன் முருகன்தான்.

அந்தக் குழந்தைச் செல்வம் அவள் வேண் டாமலே அந்திய காலத்தல் கிடைத்தது. அவன் பிறந்தபோது நாற்பதாவது வயசை அவள் கடந்திருந்தாள். நீண்ட நாட்களாகக் குழந்தை இல்லாத குறையை அவள் உணர்ந்த போதிலும், வயிற்று வேதாந்தம் அதை மறக்கச் செய்து விட்டது.

அவளும் அவள் கணவன் செல்லப்பனும் வறுமையில் தான் வாழ்ந்தார்கள். ஆனாலும் தன்மானத்தை அவர்கள் விடவில்லை. பிறரி டம் எப்பொருளையும் யாசித்து வாழவில்லை. உடலின் தென்பையும், உழைப்பின் பெருமை யையும் அவர்கள் நம்பி வாழ்ந்தார்கள்.

செல்லப்பன் வயலில் உழைத்தான். அன்ன மும் அவனுடன் கூட மாட ஒத்தாசையாக இருந்து வேலை செய்தாள். சில சமயங்களில் அவர்கள் தனியாகவே கூட வயற் காட் டுக்கு வேலைக்குப் போவார்கள். ஊதியம் நெல்லாகக் கிடைக்கும்; உளுந்து பயறாக இருக்கும்; நிலக் கடலை அல்லது வேறு பொருளாகவும் வரும். இல்லா விட்டால் காசாகவே கிடைத்து விடும். வயிற்றின் கொடுமையை அவர்கள் உணரவில்லை; பசிப் பிணி அவர்களை வாட்ட வில்லை. சோம்பித் திரியாதவர்களைப் பசியும் பட்டினியும் என்ன செய்து விட முடியும்?

ஊருக்குக் கடைக்கோடியில் குளத்தங்கரை யைத் தள்ளிக் கொஞ்ச தூரத்தில் மேட்டுப் பாங்கான இடத்தில் குடிசை போட்டிருக் தான் செல்லப்பன். அவனைப் பின் தொடர்ந்து வேறு சிலரும் அங்கே குடிசை கட்டினார்கள். நாளாக ஆகக் குளத்தைச் சுற்றி மேட்டின் நாற்புறமும் குடிசைகள் அடர்த்தியாக முளைத்து விட்டன. அதுவே கிராமத்திலுள்ள ஒரு குஞ்சுக் கிராமமாக இப்பொழுது காட்சி யளித்துக் கொண்டிருந்தது.

குளத்தையும் அந்தக் குடிசைகளையும் தள்ளிக் கொஞ்ச தூரத்தில் ஊருக்கு ஒரு கோயிலாய் விளங்கிற்று அந்த மாரி யம்மன் கோயில். மாரியம்மன் ஏழை மாரியம்மன் அல்ல. பணக்காரி; நிறைய நிறையச் சொத்துக்காரி; சர்வ பூஷண அலங் காரி. கோயில் பெரிய கோயில்; கோபுர மில்லாக் குறைதான். இந்தத் தலை முறையில் பெரிய கோயிலாகவே எடுத்திருந்தார்கள். ஒரு காலத்தில் குடிசையில் இருந்த அம்மன், கல்லாலும் காரையாலுமான பெரிய கட்டி டத்துக்குள் நிறைந்த செல்வத்துடன் வாசம் செய்யத் தொடங்கி யிருந்தாள்.

ஊரில் எப்பொழுதுமே அந்த மாரியம்ம னைப் பற்றிய பேச்சுத்தான். மக்கள் மாரியம் மனுக்கு பக்தி செலுத்தினார்கள்; காணிக்கை கட்டினார்கள்; விழா எடுத்தார்கள். பக்திப் பெருக்கில் பணம் சேர்ந்தது. ஏழையம்மன் பணக்காரி யாகி விட்டாள்.

மாரியம்மன் கோயில் தர்மகர்த்தா பதவி கோபாலனுக்குச் சொந்தம். அவன் இளைஞன். முப்பதைத் தாண்டாத வயசு. அப் பதவி அவனுக்குப் பரம்பரைச் சொத்து. கோயிலுக் குச் சொந்தக்காரர்களாயிருந்து வருகிற வர்கள் அவன் வீட்டார்தான். தந்தைக்குப் பின் அவர் தர்மகர்த்தாவாக ஆனதில் ஆச் சரியம் ஏதும் இல்லை. மாரியம்மனின் பெருமையை விடாது பேசி, நம்பிக்கையைப்

பெருக விட்டவர்களில் முதலாவதாக நின்றவன் கோபாலன்தான்.

ஆனால் வேறு கட்சியில் பேசியவர்களும் அங்கே இருந்தார்கள். அவர்கள் சிறு பான்மையோர். அவர்கள் தலைவன் முத்து. முத்து படித்தவன்; நிறையச் சொத்துக்களுடைய பணக்காரன்; ஆனால் ஆடம்பரத்தையும், அநாவசியத்தையும் விரும்பாதவன். அவனுக்குக் கடவுளிடத்து நம்பிக்கை யிருந்தாலும், கோயிலிடத்து நம்பிக்கையில்லை. மாரியம்மனிடத்தில் குவிந்திருந்த கணக்கற்ற செல்வம் அவன் கண்ணை உறுத்திற்று. அந்தச் செல்வத்தைக் கிராமத்தின் ஆக்க வேலைக்கும் கிராமத்து மக்களின் வளர்ச்சிக்கும் ஈடு படுத்தலாம் என்பது அவன் கருத்து.

அவன் கட்சியினர் அத்தகைய பிரசாரத்தை ஊர் முழுவதும் பரவச் செய்வதிலேயே ஈடு பட்டிருந்தனர். ஆனால் பயன் கிட்ட வில்லை. மக்களின் பக்திப் பிரவாகம் தான் பெருகிற்று. அம்மனின் செல்வம்தான் விரிந்து கொண்டிருந்தது. வெளியூர் மக்கள் வேறு வந்து நிறையக் காணிக்கை செலுத்தி விட்டுப் போயினர். ஆனால் கோயில் சொத்து, ஊர் நன்மையைக் கருதிச் செலவழிக்கப் படவே இல்லை.

சீர்திருத்தச் செம்மல் முத்துவுக்கு, தர்ம கர்த்தா கோபாலனின் ஒத்த வயதுதான். அது மட்டும் அல்ல, இருவருமே நல்ல நண்பர்கள். அவர்கள் இணைபிரியாத உயிர்த் தோழர்களாயிருந்த காலமும் ஒன்று இருந்தது.

தந்தைக்குப் பின், வம்சாவளிப் பாத்தியதையுடன், கோபாலன் கோயில் தர்ம கர்த்தாவானவுடன், அவனுக்கு முத்துவின் கொள்கையில் அவ்வளவாகப் பிடித்தம் ஏற்பட வில்லை. எனவே, இரு நல்ல நண்பர்களும் சற்றுப் பிரிந்தே இருக்க வேண்டியதாயிற்று. ஆனால் இருவரின் நட்புக்கும் பங்கம் ஏற்பட்டது என்று சொல்லமுடியாது.

"கோபால்! நான் சொல்வதைக் கேள். கோயில் வேண்டாம், குளம் வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. கோயிலு மிருக்கட்டும்; குளமுமிருக்கட்டும். விழா இருக்கட்டும். காணிக்கை இருக்கட்டும். எல்லாம் இருக்கட்டும். எதையும் நான் வேண்டாம் என்று சொல்ல வில்லை. கோயில் சொத்தை ஊர் நன்மைக்குப் பயன் படுத்து. பள்ளிக்கூடம் வை. வைத்தியசாலை ஏற்படுத்து. இன்னும் நல்ல காரியத்துக்குச் செலவிடு. என்னுடைய ஒத்துழைப்பையும் தருகிறேன். கைப் பணத்தைத் தருகிறேன். பணம் திரட்டித் தருகிறேன். என்னால் ஆனதை நான் செய்யத் தயார். என்ன சொல்லுகிறாய்?" என்று முத்து பார்க்கும்பொழு தெல்லாம் கோபாலனைக் கேட்பான்.

"முத்து! நீ சொல்வதில் எனக்கு அநுதாபம் இருக்கிறது. ஆனால் இப் புது வழியைக் கடைப் பிடிக்க என்னால் முடியாது. பணம் தின்னும் இந்தக் காரியத்தில் ஈடு பட்டால், இருக்கும் பணமும் போய், எடுத்த காரியத்தையும் உருப் படியாகச் செய்ய முடியாமல் இரண்டும் கெட்டான் நிலைதான் ஏற்படும். மக்கள் தெய்வ நம்பிக்கையைப் பார். இந்த விஷப் பரீட்சையில் இறங்க நான் தயாரில்லை" என்று கோபாலன் சொல்வான்.

அவர்கள் பேசும் கூட்டத்திலோ பேச்சு இன்னும் காரசாரமாக இருக்கும். முத்துவின் குரல்தான் பெரியதாய் ஒலிக்கும்.



இதில் இன்னொரு அதிசயம் என்னவென்றால் மாரியம்மன் கோயிலுக்குப் பின்னால், குளத்தை நோக்கியிருந்த பெரிய திடலில் தான் எல்லாக் கட்சிக் கூட்டங்களும் நடந்தாக வேண்டும்.

குளத்தங்கரை வாசிகளுக்கு இந்தக் கூட்டத்து நடவடிக்கைகள் எல்லாமே தண்ணீர் பட்ட பாடுதான்.

இந்தப் பயனைப் பெறத்தானோ என்னவோ செல்லப்பன் முதலில் அங்கு போய்க் குடியேறினான். ஆனால் முருகன் பிறந்த மூன்றாம் ஆண்டே செல்லப்பன் தலையைக் கீழே உருட்டி விட்டான்.

"நாம் கொடுத்து வைத்தது அவ்வளவு தான்" என்று அன்னம் மனத்தைத் தேற்றிக் கொண்டாள். கணவனை மகனின் முகத்தில் கண்டாள். அவன் நன்மைக்காகவே வாழ்ந்தாள். கூலிவேலை செய்து பிழைத்தாள்.

இப்பொழுதெல்லாம் அன்னத்துக்கு ஒரே குறிக்கோள்; அதுவேதான் நம்பிக்கையும்.

முருகன் கஷ்டம் தெரியாமல் வளர வேண்டும். படித்துப் புத்திமானாக விளங்க வேண்டும். முன்னுக்கு வந்து 'நாலு' பேர் வாழ்த்த நல்ல பெயர் எடுக்க வேண்டும்.

இப்படி, சுருங்கிய அவள் உள்ளத்திலே தன் மகனைப் பற்றிப் பரந்த ஆசை.

முருகன் ஆறாம் பிராயத்தைத் தாவியதும் அவனைக் கிராமத்து மூலையில் இருந்த நொண்டி வாத்தியார் பள்ளிக் கூடத்தில் கொண்டு போய் விட்டாள்.

முருகன் புத்திசாலி. வாத்தியார் கூறுவதைக் கவனமாகக் கேட்டுக் கொள்வான். தெய்வ பக்தி மிகுந்தவன். ஒரு பக்கம் வாத்தியார் போதனை. இன்னொரு பக்கம் தாயின் போதனை. மாரியம்மன் தான் அவனுக்குப் பெரிய தெய்வம்.

முருகன் புத்தகம், வேட்டி, சட்டை, தின்பண்டம் எது வேண்டுமென்றாலும், அன்னம் 'இல்லை' என்று சொல்ல மாட்டாள். முடிந்த வரையில் செய்வாள். முடியா விட்டால், "தம்பி, பொறுத்துக் கொள், மாரியாத்தாள் எல்லாம் தருவாள். அவளால் நீ படித்துச் சீமானாக ஆகப்போகிறாய்" என்று அன்போடு நயமாகச் சொல்லுவாள்.

சென்ற ஒன்றிரண்டு வருஷங்களாக அன்னத்தை ஏதோ ஒரு இனம் புரியாத பிணி பற்றிக் கொண்டிருந்தது.

உழைக்கத் திராணியற்று விட்டபோதிலும் பச்சிளம் பாலகனான முருகனை எண்ணி உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு உழைத்துப் பாடுபட்டு வந்தாள்.

முருகனுக்கு அன்னையை அந்த நிலையில் தனித்து விட்டுப் போக மனம் கேட்பதில்லை. உதரத்தில் குடிவைத்து அவனைப் பெற்று வளர்த்தவள். சோம்பலின்றி உழைத்தவள். வற்றாத வளர் நிலமாகிய தாயுள்ளம் நிறைவுபெற "கண்ணே, மகனே" என்று அன்பு மொழியினால் அருமை பெருமையாக அழைத்துக் கவனக் குறைவு சிறிது மின்றி ஊட்டி வளர்த்தவள். அத்தகையவள் ஓய்ந்து வீட்டில் விழுந்து கிடந்தாள். முருகனின் பிஞ்சு நெஞ்சு உலகத்தைச் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை. ஆயினும் தாயின் கஷ்டத்தைப் புரிந்துகொண்டு விட்டது. முன்னைக்கு இப்போதுள்ள மாறுபாடுகளை உணர்ந்து கொண்டு



விட்டது. எனவே, அவனுக்குப் பள்ளிக்கூடம் போகப் பிடிக்கவில்லை. அதன் பலனாகத் தாயார் அவனைச் சமாதானப்படுத்திப் பள்ளிக்கூடம் அனுப்பி வைக்கப் பெரும் முயற்சி எடுத்துக்கொள்ளும்படி ஆகிவிட்டது.

மாரியம்மனையே சர்வ வல்லமையுள்ள காத்து ரட்சிக்கும் கடவுளாக நம்பியுள்ள அந்தப் பிஞ்சு உள்ளம் பொறுமையை ஒரு நாள் இழந்து விட்டது.

தாய் என்ன சொல்லியும் அவனுக்குப் பள்ளிக்கூடம் போகப் பிடிக்கவில்லை. வீட்டிலிருந்தாலும் தாய் விட மாட்டாள் என்று தோன்றியது. பேசாமல் அம்மன் கோயில் சந்நிதானத்தில் வந்து உட்கார்ந்து கொண்டான்.

அவன் மனசு ஒரு நிலையில் இல்லை. அது பயத்தினால் கொந்தளித்துக் கொண்டிருந்தது. இருந்தாலும் ஏதோ ஒரு நம்பிக்கை அவன் மனத்தைப் பற்றிக் கொண்டிருந்தது.

எழுந்து நடப்பதும், விழுந்து வணங்குவதும், கை யெடுத்துக் கும்பிடுவதும், பிராகாரத்தைச் சுற்றுவதும், சிறிது நேரம் மனத்தை அசை போட விட்டு விட்டு உட்காருவதுமாகவே அவன் இருந்தான். திடீரென்று அவன் மூளை கொஞ்சம் தீவிரமாக யோசனை செய்தது.

நோட்டுப் புத்தகத்திலிருந்து ஒரு தாளைக் கிழித்தான். தனக்குத் தோன்றியதை பென்சிலினால் கிறுக்கினான். அவன் உள்ளத்தின் உணர்ச்சி மிகுந்த முறையீடு காகிதத்தில் வந்து ஒட்டிக் கொண்டது.

அந்த முறையீட்டை, அதுவும் அந்த ஏழைச் சிறுவனது உள்ளத்தின் ஓலத்தை அம்மன் நிராகரித்து விடவா போகிறாள்?

காகிதத்தை மடித்தான் சிறுவன். அதை மாடத்தில் இட்டு, அதன் மேல் ஒரு சிறு கல்லைக் கனமாக வைத்து விட்டு அவன் வீட்டை நோக்கி ஓடினான்.

நால் மணி நேரம் கழித்து, எதிரும் புதிருமாக வந்து கொண்டிருந்த தர்மகர்த்தா கோபாலனும், சீர்திருத்தச் செம்மல் முத்துவும் மாரியம்மன் கோயில் அருகில் சந்தித்துக் கொண்டார்கள். கோயில் எதிரிலேயே நின்று பேசினார்கள்.

அப்பொழுது கோயில் மாடத்தில் மடித்து வைக்கப்பட்டிருந்த காகிதம் முத்துவின் கூரிய பார்வையில் விழுந்தது. "கோபால்! பூசாரிக்கு யாரோ கடிதம் எழுதி வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள்!" என்றான்.




கோபாலன் ஆவலோடு போய் எடுத்து வந்தான். அதைப் பிடுங்கிப் படித்த முத்துவின் முகம் சுருங்கி மாறுதல் அடைந்தது.

கோபாலனுக்கு ஒன்றும் புரியவில்லை. "என்ன எழுதியிருக்கிறது?" என்று கேட்டான்.

"நீயே படித்துப் பார்!"

கடிதம் கை மாறிற்று. கோபாலன் வாய்விட்டே படித்தான்.

**மாரியம்மன் தாயே! ஏழைச் சிறுவன் எழுதுகிறேன். உன் கருணையை வேண்டுகிறேன். அப்பா இல்லை. அம்மா நோயாளி. பிழைக்க வழியில்லை. சொத்து வேண்டாம். சுகம் வேண்டாம். அம்மா பிழைக்க வழி செய். அதுவே போதும். நீயும் கை விட்டால் அம்மா செத்துப் போய் விடுவாள். நான் அனாதையாகி விடுவேன். என்னைக் காப்பாற்றுவது உன் பொறுப்பு. உன் கோயிலுக்குப் பின்னால், குளக் கரையில் நாலு வீடுகள் இருக்கின்றன. அதில் முதல் வீடு எங்கள் குடிசை. பொத்தல் குடிசை. பார்த்தால் தெரியும்.**

முருகன்

கடிதத்தைப் படித்தவுடன் கோபாலன் யோசனையிலாழ்ந்தான்.

"கோபாலா! என்ன யோசனை செய்கிறாய்? யோசிக்க இது நேரமில்லை. நான் வெகு நாட்களாகச் சொல்லி வருகிறேன். நீ கேட்கவில்லை. கேட்டிருந்தால், என்னென்ன நன்மைகளை இங்கே விளைவித்திருக்கலாம்.

எல்லாவித வலிகளேயும்

# அனஸின்

நிவர்த்திக்கிறதென்பதை
கண்டேன்

DOES NOT HARM THE HEART

WILL NOT UPSET THE STOMACH

ANACIN

TABLETS

QUININE

2 ANNAS INDIA 1949

WHITEHALL PHARMACAL COMPANY, NEW YORK, U.S.A.

2 மாத்திரைகள்
கொண்ட பாக்கெட்டு
களிலும் 32 மாத்திரை
கள் கொண்ட பெட்டி
களிலும் கிடைக்கும்.

## நோவுகள், தலைவலி, ஜலதோஷம், ஜுரம்

இவற்றினின்று துரிதமாக நிவர்த்திபெற

---

## சாம்பியன் & அசோக் பேனுக்கள்

எல்லோரும் விரும்புவது



சிறந்த வேலைப்பாடு
நல்ல ரகம் உத்திரவாதமுள்ளது

தயாரிப்பவர்கள் :

## குஜராத் இண்டஸ்ட்ரீஸ்

லோஹார் சவுல், லால்ஜீமான்சிங் பில்டிங், பம்பாய்-2

எல்லா பேனு வியாபாரிகளிடமும், ஸ்டோர்களிலும் கிடைக்கும்

இந்தச் சிறுவனையும், அவன் தாயையும் காப்பாற்றுவது என் பொறுப்பு. என்கூட வரப் பிரிய மிருந்தால் வா'' என்று முத்து குளத்தங் கரையை நோக்கித் திரும்பினன். கோபாலன் வாய் பேசாமல் அவனைப் பின் தொடர்ந்தான்.

கடிதத்தில் குறிப்பிட்டிருந்த குடிசை கண் முன்னாலே தெரிந்தது. மழையையும் வெய் யிலையும் வெளியே விடாத பொத்தல் குடிசை தான். உள்ளே யிருந்த நட்சத்திர மண்டலத் தைக் கணக்கெடுத்து விடலாம். முருகனின் தந்தை செல்லப்பன் இறப்பதற்கு முன் அந்தக் குடிசை கட்டியது.

குடிசை வாயிலில் முருகன் அமர்ந்திருந் தான். உள்ளே அன்னம் படுத்திருந்தாள். அவ்விருவரைக் கண்டதுமே சிறுவன் அதி சயித்தான். கூடவே அச்சம் தோன்றிற்று.

அதற்குள் ''நீதானே முருகன்? உன் தாய் எங்கிருக்கிறாள்? அவள் உடம்புக்கு என்ன?'' என்று கேட்டான் முத்து.

''வந்து பாருங்கள், ஐயா! அம்மா பிழைப் பாளா என்று சொல்லுங்கள்'' என்று சொன்ன முருகன் அவர்களை உள்ளே அழைத் துப் போனன். அன்னம் எழுந்து உட்கார முயன்றாள். ஆனல் முடியவில்லை.

அந்த எலும்பின் உருவம் முத்துவுக்குக் கண்ணீரை வரவழைத்து விடும் போலிருந் தது. ''கோபாலா! உன் பணமோ ஊர்க் கோயில் பணமோ செலவிட வேண்டாம். பணம் செலவழிக்க நானிருக்கிறேன். ஆனல் இப்போதைக்கு உன் உதவி கொஞ்சம் தேவை. உன் காரைக் கொஞ்சம் கொடு. போய் டாக்டர் கருணாகரனை அழைத்து வரு கிறேன். அவர் என் நண்பர். கூப்பிட்டால் தட்ட மாட்டார்'' என்றான் முத்து.

''முத்து! காரை எடுத்துப் போகக் கேட்க வேண்டுமா? போய்வா! நீ வரும் வரையில் நான் இங்கேயே இருக்கிறேன்'' என்று கூறிய கோபாலனை உணர்ச்சி விழுங்கிற்று.

* * *

டாக்டர் கருணாகரனின் அரிய சிகிச்சை யும், முத்துவின் பெரு முயற்சியும், பணமும் அன்னத்தை எமனிடமிருந்து மீட்டு விட்டன.

மூன்று மாதங்களுக்குப் பிறகு அன்னம் முன் போலவே நடமாட ஆரம்பித்து விட் டாள். ஓடியாடி உழைக்க முற்பட்டு விட்டாள். அதற்கு முன் நன்றி தெரிவிக்க, தாயும் மகனும் முத்துவையும் கோபாலனை யும் தேடிக் கொண்டு போனார்கள்.

''முருகா! மாரியம்மன் அருளை நம்பினயே! யார் உதவினார்கள் பார்த்தாயா? மனிதர் களுக்கு மனிதர்தான் உதவி. தெரிந்து கொள், முருகா!'' என்றான் முத்து.

''இல்லை, இல்லை. அந்தத் தாயின் அருள் தான் இது. அவள் பார்த்துத்தான் உங்களை இங்கு அனுப்பி வைத்திருக்கிறாள். மாரியம் மன் பெரியவள். கருணை நிறைந்தவள்'' என்று முருகன் பணிச் சென்று பதில் சொன் ஞன். அந்த கணம் கோயிலை நோக்கிக் கை யெடுத்துக் கும்பிட்டான்.

''பிள்ளை சொல்கிறது தான் சரி! அந்த ஈசுவரி இல்லா விட்டால், நான் பிழைத் திருக்க மாட்டேன். என் குழந்தை அனதை யாகப் போயிருப்பான். அவள் உங்கள் மனசில் தோன்றி யிருக்கிறாள். உங்கள் இரு வரையும் அங்கு வரவழைத்துக் கடிதாசியைக் கண்முன்னாலே காண்பித்திருக்கிறாள். சும்மா யிருப்பாளா, சக்தியுள்ள என் தாய்?'' என்று அன்னம் மாரியம்மனை எண்ணித் தாடையில் போட்டுக் கொண்டாள்.

''முத்து! யார் எதிர்த்தாலும் சரி, என்ன சொன்னாலும் சரி! நான் சும்மா இருக்கப் போவதில்லை. மாரியம்மனின் கருணையை மக்களுக்குக் காண்பிக்கத்தான் போகிறேன். கோயிலுக்கென்று குவிந்திருக்கும் சொத்தும் நிலமும் ஊரின் நன்மைக்காகவே பயன் பட வேண்டும். பள்ளிக்கூடம், வைத்தியசாலை ஏழைகளுக்கு உதவி என்று செலவிடப் போகிறேன். இப்பொழுதுதான் வழி நன்கு கத் தெரிகிறது. ஜனங்களிடத்தில் கோயில் காணிக்கைக் கென்று கேட்டாலும், மனம் கோணுமல் கொடுப்பார்கள். அம்மனின் கருணையினல் நிகழும் அதிசயத்தைப் பார்!'' என்றான் கோபாலன்.

''நானும் அப்படித்தானேயப்பா இத்தனை நாளும் வேண்டினேன்? இந்தக் கோயில் வழி யாகப் போகும் போதெல்லாம், 'மாரியம்மன் தாயே, பணத்தை வீணில் முடக்கிப் போட்டு வைத்திருக்கிறாயே! எங்களுக்குக் கொடுக்க மனம் எப்போதுதான் வரப்போகிறதோ?'' என்று எத்தனை முறை நான் பிரார்த்தனை செய்தேன், தெரியுமா?'' என்றான் முத்து.

முருகனையும் அவன் தாயையும் காப்பாற் றும் பொறுப்பை முத்து தானே எடுத்துக் கொண்டான். பையனின் புத்தி சாலித்தனத் தைக் கண்டு, அவனைப் பெரும் படிப்பாளி யாக்கத் தன்னல் இயன்ற முயற்சிகளையும் எடுக்கப் போவதாகச் சொன்னன்.

கிராமத்தில் சீர் திருத்த வேலைகள் சீக்கிர மாகவே தொடங்கின.

பெரிய பள்ளிக்கூடம் தோன்றியது. வசதி யான வைத்தியசாலை ஏற்பட்டது. உழைத் துப் பிழைக்க முடியாதவர்களுக் கென்று ஏழைகள் விடுதி வேறு தோன்றிற்று.

அங்கு நடந்த அதிசயம் காற்றோடு கலந்து எங்கும் பரவிற்று. மாரியம்மன் அருளினல் நடந்த அதிசயமாகவே எல்லாரும் நம்பி னார்கள். பிரத்தியட்சத் தெய்வமான அம் மனைக் காண எங்கெங்கிருந்தோ மக்கள் தினமும் வந்த வண்ணமாக யிருந்தனர்.

அம்மனின் அருள் பெற்ற முருகனையும் அவன் அன்னை அன்னத்தையும் அவர்கள் அதி சயப் பொருள்களாகக் கருதிப் பார்க்காமல் போவதில்லை. அங்கே அருள் பண்ணை செழித் தது; அம்மனின் பெருமை ஓங்கியது.

# ஒத்திருக்கின்றன...

மலர்கள் பல விதங்களில் **பினாகா**வை ஒத்திருக்கின்றன.

அவற்றின் புதுமையும் மணமும், நாய்மையும் பினாகாவின் மூன்று குணங்களே. இதனுடன் உங்களுக்குக் கேடு விளைவிக்கும் கிருமிகளை எதிர்த்து ஒவ்வொரு பல் இடுக்கிலும் நுழைந்து சுத்தம் செய்து பற்களை வெண்மையாக்கும் விஞ்ஞான பூர்வமாகக் கண்டுபிடித்த மூலப் பொருள்கள் கிடைக்கின்றன.

பூர்ணமான பற்கள் பாதுகாப்புக்கு **பினாகா**வே சிறந்த சாதனம்.

**பினாகா ரோஸில்** சக்தி நிறைந்த ஸல்போரிஸிநோலியேட் உள்ளது.

**பினாகா கிரீனி**-ல் சுத்திகரிக்கப்பட்ட குளோரோபில்லும் கூட உள்ளது.

ஒரு சிபா தயாரிப்பு

BINACA

ரேடியோ ஸிலோனில் கேட்கவும்: பினாகா ஹிட் பரேட் திங்கட்கிழமைகளில் இரவு 8 ம…
பினாகா கீத் மாலா புதன்கிழமைகளில் இரவு 8 ம…

CBK-1903A





இந்தியாவில் மிகப் பெரியதும், மிகவும் நூதனமான ஸைகிள் தயாரிக்கும் இயந்திரங்களில் செம்மையாகத் தயாரிக்கப் பட்ட ஹிந்த் ஸைகிள்கள் உயர்ந்தரக இயந்திரங்களை நியாயமான விலையில் வாங்க விரும்பும் வாடிக்கைக்காரர்களுக்குப் பிடித்தமானது.

செம்மையான செய்முறை 3.

ஸைகிள் ரிம்கள் உயர்ந்தரக கச்சா பொருள்களால் ஆட்டோமாடிக் கருவி இயந்திரங்களில் உருவாக்கப்பட்டவை.

# ஹிந்த் ஸைகிள்

இந்தியாவிற்கே சொந்தமானது.



ஹிந்த் ஸைகிள்ஸ் லி.. 250, வர்லி, பம்பாய் 18.

# கைத்தறியைக் கைதூக்கி விடுக!

கோவை திரு சி. எஸ். இரத்தினசபாபதி முதலியார்

நெசவாளியின் துன்பத்தைத் துடைக்க வேண்டியதின் அவசியத்தையும் அவசரத்தையும் பற்றி அனைவரும் அறிக்கை மேல் அறிக்கை வெளியிட்டுக் கொண்டிருக்கின்றனர். நம் நாட்டில் சுமார் இருபத்தெட்டு லட்சம் நெசவாளிகள் கைத்தறி நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருப்பதாக ஏகதேசமாகக் கணக்கிடலாம். நெசவுத் தொழிலுக்குச் சம்பந்தப்பட்ட சாயமிடுதல், அச்சிடுதல் போன்ற தொழில்களில் சுமார் 42 லட்சம் தொழிலாளிகள் ஈடுபட்டிருக்கின்றனர். ஆக 70 லட்சம் மக்கள் நெசவுத் தொழிலிலும் அதனுடன் சம்பந்தப்பட்ட தொழில்களிலும் தொழில் புரிகின்றனர்.

“புத்” என்னும் நரகத்தில் யாரைப் பார்க்கினும் பார்க்கலாம்; ஆனால் ஏழை நெசவாளியை மாத்திரம் அங்கு நிச்சயமாகக் காண முடியாது! புத்திர பாக்கியம் பரிபூரணமாய்க் குறைவில்லாமல் அமையப் பெற்ற நெசவாளிக்கும் “புத்” என்னும் நரகத்துக்கும் என்ன சம்பந்தம்? ஒவ்வொரு தொழிலாளியும், தனது வருவாயையே நம்பியிருக்கும் மூன்று அல்லது நான்கு பேர்களையாவது பராமரிக்க வேண்டிய நிலையில் இருக்கிறான். எனவே கைத்தறி நெசவையும் அதன் சம்பந்தப்பட்ட இதர தொழில்களையும் நம்பி உயிர் வாழும் மக்கள், 70 லட்சம் தொழிலாளிகள் மட்டுமன்று; அவர்களது குடும்பத்தினரையும் சேர்த்து சுமார் 280 லட்சம் மக்கள் எனக் கொள்ளலாம். எனவே நமது நாட்டு மொத்த ஜனத் தொகையில் சுமார் பதின் மூன்றில் ஒரு பாகம் மக்கள் கைத்தறி நெசவு, அத்துடன் சம்பந்தப்பட்ட தொழில்கள் ஆகியவற்றில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்றால், கைத்தறியின் முக்கியத்துவம் நன்குணரப்படும்.

புராதன காலத்திலிருந்து சீரும் சிறப்பும் பேரும் புகழும் படைத்து விளங்கியது நமது நாட்டுக் கைத்தறி நெசவுத் தொழில். ஆனால் பழம் பெருமைகளைப் பற்றி எண்ணி வியந்து பூரிப்படைவதில் யாருக்கு என்ன லாபம்? கைத்தறியின் தற்போதைய நிலை என்ன? உடனடியாகக் கைதூக்கி விடப்படாமல் போனால் நசித்தே போய் விடும் நிலையில் நம் பண்டையத் தொழில் இருப்பது கண்கூடு.

பாம்பு என்றதும் கீரியின் நினைவு வருவதைப் போன்று, கைத்தறி என்ற உடன் பஞ்சு நூல்—துணி ஆலையின் நினைவு அநேகருக்கு வருவது இயல்பாகி விட்டது. உண்மையில் கைத்தறிக்கும் பஞ்சாலைக்கும் போட்டி உண்டா? என்று ஆராய்ந்தால், பஞ்சாலையினால் எவ்விதத்திலும் கைத்தறி பாதிக்கப்படவில்லை என்பது வெள்ளிடைமலை.

சரித்திரத்தையும், சேகரிக்கப்பட்ட புள்ளி விவரங்களையும் அலசிப் பாருங்கள். 1944-ம் ஆண்டு வரை கைத்தறி உற்பத்தி தழைத்து வளர்ந்து வந்திருக்கிறது. அதன் பின்னர் க்ஷீணிக்கத் தொடங்கியிருக்கின்றது. 1939-ம் ஆண்டில் 182 கோடி கெஜம் துணி கைத்தறிகளால் உற்பத்தி செய்யப்பட்டன. ஆனால் தற்போது கைத்தறி உற்பத்தி 120 கோடி கெஜம் துணிதான். இரண்டாவது உலக யுத்தத்துக்கு முன், பஞ்சாலைத் தொழிலின் மேல் அதிக வரிப் பளு ஏற்றப்படவில்லை. அதற்குப் பின்னர்தான் அதிக கூலி, குறைந்த நேர வேலை, அதிக பஞ்சப்படி, க்ஷேம நிதி, தொழிலாளர் அரசாங்க இன்சுரன்சு முதலிய பலவித பளுகள் பஞ்சாலைத் தொழிலின் மேல் சுமத்தப்பட்டிருக்கின்றன. பஞ்சாலைகளின் வரிப் பளு குறைவாக இருந்தபோது அவைகளுடன் வெற்றிகரமாகப் போட்டியிட்டு உற்பத்தியைப் பெருக்கிய கைத்தறிகள் பஞ்சாலைகளின் மேல் வரிப் பளு அதிகமாகச் சுமத்தப்பட்ட காலத்தில் அவைகளுடன் போட்டியிட முடியாமல் போய் விட்டதா? கைத்தறியின் க்ஷீணிப்புக்குப் பஞ்சாலை காரணமாயிருக்க முடியாது.

எனின் கைத்தறியின் தற்போதைய அவல நிலைக்கு உண்மைக் காரணம் என்ன?

நம் நாட்டில் இரண்டாவது உலக யுத்தத்துக்கு முன்னர் சராசரி ஒரு மனிதரின் துணி உபயோகம் ஆண்டுக்கு 16 கெஜமாக இருந்தது. ஆனால் யுத்தத்துக்குப் பின்னர் அது மிகவும் குறைந்து 10½ கெஜத்துக்கு வந்து விட்டது. தற்போது அந்த விகிதம் சற்று உயர்ந்து சுமார் 14½ கெஜ அளவுக்கு வந்துள்ளது. மக்கள் ஒவ்வொருவரும் 14½ கெஜம் துணிக்கு மேல் உபயோகப்படுத்த இயலாமலிருப்பதற்குக் காரணம் என்ன? நாட்டில் துணி உற்பத்தி இல்லையா? துணிரகங்கள்தான் எங்கும் தேங்கிக் கிடக்கின்றனவே! அப்படியானால் மக்கள் துணி உபயோகத்தை அதிகரிக்க முடியாமல் இருப்பதன் காரணம் என்ன? மக்களிடம் வாங்கும் சக்தி குறைந்திருப்பதே அடிப்படைக் காரணம். ஆகவே மக்களின் வாங்கும் சக்தியை அதிகரிக்க ஆவன செய்தால், துணி உபயோக விகிதம் அதிகரித்து, மேற்கொண்டு துணிக்குக் கிராக்கி ஏற்பட்டு, கைத்தறி உற்



பத்தி பெருகி, நெசவாளிகள் நியாயமான வருவாய் அடைந்து, அமைதியான வாழ்வு நடத்த அடிகோலியதாகும்.

மனிதனுக்கு அத்தியாவசியமானவை உணவும் உடையும். துரதிர்ஷ்ட வசமாக நாட்டில் இன்பம் குன்றி, எங்கும் துன்பமே தலைவிரித்தாடி வருகிறது. துன்பத்தால் சூழப்பட்ட ஏழையின் மனம் இன்பத்தை எண்ணியே ஏங்குவது மனித இயல்புதானே? அன்றாட அரை வயிற்றுக் கஞ்சிக்கும் கஷ்டப்படும் ஏழை மக்களின் மார்புக்குள் துடிப்பதும் மனித இருதயம்தானே? தம் வறுமையிலும், சிறிது கேளிக்கையையும், உல்லாசத்தையும் மக்கள் விரும்புகிறார்கள். எனவே கேளிக்கைக்காகத் தம் சொற்ப வருவாயில் ஒரு பகுதியைச் செலவழிக்க அவர்கள் ஆசைப்படுவதில் வியப்பில்லை.

அதே போல் மக்கள் உணவுச் செலவைக் குறைப்பதும் இயலாத காரியம். உணவுப் பொருள்களின் விலைகள் குறைந்த போது, துணி உபயோகம் அதிகரித்திருக்கிறது; உணவுப் பொருள்களின் விலைகள் அதிகரித்த போது. ஒவ்வொரு நபருக்கும் துணி உபயோகம் குறைந்து வந்திருக்கிறது; இவ்வுண்மையைப் புள்ளி விவரங்கள் பறை சாற்றுகின்றன. உணவுப் பொருள்களின் விலைகள் குறைவதினால் மக்களிடம் மீதமாகும் தொகை துணி வாங்க உபயோகப் படுகிறது என்பதை இந்தப் புள்ளி விவரங்கள் நிரூபணம் செய்கின்றன. எனவே தலா துணி உபயோக விகிதம் அதிகரித்துக் கைத்தறி நெசவாளர்களின் நிலை சீர் திருந்த வேண்டுமானால், உணவுப் பொருள்களின் விலைவாசிகள் குறைய வேண்டியது அத்தியாவசியம். நமது அரசாங்கப் பொருளாதார நிபுணர்கள் இந்தத் துறையில் கவனத்தைச் செலுத்தி, உணவுப் பொருள்களின் விலைகளை மாத்திரம் குறைத்து விடட்டும். அப்பொழுது துணி உபயோக விகிதம் அதிகரித்துக் கைத்தறித் துணிக்குக் கிராக்கி ஏற்படும்.

கைத்தறித் தொழில் யுத்த காலத்தில் சற்று செழித்து இருந்தது போல் தோன்றியது. ஆனால் அது உண்மையான விதத்தில் உகந்த முறையில் தழைத்த செழிப்பு அன்று. யுத்தம் ஆரம்பித்தவுடனே நூல் பங்கீட்டு முறை புகுத்தப்பட்ட போது, நூல் பற்றுக் குறை காரணமாகத் தங்களுடைய கைத்தறிகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்திக் காட்டி, நூல் பெற்ற நெசவாளிகள் அந்நூலைக் கருப்புச் சந்தையில் விற்று லாபம் சம்பாதித்து வாழ்க்கை நடத்தியதும் உண்டு. தவிர மில் துணி யுத்தகாரியங்களுக்கும், பிறநாட்டு ஏற்றுமதிக்கும் ஏராளமாக அனுப்பப்பட்டு விட்டதால், உள் நாட்டில் துணிப் பஞ்சம் ஏற்பட்டு, எத்துணியானாலும் எந்த விலைக்கும் வாங்கும் நிலை நிலவி வந்தது. இச் சூழ்நிலையைத் துஷ்பிரயோகம் செய்து, தரத்தில் மிகவும் தாழ்ந்த ரகங்களைக் கைத்தறிகள் உற்பத்தி செய்து விற்பனை செய்ததும் உண்டு. மேற் சொன்ன சூழ்நிலைகள் மாறிவிடவே, நெசவாளர்களின் வருவாய் குறைந்தது.

கைத்தறித் துணிக்கும் மில் துணிக்கும் போட்டி ஏற்படும் போது, கைத்தறித் துணி அதிக விலை காரணமாகச் செலவாவதில்லை என்று கூறப்படுகிறது. இதிலும் உண்மையில்லாமலில்லை. பஞ்சாலையிலிருந்து உற்பத்தி செய்யப்படும் பருத்தி நூல் நெசவாளியின் கைக்குச் சேர்வதற்குள், அநேக வியாபாரிகள் தரகர்கள் கைமாறி அவர்களது லாபமெல்லாம் சேர்ந்து அதிக விலையாக உயர்ந்து விடுகிறது. இதைத் தவிர்க்கப் பஞ்சாலைகளிலிருந்து நூலை நேராக நெசவாளிகளுக்கு வினியோகிக்க ஏற்பாடு செய்ய வேண்டியது அவசியம். கைத்தறி நெசவாளர்களுக்கென்று கூட்டுறவு நூற்புப் பஞ்சாலை ஒன்று ஆந்திர ராஜ்யத்தில் நிறுவப்பட்டிருப்பது வரவேற்கத் தக்கது. அதே போல் இன்னும் சில கூட்டுறவு நூற்புப் பஞ்சாலைகள் நிறுவுவது நல்லது.

கைத்தறித் துணியின் விலை அதிகரிப்பதற்கு மற்றொரு காரணம் நிதானமான உற்பத்தியே. மின்சாரத்தின் உதவியைக் கொண்டு கைத்தறியின் உற்பத்தி வேகத்தை அதிகரித்துக் கொள்ளும் வகையில் திருத்தி அமைத்தால் இத்துறையில் மிகவும் நல்ல பலன் ஏற்படலாம். சிறு சிறு நூற்பு யந்திரங்களையும் மின்சாரத்தின் உதவி கொண்டு கிராமங்களில் இயக்கினால், ஆங்காங்கு உள்ள கைத்தறிகளின் நூல் தேவையை அவைகளே பூர்த்தி செய்யவும் இயலும்.

கைத்தறித் துணியின் அபிவிருத்திக்கு உபயோகப் படுத்தும் நோக்குடன் அரசாங்கம் மில் துணிக்குப் பல விதங்களில் தீர்வைகள் விதித்திருக்கின்றது; மேலும் விதிக்க உத்தேசித்திருக்கின்றது. மில் துணியின் விலைகள் அதிகரிப்பதால், அந்த அளவுக்கு மக்களின் வாங்கும் சக்தி மேலும் பாதிக்கப்படும் என்பதில் சந்தேகமில்லை. ஏற்கெனவே வாங்கும் சக்தி மக்களிடம் குறைந்திருப்பதால் தான் கைத்தறிக்கு இந்த இன்னல்கள் ஏற்பட்டிருக்கின்றன. எனவே மேற் கொண்டும் மக்களின் வாங்கும் சக்தியைக் குறைப்பதற்கு ஏதுவான நடவடிக்கைகள் எடுப்பது, கைத்தறிக்கு உதவுவது போன்று மேற் பார்வைக்குத் தோன்றினாலும், உண்மையில் கைத்தறிக்கு உதவி செய்வதாகாது.

**கைத்தறி** நெசவாளிகளைச் சீர்திருத்தி, கைத்தறித் துணியின் ஏற்றுமதி வியாபாரத்தையும் சீராக அமைப்பது அவசியம். யுத்த காலத்தில் அந்நிய நாடுகளில் துணிப்பஞ்சம் ஏற்பட்டதன் காரணமாக நம் நாட்டு மில் துணியும் கைத்தறித் துணியும் ஏராளமாக ஏற்றுமதி செய்யப்பட்டன. அதிக விலைகளும் கிடைத்தன. ஆனால் தற்போது நிலைமை மாறிவிட்டது. ஜப்பான் போன்ற நாடுகள் நம் ஏற்றுமதி வியாபாரத்துக்குப் போட்டியாக வந்துள்ளன. அதுமாத்திரமன்றி இந்தோனேஷியா போன்ற நாடுகள் நாணயச் செலாவணி சிக்கல்கள் காரணமாக, இறக்குமதிகளைக் கட்டுப் படுத்திவிட்டன. பர்மா போன்ற நாடுகள் தங்கள் உள்நாட்டுக் கைத்தறிகளையே ஊக்குவித்தும், அதிகரித்தும் உற்பத்தியைப் பெருக்குகின்றன. எனவே அங்கும் நம் நாட்டுச் சரக்குகள் முன்போல ஏற்றுமதி ஆவதில்லை.

கைத்தறித் துணி ஏற்றுமதி வியாபாரத்தில் மந்தம் ஏற்பட்டதற்கு மற்றொரு முக்கிய காரணமும் உண்டு. நம் நாட்டு ஏற்றுமதி கைத்தறித் துணியின் தரத்தைப் பற்றிப் புகார்கள் வருகின்றன. எந்த ரக சரக்குக்கு ஏற்றுமதி ஆர்டர் வந்ததோ அதற்கும் மட்ட ரகமான சரக்குகளை ஏற்றுமதி செய்வதாக அயல் நாட்டார் புகார் செய்கிறார்கள். சரியான தரமுள்ள சரக்குகளை அனுப்பாவிட்டால் அயல் நாட்டுச் சந்தைகளில் நம் தேசத்துச் சரக்குகளின் பெயர் கெட்டுவிடுகிறது; தங்கள் தேவைகளை வேறு நாட்டிலிருந்து இறக்குமதி செய்து கொள்ளுகிறார்கள். தாற்காலிக லாபத்தை உத்தேசித்து மட்டமான துணிகளை ஏற்றுமதி செய்வதால் நம் எதிர்கால ஏற்றுமதி வியாபாரம் பெரிதும் பாதிக்கப் படுகிறது. எனவே அயல் நாட்டுச் சந்தைகளில் நம் நாட்டுக் கைத்தறித் துணிகளின் பெயர் கெடாத வகையில் நல்ல தரங் கெடாத சரக்குகளையே ஏற்றுமதி செய்தல் வேண்டும். ஏற்றுமதித் துணிகளின் தரத்தைப் பரிசீலனை செய்து, அவைகள் அயல் நாட்டு ஆர்டரில் குறித்த தரமுடையனவா,' சரியானவைதானா என்று தகுந்த நம் அரசாங்க உத்தியோகஸ்தர்களைக் கொண்டு பரிசோதித்து ஏற்றுமதிக்கு அனுமதித்தல் சாலவும் உகந்தது. அயல் நாட்டுத் தேவைகளை அவ்வப்போது கவனித்து உடனுக்குடன் நம் அரசாங்கத்துக்குத் தகவல் கொடுத்து வரவேண்டியது நமது அயல் நாட்டு வர்த்தக ஸ்தானிகராலயங்களின் முக்கிய கடமையாகும்.

கைத்தறித் துணி மில் துணியைவிட விலை அதிகமானது என்று ஓர் தப்பபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறது. கைத்தறித் துணி மில் துணியைவிட அதிக நாள் உழைக்கும் என்பதை மனத்தில் எண்ணிப் பார்த்தால், கைத்தறித் துணி மில் துணியைவிட மலிவு என்பதில் சந்தேகமில்லை.

கைத்தறித்துணிக்கு, கலர்ச் சேலைகள், கரை போட்ட வேஷ்டிகள் போன்ற குறிப்பிட்ட ரகங்களை முழுவதும் ஒதுக்குவதன் மூலம், கைத்தறித் தொழிலை ஊக்குவித்துப் புனருத்தாரணம் செய்ய நமது மாபெருந் தலைவர் ராஜாஜி யோசனை கூறி யிருக்கிறார்கள். இதை நம் மத்திய அரசாங்கம் ஆலோசித்து ஆவன செய்தல் மிகவும் அவசியம்.


"யுத்தம் வரவே வராது என்கிறீர்களே, ஹைட்ரொஜன் குண்டைப் போட்டுப் பரிசீலனை பண்ணிக் கொண்டு இருக்கிறேன்?"
"யுத்தம் வரையிலும் வராது பல இடங்களில் பரிசோதனையிலேயே உலகம் தீர்ந்து போய் விடும்."
"ஏன் இப்படி எல்லோரும் குதிக்கிறீர்கள்?"
"ஹைட்ரொஜன் பாம் போட்டதிலே கடலில் மீன்கள் எல்லாம் இறந்து விட்டதாம்... அதனாலே 'காட் லிவர் ஆயில்' விலை ஏறிவிடும். அப்புறம் நீங்கள் வாங்க மாட்டீர்கள்."
தலைக்கு வந்தது?
அமெரிக்கா
உயிரைக் காப்பாற்றும் மருந்துகள் தயாரிப்பு
அமெரிக்கா
ஹைட்ரொஜன் பாம் தயாரிப்பு
"ஹைட்ரொஜன் குண்டாச்சு; நைட்ரொஜன் குண்டு வரப் போகிறதாமே!"
"நீங்க ஒண்ணு; அதெல்லாம் நம்பாதீங்க வெறும் குண்டா இருக்கும்."
"நான் சொல்வதை எழுதுங்கள்... எழுத்தெல்லாம் குண்டு குண்டா இருக்கணும் தெரியுமா?"
"ஹைட்ரொஜன் குண்டு மாதிரி இருந்தால் போதுமா; இல்லே நைட்ரொஜன் குண்டு மாதிரி இருக்கணுமா, சார்."
சாமா



சிறுவர்கள் சக்தியை
சீக்கிரமே செலவு
செய்கிருர்கள்
அவர்கள்

# புத்துணர்ச்சியைப் பெற

ஒரு தேக்கரண்டி க்ளுகோவிடா கொடுங்கள்.



உங்கள் குழந்தையின் ஒழுங்கான வளர்ச்சிக்கு அவன் வேலையிலும், விளையாட்டிலும் செலவு செய்யும் சக்தியைத் திரும்பப்பெற வேண்டும். அதற்காக அவன் ஒவ்வொரு தடவையும் பால் அல்லது பழரஸம் அருந்தும் பொழுது அத்துடன் ஒரு தேக்கரண்டி க்ளுகோவிடாசேர்த்துக் கொடுக்கவும். க்ளுகோவிடாவில் அடங்கியுள்ள டெக்ஸ்ட்ரோஸ், கால்ஷியம், பாஸ்பரஸ், விடமின் டி முதலான பொருட்கள் அவனுடைய சக்திக்கும். வளர்ச்சிக்கும் மிகவும் அவசியம்.




# க்ளுகோவிடா

உடலுக்குகந்த உணவு

**கார்ன் ப்ராடக்டஸ் கம்பெனி (இந்தியா) லிமிடெட்.**

தபால் பெட்டி நெ. 994, பம்பாய் 1  தபால் பெட்டி நெ. 982, கல்கத்தா 1

# நீங்கள் விரும்புவதெல்லாம்



நீங்கள் ஒரு காரில் விரும்பும் — அழகு, சிக்கனம், சுகம், திறமையான சேவை—யாவற்றையும் ஹிந்துஸ்தான் 14 அதிகமாக அளிக்கிறது. மேலும் விலை குறைவு.

கார் வாங்குவோருக்கு வழங்கப்படும் சரசமானதும் மிக கவர்ச்சியுமான விலை விபர நிபந்தனைகளை உங்களது அருகாமையிலுள்ள வியாபாரிகளை இன்றே கேளுங்கள்.

# ஹிந்துஸ்தான் 14

**அழகு**
கண்ணைப் பறிக்கும் வடிவம், நவநாகரிக அமைப்பு.

**சிக்கனம்**
காரின் கிரயம், அதன் பராமரிப்பு பெட்ரோல் செலவு எல்லாம் சிக்கனம்

**சுகம்**
குஷுகுஷு வென குஷன் ஆசனம் தாராள இடம் டபிள் ஷாக்-அப்ஸார்பர்

**உழைப்பு**
என்ஜின் உழைப்பும் அதன் வற்றாத சக்தியும் ஒரு பெரும் அற்புதம்

ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ், லிட்., கல்கத்தா

*கீழ்க்கண்ட இடங்களில் அதிகாரம் பெற்ற டீலர்கள் உள்ளனர்*

ஆமதாபாத்; அலஹாபாத்; அம்பாலா; பெங்களூர்; பம்பாய்; பாரேல்லி; கல்கத்தா; கட்டாக்; திப்ருகார்; இந்தூர்; ஜெய்பூர்; ஜோட்பூர்; ஜாம்ஷெட்பூர்; கான்பூர்; லக்னோ; மதராஸ்; மதுரை; நாகபுரி; நியூடெல்லி; பாட்னா; ராஜ்கோட்; செகந்திராபாத் (டெக்கான்); தேஜ்பூர்; திருவனந்தபுரம்; ரங்கூன்; கொழும்பு.




## அத்தியாயம் 85

# சிற்பத்தின் உட்பொருள்

சேந்தன் அமுதனாகிய மதுராந்தகத் தேவர், தம்மைத் திருவயிறு சுமந்து பெற்ற அன்னை செம்பியன் மா தேவியைப் பார்த்து, "அம்மா! இந்த உலகில் யுத்தப் பைத்தியம் பிடித்து அலைகிறவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். போர் செய்யாத நாள் எல்லாம் வீண் போன வெறும் நாளாகவே அவர்களுக்குத் தோன்றுகிறது. அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர்தான் என் நண்பர் வந்தியத் தேவரும் என் சகோதரர் பொன்னியின் செல்வரும். தாங்களோ, இறைவனைப் பற்றிப் பேசாத நாளெல்லாம் பிறவாத நாள் என்று கருதுகிறவர் ஆயிற்றே? தாங்களும் போர்த் தொழிலை ஆதரித்துப் பேசுவது மிக மிக ஆச்சரியமா யிருக்கிறது. அதன் காரணத்தை எங்களுக்கு விளக்கமாய்ச் சொல்ல வேண்டும்!" என்றார்.

அப்போது செம்பியன்மா தேவி "என் அருமை மகனே! வேறு யார் போர்த் தொழிலை இகழ்ந்து பேசினாலும் நீ பேசக் கூடாது; பூங்குழலியும் பேசலாகாது. வல்லத்து அரசர் போர்த் தொழிலிலும் வல்லவரா யிருப்பதினாலே யல்லவா நீ இன்று உயிரோடிருந்து இறைவனைத் துதிக்கும் பாடல்களை என் உள்ளமும் உடலும் உருகப் பாடுகிறாய்?" என்றார்.

"தாயே! நான் தங்கள் அருமைப் புதல்வரின் உயிரைக் காப்பாற்றியது இருக்கட்டும். அவரும் அவரைக் கரம் பிடித்த தங்கள் மருமகளும் என் உயிரைக் காப்பாற்றியதை நான் மறக்க முடியாது. பூங்குழலி அம்மையாரின் போர்க் குணம் அல்லவோ நான் இன்று உயிரோடிருப்பதற்குக் காரணமாயிருக்கிறது?" என்றான் வந்தியத்தேவன்.

"பரமேசுவரனும் துர்க்கா பரமேசுவரியும் நம் எல்லாரையும் காப்பாற்றுகிறார்கள்! அவர்களுடைய கருணை இல்லாவிட்டால், நாம் ஒருவரை யொருவர் காப்பாற்றுவது ஏது?" என்றார் மதுராந்தகத் தேவர்.

"குழந்தாய்! கருணையே வடிவமான சிவபெருமானும் பலமுறை போர் செய்ய நேர்ந்தது. அன்பும் அருளும் சாந்தமும் உருக் கொண்ட ஜகன் மாதாவான துர்க்கா பரமேசுவரியும் யுத்தம் செய்வது அவசியமாயிற்று. இந்தப் புண்ணிய ஸ்தலத்திலுள்ள ஆலயத்தில் அம்பிகை அறம் வளர்த்த நாயகியாக வீற்றிருக்கிறாள். ஆயினும், ஆலயத்தின் திருச்சுற்று வீதியில் மகிஷாசுர மர்த்தனியாகவும் தரிசனம் தருகிறாள். நீ கவனித்தாயல்லவா?" என்றார்.

"ஆம், அன்னையே! கவனித்து வியந்தேன். அண்ட சராசரங்களை ஈன்றெடுத்துக் காக்கும் அன்னை ஓர் எருமை மாட்டின் தலை மீது எதற்காக நின்று காட்சி அளிக்கிறாள் என்று எண்ணி அதிசயித்தேன்!" என்றார் மதுராந்தகர்.

"ஆம், ஆம்! இந்த ஆலயத்தில் உள்ள தேவி, மகிஷாசுரனை வதம் செய்து முடித்து விட்டாள். அதனால் எருமையின் தலையில் நிற்கும் தேவியின் திருமுகத்தில் அன்பும் அருளும் குடிகொண்டிருக்கக் காண்கிறோம். மாமல்லபுரத்துக் குகைச் சிற்பங்களிலே தேவி மகிஷா

சுரனுடன் போரிடுவது போல் அமைந்த சிற்பம் ஒன்று இருக்கிறது. அங்கே துர்க்கா பரமேசுவரி வீர பயங்கர ரணபத்திர காளியாகத் தரிசனம் தருகிருள். சகலலோக மாதாவாகிய துர்க்கா பரமேசுவரி கேவலம் ஓர் எருமை மாட்டுடன் ஏன் சண்டை போட வேண்டும், அதற்கு இவ்வளவு ஆர்ப்பாட்டம் வேண்டுமா என்று வெளிப் படையாகப் பார்ப்பவர்களுக்குத் தோன்றக் கூடும். என் அருமைக் குமாரா! நம் பெரியோர்களின் உள்ளத்தில் உதயமான இத்தகைய நிகழ்ச்சிகளுக்கெல்லாம் உட்பொருள்கள் இருக்கின்றன. அவற்றை அறிந்து கொள்வதற்குத் தக்க பரிபக்குவம் வேண்டும்; அறிந்து கொள்ள வேண்டுமென்னும் சிரத்தையும் வேண்டும்!''



''தேவி! எங்களுக்கெல்லாம் பரிபக்குவம் இருக்கிறதோ, என்னமோ, தெரியாது! ஆனால் சிரத்தை இருக்கிறது. தாங்கள் திருவாய் மலர்ந்தருளும் வார்த்தை ஒவ்வொன்றையும் சிரத்தையுடன் கேட்டுக் கொண்டிருக்கிறோம்! ஏன்? நமது வல்லத்து அரசருடைய ஓயாமற் சலிக்கும் கண்கள் கூட வல்லவா தங்களையே பார்த்துக் கொண்டிருக்கின்றன?'' என்றாள் அருள்மொழி.

இந்த வார்த்தைகள் அங்கே சிறிது கலகலப்பை உண்டாக்கின. வந்தியத்தேவன் அடிக்கடி இளைய பிராட்டியின் திரு முகத்தை நோக்குவதையே அருள்மொழிவர்மர் குறிப்பிடுகிறார் என்று அறிந்து கொண்ட பெண்மணிகள் இலேசாக நகைத்தார்கள்.

செம்பியன்மாதேவி கூறினார்: ''சிரத்தையுடன் கேட்பதானால் சொல்கிறேன், கேளுங்கள். நமது புராண இதிகாசங்களில் தேவாசுர யுத்தங்களைப் பற்றி நிரம்பக் கூறியிருக்கிறார்கள். இவ்வுலகில் திருமால் அவதாரம் எடுத்து ராட்சதர்களோடு சண்டையிட்டது பற்றியும் சொல்லியிருக்கிறார்கள். இறைவன் உலகத்தைப் படைத்த காலத்திலிருந்து தேவ சக்திகளும் அசுர சக்திகளும் போரிட்டு வருகின்றன. அசுர சக்திகளை இறைவன் ஏன் படைத்தார் என்று கேட்டால், அதற்குச் சிற்றறிவு படைத்த நம்மால் விடை சொல்ல முடியாது. இறைவனுடைய திருவிளையாடல் அது என்றுதான் கூற முடியும். தெய்வ சக்திகளும் அசுர சக்திகளும் ஓயாமல் போராடி வருகின்றன என்பது மட்டும் நிச்சயம். சில சமயம் அசுர சக்திகளின் கை மேலோங்குவது போல் காணப் படுகின்றன. அவையே உலகை என்றென்றைக்கும் ஆளும் என்றும் தோன்றுகின்றது. சூரபத்மனும், இரணியனும், இராவணனும் எத்தனை பல்லாயிரம் ஆண்டுகள் ஆட்சி புரிந்தார்கள்! ஆனாலும் அவர்களுக்கெல்லாம் ஒரு நொடிப் பொழுதில் முடிவு வந்து விட்டது!''

''ஆம், ஆம்! தேவர்களையெல்லாம் அடி பணிந்து குற்றேவல் புரிய வைத்த தசகண்ட இராவணனுக்கு முடிவு வந்த போது, இரண்டு மனிதர்களும் ஒரு சில வானரங்களும் சேர்ந்து அவனைக் குலத்தோடு நாசமாக்கி விட வில்லையா?'' என்றார் மதுராந்தகத் தேவர்.

''ஆகையால் அசுர சக்திகள் மேலோங்குவதைக் கண்டு மாந்தர்கள் மனச்சோர்வு அடைந்து விடக் கூடாது. தெய்வ சக்திகள் முடிவில் வெற்றி கொள்ளும் என்று நம்பித் தர்மத்திலும் சத்தியத்திலும் நின்று போராட வேண்டும். அப்படிப் போராடுகிறவர்களுக்குத் தெய்வமும் நிச்சயம் துணை செய்யும்!''

''அன்னையே! மகிஷாசுரனைப் பற்றிச் சொல்ல வந்தீர்கள்!'' என்று பூங்குழலி ஞாபகப் படுத்தினாள்.

''ஆம்; நல்ல வேளையாக ஞாபகப் படுத்தினாய், மகளே! அசுர சக்திகள் இரண்டு வகையானவை. ஒன்று, மௌடீக அசுர சக்திகள். இன்னொன்று, மதி நுட்பம் வாய்ந்த அசுர சக்திகள். மௌடீக அசுர சக்தியையே மகிஷாசுரனாக நமது முன்னோர்கள் உருவகப் படுத்தினார்கள். காட்டெருமைக்கு வெறி வந்து தெறி கெட்டு ஓடுவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? அப்போது அந்த

எருமை யானையை விட அதிக பலம் பெற்று விடுகிறது. தன் எதிர்ப்பட்ட பிராணிகள் எல்லாவற்றையும் சின்னா பின்னப் படுத்தி விடுகிறது. மௌடீகமும் வெறி கொண்ட காட்டு எருமையைப் போல் வலிமை கொண்டது. மௌடீகம் சில சமயம் சிங்காதனத்தில் அமர்ந்து ஆட்சி நடத்தத் தொடங்கி விடுகிறது. இதைத்தான் மகிஷாசுரனுடைய ஆட்சி என்று நம் முன்னோர்கள் சொன்னார்கள். மகிஷாசுரன் தேவலோகச் சிங்காதனத்தில் அமர்ந்து ஆட்சி செலுத்தத் தொடங்கிய போது, மூன்று உலகங்களிலும் அல்லோல கல்லோல மூண்டாயிற்று. அறிவு வேண்டாம், அறிவு நூல்கள் வேண்டாம், அறிவுக் கலைகள் வேண்டாம், இசை வேண்டாம், சிற்பம், சித்திரம், கோயில் கோபுரம் ஒன்றும் வேண்டாம்,—எல்லாவற்றையும் அழித்துப் போடுங்கள் என்று மகிஷாசுரன் கட்டளையிட்டான். தேவர்கள் முனிவர்கள் மனிதர்கள் எல்லாரும் நடு நடுங்கினார்கள். அவர்களில் பலர் மகிஷாசுரனுக்கு அடி பணிந்து அவனுடைய ஆட்சியை ஒப்புக் கொண்டார்கள். இதனால் மகிஷாசுரனுடைய அகந்தையும் மூர்க்கத்தனமும் அதிகமாயின. மௌடீகத்தோடு அகந்தையும் மூர்க்கத்தனமும் சேர்ந்து விட்டால் கேட்க வேண்டுமா? மகிஷாசுரனுடைய கொடுமையைப் பொறுக்க முடியாமல் மூன்று உலகங்களிலும் மக்கள் ஓலமிட்டார்கள். அசுரர்களுங் கூடச் சேர்ந்து அலறினார்கள். துர்க்கா பரமேசுவரி அப்போது கண் திறந்தாள். மாகாளி வடிவங் கொண்டு வந்து மகிஷாசுரனை வதஞ் செய்தாள். மௌடீக சக்தியைத் தெய்வீக சக்தி வென்றது. மூன்று உலகங்களும் மௌடீக அடிமைத் தளையிலிருந்து விடுதலை பெற்றன. தேவர்களும் முனிவர்களும் மனிதர்களும் அசுரர்களுங் கூடப் பெருமூச்சு விட்டுத் துர்க்கா பரமேசுவரியை வாழ்த்தி வணங்கினார்கள். குழந்தைகளே! இப்போதுங் கூட இவ்வுலகில் மௌடீக அசுர சக்திகள் இல்லாமற் போகவில்லை. இந்தப் புண்ணிய பரத கண்டத்தின் வட மேற்கு திசைக்கு அப்பால் மௌடீக அசுர சக்திகள் சில தோன்றியிருப்பதாகச் சொல்லுகிறார்கள். அவர்கள் மூர்க்காவேசத்துடன் போர் புரிந்து நகரங்களைச் சூறையாடிக் குற்றமற்ற மக்களைக் கொன்று கோயில்களையும் விக்கிரகங்களையும் உடைத்துத் தகர்த்து நாசமாக்குகிறார்களாம். அவர்களைத் தடுத்து நிறுத்தக் கூடிய பெரிய சக்கரவர்த்திகள் இப்போது வடநாட்டில் யாரும் இல்லையாம்! இந்தத் தெய்வத் தமிழ்நாட்டுக்கு அத்தகைய கதி நேராதிருக்கட்டும். அப்படி நேர்வதாயிருந்தால், வீர மறக்குலத்தில் பிறந்த நீங்கள் அந்த அசுர சக்திகளுடன் போராடச் சித்தமாயிருக்க வேண்டுமல்லவா?"

"கட்டாயம் சித்தமாயிருப்போம், தாயே! மற்றொரு வகை அசுர சக்திகளைப் பற்றியும் சொல்லுங்கள்!" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"மற்றொரு வகை அசுரர்கள் அறிவுக் கூர்மையுள்ளவர்கள். அந்த அறிவைக் கெட்ட காரியங்களில் பயன் படுத்துகிறவர்கள். அவர்கள் தவம் செய்து வரம் பெறுவார்கள். அதையும் துஷ்ட காரியங்களுக்கே பயன் படுத்துவார்கள். திரிபுரர்கள் என்ன செய்தார்கள்? ஒவ்வொருவரும் ஒரு உலகத்தையே உண்டாக்கிக் கொண்டார்கள். வானத்தில் பறந்து சென்று நாடு நகரங்களின் மீது இறங்கி நிர்மூலமாக்கினார்கள். சூரபத்மன் எத்தனை தடவை அவனுடைய தலையைக் கொய்தாலும் புதிய தலை அடையும் ஆற்றலைப் பெற்றிருந்தான். இராவணன், இந்திரஜித்து முதலிய ராட்சதர்கள் வானத்தில் மேகங்களில் மறைந்து கொண்டு கீழே உள்ளவர்கள் மீது அஸ்திரங்களைப் பொழியும் சக்தி பெற்றிருந்தார்கள். இத்தகைய சூழ்ச்சித் திறமை வாய்ந்த அசுர சக்திகளையே 'முயலகன்' என்னும் அசுரனாக நம் முன்னோர்கள் உருவகப்படுத்தியிருக்கிறார்கள். இறைவன் ஆனந்த நடனம் புரியும் போதெல்லாம் தம்முடைய காலடியில் அடக்கி வைத்திருக்கும் முயலகன் மீதும் சிறிது ஞாபகம் வைத்துக் கொள்ளுகிறார். கொஞ்சம் கவனக் குறைவாயிருந்தால் முயலகன் கிளம்பி விடுவான். சிருஷ்டியின் ஆரம்ப





காலத்தில்! இருந்து அசுர சக்திகளுடன் தெய்வீக சக்திகள் போராடி வருகின்றன என்பதையே முயலகன் நமக்குத் தெரியப் படுத்துகிறான்! ஆகையால், என் அருமை மக்களே! யுத்தமே கூடாது என்று நாம் எப்படிச் சொல்லி விட முடியும்!''

''தேவி! இதுவரையில் எங்களுக்கு விளங்காமலிருந்த பல விஷயங்களை இன்று தெரிந்து கொண்டோம். எங்களுக்கு என்ன கட்டளை இடுகிறீர்கள்?'' என்று பொன்னியின் செல்வர் கேட்டார்.

''குழந்தைகளே! நீங்கள் எப்போதும் தெய்விகசக்திகளின் பக்கம் நின்று போராடுங்கள் என்று மட்டுமே நான் சொல்ல முடியும். உங்களுக்குக் கட்டளையிட முடியாது. உங்களுடைய அந்தராத்மாதான் உங்களுக்குக் கட்டளை யிட முடியும். அந்தக் கட்டளையைக் கேட்டு நடவுங்கள். சற்று முன்னால், இந்தச்செந்தமிழ் நாட்டைச் சுற்றி யுள்ள கடல்களில் கப்பல் கொள்ளைக்காரர்கள் மிகுந்து விட்டதாகச் சொன்னீர்கள். அதனால் தமிழ் நாட்டு வர்த்தகர்கள் பெரிதும் கஷ்ட நஷ்டங்களை அடைவதாகவும் கூறினீர்கள். அந்தக் கொள்ளைக்

காரர்களை ஒழித்து நம் நாட்டு வர்த்தகர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பது இராஜ குலத்தில் பிறந்த உங்கள் தர்மம். இன்று கடல் கொள்ளைக்காரர்களுக்கு இடங் கொடுத்து விட்டால், நாளைக்கு அவர்கள் இந்தத் தெய்வத் தமிழ் நாட்டிற்குள்ளேயும் பிரவேசித்து விட மாட்டார்களா? இன்று கைலாச வாசியாகிச் சிவபெருமானுடைய சந்நிதியில் சிவ கணங்களுடன் வீற்றிருக்கும் என் கணவர் ஜீவிய வந்தரா யிருந்தால், அவரும் உங்களுக்கு இதைத் தான் சொல்லி யிருப்பார்!''

''தேவி! தங்கள் திரு உள்ளத்தை அறிந்து கொண்டோம். அதன்படியே நடந்து கொள்வோம்!'' என்றார் இளவரசர் அருள்மொழி வர்மர்.

''பொன்னியின் செல்வ! நீ என்னுடைய விருப்பத்தை மதித்து நடப்பதாயிருந்தால், இன்னும் ஒன்றும் இப்பொழுது சொல்ல விரும்புகிறேன்!'' என்றார் அந்தப் பெரு மூதாட்டியார்.

''தேவி! தங்கள் விருப்பத்துக்கு மாறாக இது வரை நான் நடந்ததாக நினைவில்லையே? அப்படி ஏதேனும் செய்திருந்தால் மன்னியுங்கள்!''

''குழந்தாய்! இதற்கு முன்னால் நீ நடந்து கொண்டதெல்லாம் வேறு; இனி மேல் நடக்கப் போவது வேறு. இது வரையில் நீ அரண்மனையின் செல்லக் குழந்தையாக இருந்தாய். உன் விருப்பம் போல் நாங்கள் நடந்தோம்; எங்கள் விருப்பத்தை நீயும் நிறைவேற்றி வைத்தாய். இனி, நீ இந்த மாநிலத்தை ஆளும் மன்னர் மன்னன் ஆகப் போகிறாய். முடிசூட்டு விழா நடந்த பிறகு, உன் விருப்பத்தின்படிதான் நாங்கள் எல்லாரும் நடந்து கொள்ள வேண்டும்.''



"தாயே! அப்படிச் சொல்ல வேண்டாம். இனியும் நான் உங்கள் செல்லக் குழந்தையாகவே இருந்து வருவேன். உங்கள் விருப்பப்படியே நடப்பேன்."

"அப்படியானால், இதைக் கேள்! இந்தப் புராதனமான சோழர் குலம் வாழையடி வாழையாகத் தளிர்த்து வளர வேண்டும். இராஜ குலத்தில் பிறந்தவர்கள் எப்போதும் வீர சொர்க்கம் அடையத் தயாராயிருக்க வேண்டியது தான். ஆனால் குலம் வளர்வதற்கும் முன் ஜாக்கிரதையாக ஏற்பாடு செய்ய வேண்டும். உன் தமையன் ஆதித்த கரிகாலன் கலியாணம் செய்து கொள்ளாமலே காலமாகி விட்டான். சோழ குலம் தழைப்பதற்கு நீ ஒருவன்தான் இருக்கிறாய்! ஆகையால் நீ மறுபடியும் கப்பலேறிக் கடல் கடந்து வெற்றித் திருமகளைத் தேடிப் போவதற்கு முன்னால் குலந் தழைப்பதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்ய வேண்டும். உன் மகுடாபிஷேகத்தோடு சேர்த்துத் திருமணத்தையும் வைத்துக் கொள். வானதியைப் போன்ற பெண்ணை மனைவியாகப் பெற நீ எவ்வளவோ தவம் செய்திருக்க வேண்டும். இந்தப் பெண்ணரசியின் மாங்கலிய பலம் நீ போகுமிடமெல்லாம் மந்திரக் கவசம் போலிருந்து உன்னைப் பாதுகாக்கும்!"

"தேவி! அந்தக் கவசத்தை அணிய நான் சித்தமாகத் தானிருக்கிறேன். வானதிதான் மறுதளிக்கிறாள். 'சிங்காதனம் ஏறமாட்டேன்; சபதம் செய்திருக்கிறேன்' என்று பிடிவாதம் பிடிக்கிறாள்!" என்றார் இளவரசர்.

யாரும் எதிர்பாராத விதமாகப் பூங்குழலி அப்போது தலையிட்டு, "கொடும்பாளூர் இளவரசியின் பேச்சை அப்படியே நம்பி விடவேண்டாம். நாமெல்லாரும் சேர்ந்து மேலும் உபசாரம் செய்ய வேண்டும் என்று எண்ணுகிறாள். பொன்னியின் செல்வர் இன்னும் கொஞ்சம் கெஞ்சிக் கேட்க வேண்டும்!" என்று சொல்லி நகைத்தாள். அது வேடிக்கைப் பேச்சு என்று எண்ணி மற்றவர்களும் சிரித்தார்கள். ஆனால் வானதி மட்டும் விம்மி விம்மி அழத் தொடங்கினாள்.

"அசட்டுப் பெண்ணே! இது என்ன? எதற்காக நீ இப்படி விம்மி அழுகிறாய்?" என்று குந்தவை கேட்டு விட்டு, வானதியின் கரத்தைப் பிடித்து அழைத்துக் கொண்டு கீழே போனாள்.

## அத்தியாயம் 86

# "கனவா? நனவா?"

மறு நாள் காலையில் செம்பியன்மாதேவியும் மதுராந்தகரும் பூங்குழலியும் தஞ்சைக்குப் புறப்பட்டார்கள்.

பொன்னியின் செல்வரும் வந்தியத்தேவரும் உறையூருக்கும் ஸ்ரீரங்கத்துக்கும் போய்வர எண்ணியிருந்தார்கள். போகும்போது கரிகாலச் சோழர் காலத்தில் காவேரி நதியின் நீரைத் தேக்குவதற்காகக் கட்டப்பட்ட பேரணையை வந்தியத் தேவனுக்குக் காட்டுவதாக அருள்மொழிவர்மர் கூறியிருந்தார்.

அவர்கள் புறப்படுவதற்கு முன்னால் பொன்னியின் செல்வர் குந்தவை தேவியிடம் விடை பெற்றுக் கொள்ளுவதற்காகச் சென்றார்.

"அக்கா! தாங்கள் பழையாறைக்கு அவசியம் போகவேண்டுமா?" என்றார்.

"தம்பி! நீங்கள் உறையூருக்கு அவசியம் போக வேண்டுமா? எங்களுடன் பழையாறைக்கு வரக் கூடாதா?" என்று கேட்டாள்.

"இல்லை, அக்கா! உறையூரில் ஆழ்வார்க்கடியானை முக்கியமான காரியத்துக்காகச் சந்திப்பதாகச் சொல்லியிருக்கிறோம்......" என்று சொன்னார்.

"ஆகா! நீ முன்மாதிரி இல்லை, தம்பி! உன் மனசு மிகவும் கெட்டுப் போய் விட்டது. என்னை நீ இலட்சியம் செய்வதே இல்லை. இந்த மாறுதலுக்குக் காரணம் அந்த வல்லத்து அரசரின் சிநேகந்தான் என்று கருதுகிறேன்......"

"வீணாக அவர் பேரில் பழியைப் போடாதீர்கள்! எனக்குப் பிராயம் வந்துவிடவில்லையா, அக்கா! ஒரு பெரிய இராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக முடி சூட்டிக் கொள்ளப் போகிறேன். இனிமேலாவது என் இஷ்டப்படி நான் நடந்து கொள்ள வேண்டாமா?"

"நன்றாக உன் இஷ்டப்படி நடந்து கொள்! உன்னுடைய அதிகாரத்தை என்பேரில் காட்டாமலிருந்தால் சரி. உன் இஷ்டப்படி நான் நடக்க வேண்டுமென்று சொல்லாமலிருந்தால் சரி."

"மகுடாபிஷேகத்துக்கு மட்டும் வந்து விடுங்கள். அப்புறம் உங்கள் இஷ்டப்படி நடந்து கொள்ளுங்கள்."

"மகுடாபிஷேகத்துக்குப் பிறகு வேண்டுமானால் நீ என்பேரில் அதிகாரம் செலுத்தலாம். அதுவரை என்னைக் கட்டாயப்படுத்த உனக்கு என்ன உரிமை?"

"அப்படியானால், நீங்கள் மகுடாபிஷேகத்துக்கு வரப்போவதில்லையா?"

"அது வானதியின் விருப்பம். அவள் போக வேண்டுமென்றால் நானும் வருவேன். இல்லாவிட்டால் வரமாட்டேன்."

"அந்தப் பெண் எங்கே அக்கா!"

"உன் அன்னை பொன்னி நதிக்குப் பூஜை செய்யப் போயிருக்கிறாள். உனக்கு நல்ல புத்தியைக் கொடுத்து அருள வேண்டுமென்று பிரார்த்தனை செய்யப் போயிருக்கிறாள்."

இளவரசர் சிரித்து விட்டு, "அவளுடைய பிரார்த்தனை நிறைவேறட்டும்; நான் புறப்படுகிறேன்" என்றார்.

"தம்பி! உன்னைப் போல் குரூரமானவனை நான் பார்த்ததே இல்லை. வானதி இரவெல்லாம் தூங்கவே இல்லை; நினைத்து நினைத்து விம்மிக் கொண்டிருந்தாள். காவேரிப் படித் துறைக்குச் சென்று அவளிடம் விடை பெற்றுக் கொண்டு போ!" என்றாள் குந்தவை.

"அவள் தூங்காதது மட்டும் என்ன? என் தூக்கத்தையும் அவள்தான் பறித்துக் கொண்டு விட்டாள் போலிருக்கிறது. ஒருவர் மனத்தை ஒருவர் அறிந்து நடந்து கொள்ளத் தெரியாவிட்டால் விம்மி அழுது கொண்டிருக்க வேண்டியதுதான். இப்படிப்பட்ட பெண்ணைக் கட்டிக் கொண்டு வாழ்நாளெல்லாம் நான் கஷ்டப்பட வேண்டுமென்கிறீர்கள்!" என்று பொன்னியின் செல்வர் சொல்லிவிட்டு, அந்த அரண்மனையின் பின்புறம் விரைந்து சென்றார். தோட்டத்தைத் தாண்டியதும் பொன்னி நதியின் படித் துறையில் வானதி அமர்ந்திருப்பதையும், பக்கத்திலிருந்த தட்டிலிருந்து மலர்களை எடுத்துப் பொன்னி நதியின் வெள்ளத்தில் ஒவ்வொன்றாகப் போட்டுக் கொண்டிருப்பதையும் பார்த்தார்.

**வா**னதி அவ்விதம் அர்ச்சனை செய்து கொண்டிராவிட்டால், அவள் அந்தக் காவேரித் துறையில் அமைக்கப்பட்ட ஒரு பெண்ணின் பொற் சிலையாகவே தோன்றியிருப்பாள்.

பொன்னியின் செல்வர் சத்தமிடாமல் சென்று வானதிக்குப் பின்னால் மேற்படி ஒன்றில் உட்கார்ந்து கொண்டார்.

வானதிக்கு யாரோ வருகிறார்கள் என்பது தெரிந்துதானிருக்க வேண்டும். உள்ளுணர்வினால் அவர் பொன்னியின் செல்வர்தான் என்று தெரிந்து கொண்டாள் போலும். ஆகையால் திரும்பிப் பாராமல் அர்ச்சனை செய்வதையும் நிறுத்திவிட்டுச் சும்மா இருந்தாள்.

தட்டிலிருந்த மலர்களின் இதழ்களில் பனித் துளிகள் இரண்டொன்று காணப்பட்டன. வானதியின் கண் மலரின் இதழ்களிலும் முத்துப்போன்ற இரண்டு கண்ணீர்த் துளிகள் பிரகாசித்தன.

உதய சூரியனின் பசும் பொற் கிரணங்கள் பொன்னி நதியின் மெல்லிய அலைகளோடு கூடிக் குலாவியபோது, சோழ சாம்ராஜ்ய மங்கை தங்க ரேகைகள் ஊடுருவிப் படர்ந்த நீலப் பட்டுச் சேலையை உத்தரீயமாக அணிந்து விளங்குவது போலத் தோன்றியது. அந்த நீலப் பட்டுச் சேலையின் இருபுறங்களிலும் அமைந்த பச்சை வர்ணப் பட்டுக் கரையைப்போல நதியின் இரு புறங்களிலும் செழித்து வளர்ந்திருந்த பசும் சோலைகள் காட்சி தந்தன.

காவேரியின் பிரவாகம் இசைத்த இனிய சுருதிக்கு இணங்க இருபுறத்துச் சோலைகளிலும் பலவகைப் புள்ளினங்கள் மங்கள கீதங்கள் பாடி வாழ்த்தின.

கற்பனை உலகிலே சஞ்சரித்துப் பகற் கனவு காண்பதற்கு இடமும் நேரமும் சூழ்நிலையும் மிக வாய்ப்பாக இருந்தன.

இளவரசர் சிறிது மௌனமாயிருந்து பார்த்துவிட்டு, "வானதி! பகற் கனவு காண்கிறாயா? நான் உன் கனவைக் கலைத்து விட்டேனா?" என்றார்.

"நான் பகற்கனவுதான் காண்கிறேன், ஐயா! ஆனால் என் கனவைத் தாங்கள் எப்படிக் கலைக்க முடியும்? இரவிலே நான் கனவு கண்டாலும் பகலிலே நான் கனவு கண்டாலும், அக்கனவிலே நடு நாயகமாக விளங்குகிறவர் தாங்கள் தானே? ஆகையாலேயே தங்களைப் பக்கத்திலே பார்க்கும்போது, 'இது கனவா? நனவா?' என்று எனக்குச் சந்தேகம் தோன்றிவிடுகிறது. 'வாருங்கள்!' என்று அழைக்கவும் இயலாமற் போகிறது. ஆம், சுவாமி! எத்தனையோ நாள் எத்தனையோ விதமான பகற் கனவு கண்டிருக்கிறேன். தங்களை முதன் முதலில் திருநல்லம் அரண்மனைத் தோட்டத்தில் நான் சந்தித்தபோது, தங்களை யானைப் பாகன் என்று நினைத்தேன். தாங்கள் சாதாரண யானைப் பாகனாகவே இருக்கக் கூடாதா என்று பின்னர் பலதடவை நான் எண்ணியதுண்டு. தாங்கள் வெறும் யானைப் பாகனாயிருந்து என்னைத் தங்கள் பின்னால் யானையின்மீது ஏற்றிச் சென்ற

தாகப் பலமுறை கற்பனையில் கண்டு களித்தேன். அப்போதெல்லாம் இந்த உலகத்தைச் சேர்ந்த சாதாரண கரிய யானையின்மேல் ஏறிப் போவதாக எனக்குத் தோன்றுவதில்லை. தேவலோகத்தில் உள்ள ஐராவதம் என்னும் வெள்ளை யானையின் பேரில் நான் ஏறிச் செல்வதாகத் தோன்றும். தாங்களே தேவேந்திரன் என்றும் நான் இந்திராணி என்றும் எண்ணிக் கொள்வேன்......''

''அப்படியானால் இப்போது.........'' என்று பொன்னியின் செல்வர் குறுக்கிட்டுப் பேச முயன்றதை வானதி தடுத்துத் தொடர்ந்து கூறினாள்:—

''கொஞ்சம் பொறுங்கள், அரசே! தேவேந்திரன் இந்திராணி என்ற கற்பனையை உடனே மாற்றிக் கொள்வேன். தேவேந்திரனுக்கும், இந்திராணிக்கும் நிம்மதி ஏது? அவர்கள் இருவரும் தனியாக ஐராவதத்தில் ஏறி ஆனந்தப் பிரயாணம் செய்வதற்கு அவகாசம் ஏது? தேவர்களும் தேவிகளும் புடைசூழவல்லவா எப்பொழுதும் கொலுவிருக்க வேண்டும்? ஆகையால் அந்த எண்ணத்தை உடனே மாற்றிக் கொள்வேன். அரசர் குலத்தில் பிறந்தவளாயில்லாமல் கடற்கரையில் வாழும் படகுக்காரர் குடும்பத்தில் நான் பிறந்திருக்கக் கூடாதா என்று எண்ணிக் கொள்வேன்.''

''தெரிகிறது, வானதி! எனக்குத் தெரிகிறது! பூங்குழலியைப் பார்த்து நீ பொறாமைப் படுகிறாய்!''

''ஆம், அது உண்மைதான்! இந்த உலகத்திலேயே பூங்குழலி தேவியைப் பார்த்துத்தான் நான் பொறாமைப் படுகிறேன். அவருடைய மனோரதம் நிறைவேறி விட்டது. அவரும் அவருடைய காதலரும் கோடிக் கரைக்குப் போய் அலை கடலில் படகு செலுத்தியும் குழகர் கோவிலில் சேவை செய்தும் ஆனந்த வாழ்க்கை நடத்தப் போகிறார்கள். அவர் ஏன் என்னைப் பார்த்துச் சிரிக்க மாட்டார்? சிரிக்கத்தான் சிரிப்பார்! ஐயா! வேறு எந்த விதமாக வேணும் என்னைத் தண்டியுங்கள். பூங்குழலி தேவி என்னைப் பார்த்துச் சிரிக்கும்படி மட்டும் செய்யாதிர்கள்!...''

முன்னாள் இரவு நடந்ததைப் பொன்னியின் செல்வர் நினைவு கூர்ந்து கூறினார்:-

''வானதி! கொஞ்சம் பொறுத்துக் கொண்டிரு! நேற்று பூங்குழலி உன்னைப் பார்த்துச் சிரித்தாள் அல்லவா? அவளைப் பார்த்து நீ சிரிக்கும் காலம் வரும்!''

''சுவாமி! நான் பூங்குழலி தேவியைப் பார்த்துச் சிரிக்க விரும்பவில்லை வேறு யாரைப் பார்த்தும் சிரிக்கவும் விரும்பவில்லை. யார் வேண்டுமானாலும் என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு போகட்டும். தங்களுடைய பொன் முகத்தில் சில சமயம் புன்னகையைக் காண்பதற்குத்தான் ஆசைப் படுகிறேன். மற்றவர்களைப் பார்க்கும் போதும் பேசும் போதும் தங்கள் முகம் மலர்ந்திருக்கிறது. என்னைப் பார்க்கும் போது மட்டும் தங்கள் புருவங்கள் நெரிகின்றன. இப்போதுகூடத் தங்களைப் பார்ப்பதற்கே எனக்குப் பயமாயிருக்கிறது...''

''வானதி! இதைக் கேள்! உன்னைப் பார்த்ததும் என் முகம் சுருங்குவதற்குக் காரணம் இருக்கிறது. மற்றவர்களால் எனக்கு எவ்வித இடையூறும் இல்லை; அவர்களால் என் மன நிம்மதி குலைவதில்லை. உன்னால் என் உள்ளம் அமைதியை இழக்கிறது. நேற்றிரவு நீ தூங்கவில்லையென்று என் தமக்கை யார் கூறினார். நானும் தூங்கவில்லை, வானதி! பல தினங்களாகவே தூங்குவதில்லை. அரண்மனை மேல் மாடத்தில் படுத்து ஆகாசத்து நட்சத்திரங்களைப் பார்த்தேனானால், உன் கண்களின் ஒளியைத் தான் அந்த விண்மீன்கள் எனக்கு ஞாபகப் படுத்துகின்றன. சோலை மரங்கள் காற்றில் அசைந்தாடி இலைகள் சலசலவென்று சப்திக்கும் போது, நீ உன் இனிய குரலில் கல கலவென்று சிரிக்கும் ஒலியைத்தான் கேட்கிறேன். மிருதுவான தென்றல் காற்று என் தேகத்தில் படும்போது நீ உன் காந்தள் மலர்களை யொத்த விரல்களால் என்னைத் தொடுவதாக எண்ணிப் பரவச மடைகிறேன். வானதி! இப்படி யெல்லாம் உன் நினைவு என்னை ஆட்கொண்டிருப்பதால், உன்னை நேருக்கு நேர் பார்க்கும் போது என் முகம் சுருங்குகிறது; புருவங்கள் நெரிகின்றன. என் வாழ்க்கையில் நான் சாதனை செய்ய விரும்பும் காரியங்களுக் கெல்லாம் நீ தடங்கலாகி விடுவாயோ என்று அஞ்சுகிறேன்......''

''சுவாமி! அந்த பயம் தங்களுக்கு வேண்டாம்! தங்கள் காரியங்களுக்கு நான் தடையாக இருக்க மாட்டேன்...''

''நீ தடையாக இருக்க மாட்டாய்; யாருமே தடையாக இருக்க முடியாது! மாரிகாலத்தில் கீழ்த்திசையிலிருந்து புயல் கொண்டு வரும் கருமேகத் திரளை நீ பார்த்திருக்கிறாயா, வானதி! அந்த மேகத் திரளில் மழை நீர் நிறைந்திருக்கிறது. மின்னல்களும் இடிகளும் அம்மேகத்தில் மறைந்திருக்கின்றன. சண்டமாருதம் அந்த மழை நிறைந்த கொண்டலைத் தள்ளிக் கொண்டு வருகிறது. அதை

யாராவது தடுத்து நிறுத்த முடியுமா? அந்த மேகங்களின் நிலையில் நான் இருக்கிறேன், வானதி! என் உடம்பில் எப்போதும் ஒரு பர பரப்பு இருந்து கொண்டிருக்கிறது. என் உள்ளத்தில் ஏதோ ஒரு வேகம் இருந்து கொண்டிருக்கிறது. கண்ணுக்குத் தெரியாத மின்னல்கள் மின்னுகின்றன; காதில் கேட்காத இடி முழக்கங்கள் ஒலிக்கின்றன. புயல்களும் சூறைக் காற்றுகளும் சண்டமாருதங்களும் என்னை அழைக்கின்றன. ஏழு கடல்களிலும் மலை மலையாக அலைகள் கிளம்பி என்னை வரவேற்கின்றன. ஆயிரமாயிரம் சங்கங்களின் நாதமும், முரசுகளின் முழக்கமும், போர் யானைகளின் பிளிறல்களும் என்னைக் கவர்ந்து இழுக்கின்றன. என்னை யாரும் தடுக்க முடியாது, வானதி! ஆனால் தடுக்க முயன்று எனக்கு மன அமைதி இல்லாமல் செய்ய முடியும்......''

''சுவாமி! அவ்வாறு நான் ஒரு நாளும் செய்ய மாட்டேன்; தடை செய்ய முயலவும் மாட்டேன். மூன்று உலகையும் ஆளப் பிறந்த தங்களுக்கு உதவி செய்ய முடியா விட்டாலும் இடையூறாக இருக்க மாட்டேன். ஆகையினாலேதான் தங்கள் அருகில் சோழ சிங்காதனத்தில் உட்காரவும் மறுதளிக்கிறேன்.''

''வானதி! சோழர் குலச் சிங்காதனம் மகிமையில் பெரியதானாலும், அளவிலே சிறியது. அதில் ஒருவர்தான் அமர முடியும். சக்கரவர்த்திக்குப் பக்கத்தில் வேறொரு சிங்காதனம் அமைத்து அதில் தான் சக்கரவர்த்தினி அமர வேண்டும்.''

''சுவாமி! எனக்குத் தாங்கள் அமரும் சிங்காதனத்திலும் இடம் வேண்டாம். தங்கள் அருகில் தனிச் சிங்காதனத்திலும் இடம் வேண்டாம். தங்களுடைய பட்ட மகிஷியாகச் சிங்காதனத்தில் அமர்ந்திருக்கப் புண்ணியம் செய்தவளுக்கு அந்தப் பாக்கியம் கிடைக்கட்டும். தங்களுடைய நெஞ்சகமாகிய சிங்காதனத்திலே எனக்குச் சிறிது இடங் கொடுத்தீர்களானால், அதுவே ஏழு ஜன்மங்களில் நான் செய்த தவத்தின் பயன் என்று கருதிப் பூரிப்பு அடைவேன்!''

''வானதி! என்னால் சுலபமாகக் கொடுக்க முடிந்ததை நீ கேட்டாய். என்னுடைய நெஞ்சமாகிய சிங்காதனத்தில் நீ ஏற்கனவே இடம் தயார் செய்து கொண்டு விட்டாய்! அதை நான் உனக்குத் தருவதில் எவ்விதத் தடையுமில்லை! இந்தப் பெரிய சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினியாக உண்மையிலேயே நீ விரும்பவில்லையா, வானதி! கண்டோர் கண்கள் கூசும்படி ஜொலிக்கும் நவரத்தினங்கள் பதித்த பொற் கிரீடத்தை உன் சிரசில் சூட்டிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை உனக்கு இல்லையா?''

''அந்த ஆசை எனக்குச் சிறிதும் இல்லை! சோழ குலத்துப் புராதன மணி மகுடங்களை நான் பார்த்திருக்கிறேன். கையில் எடுத்தும் பார்த்திருக்கிறேன். அவற்றில் ஒன்றை என் தலையில் வைத்துக் கொண்டால், அதன் கனம் என் தலையை அமுக்கிக் கழுத்தை நெறித்து மூச்சுவிடத் திணறும்படி செய்துவிடும் என்று அஞ்சுகிறேன். அவ்வளவு வலிமை என் உடலில் இல்லை; அவ்வளவு தைரியம் என் மனத்திலும் இல்லை. சுவாமி! நவரத்தினங்கள் இழைத்த மணி மகுடத்தைச் சுமக்க வலிமையும் தைரியமும் உள்ளவர்கள் அதைச் சுமக்கட்டும். தாங்கள் கடல் கடந்த நாடுகளுக்குப் பிரயாணம் புறப்படுவதற்கு முன்னால், எனக்கு வேறொரு பரிசு கொடுத்து விட்டுப் போங்கள். அரண்மனை நந்தவனத்திலிருந்து அழகான மலர்களைப் பறித்துத் தொடுத்து மாலை கட்டித் தருகிறேன். என்னால் எளிதில் சுமக்கக் கூடிய அந்த மாலையை என் கழுத்தில் சூட்டி என்னைத் தங்கள் அடிமையாக்கிக் கொண்டு விட்டுப் புறப்படுங்கள்!...''

''சீன வர்த்தகர்களிடமிருந்து நவரத்தின மாலையை உனக்குப் பட்டாபிஷேகப் பரிசாகக் கொண்டு வந்தேன்.''

''தங்கள் பட்டாபிஷேகத்துக்கு எனக்குப் பரிசு எதற்கு?''

''சரி; வேண்டாம்! இதை வேறு யாருக்காவது கொடுத்து விடுகிறேன். வானதி! நீயும் நானும் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்வோம். நான் புறப்படுவதற்கு முன்னர் உன் விருப்பத்தின்படி உனக்கு ஒரு மாலை சூட்டி விட்டுப் போகிறேன். நான் சூட்டும் அந்த மண மாலைக்குப் பதிலாக நான் ஒவ்வொரு தடவை அயல் நாடுகளிலிருந்து திரும்பி வரும் போதும் நீ ஒவ்வொரு பூமாலையுடன் காத்திருக்க வேண்டும். கடல் கடந்து தூர தூர தேசங்களுக்கெல்லாம் சென்று புலிக் கொடியை நாட்டி விட்டு வெற்றி முழக்கத்துடன் நான் திரும்பி வரும்போதெல்லாம் நீ ஒரு வெற்றி மாலையுடன் எனக்காகக் காத்திருக்க வேண்டும்'' என்றார் இளவரசர்.

''ஒரு மாலை என்ன? நூறு நூறு மாலைகள் தொடுத்து வைத்துக் கொண்டு காத்திருப்பேன். இந்தத் தேச மக்கள் எல்லாரும் காத்திருப்பார்கள்!'' என்றாள் இளவரசி வானதி.

(தொடரும்)

---

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.

**REGD. NO. M. 4392**

*Registered as a newspaper in ceylon*